# ஸ்ரீராமபிரானுக்கு துளசிதாசரின் விண்ணப்பம்

இந்தி மூலம் துளசிதாசரின் 'வினயபத்ரிகா' எனும் நூல்
தமிழ் உரைநடையில்

எஸ். பி. ராஜகுமாரி பி.ஏ., பி.எல.

ரங்கநாயகி பதிப்பகம்
41/1, முத்துகிராமணி தெரு,
மைலாப்பூர், சென்னை-4.
தொலைபேசி : 74964

ஸ்ரீ ராமபிரானுக்கு
துளசிதாசரின் விண்ணப்பம்


Title — SRI RAMAPIRANUKKU THULASIDASARIN VINNAPPAM.

Author — S P. RAJAKUMARI B.A ,B L ,

Edition — First

Publication — February 1990

Copy Right — Author

Price Rs 32






THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF TIRUMALA TIRUPATI DEVASTHANAM UNDER THIER SCHEME AID TO PUBLISH RELIGIOUS BOOKS

Printers ·
M/s Maruthi Press.
173, Peters Road,
Madras-14

# காணிக்கை

மொழிபெயர்ப்புககு இந்நூலை தேர்ந்தெடுக்க முதற்காரணமாக இருந்த— தனனலமற்ற தூய உள்ளம கொண்ட— எனது சீனியா அட்வகேட் அமரர் திரு. **V.P. டீகாராமன்** அவர்களுக்கு இந்நூலை என் அன்பின் காணிக்கையாக சமாபிககிறேன.

**ஆசிரியா**

ஆசிஅருளிய நடமாடும் தெய்வங்களாம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளாகிய ஸ்ரீ ஜகத்குரு சந்திரசேகரேந்திர சுவாமிகள், ஸ்ரீ ஜகத்குரு ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள், ஸ்ரீ ஜகத்குரு சங்கர விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் மூவருக்கும் எனது பணிவான வணக்கத்தைச் சமாப்பிக்கிறேன்.

**ஆசிரியா**

திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் அருளிய

## சாற்றுக்கவி

### நேரிசை வெண்பா

துளசி தாசரின் தூய விண்ணப்பம்
வளமாய் தமிழில் வரைநதார்—உளமார்ந்த
கோல இராஜ குமாரி இதைக் கறறோா
சீலமுடன் வாழவாா செழிதது.

அன்பன,
**கிருபானந்தவாரி**
19-1-90

மயிலை குருஜி சுந்தரராம் சுவாமிகள்

குருதேவ் தாம ஸ்தாபனம்
ஜெயராம் விலாஸ்
235, ராமகிருஷ்ண மடம் சாலை
மயிலாப்பூர், சென்னை-600 004.
6.1.90

## வாழ்த்துரை

இந்த உலகத்தைப் படைத்த ஆண்டவன் பஞ்சபூதங்களை எல்லா ஜீவாத்மாக்களுக்கும் தகுந்த நிலையிலே பயன்படுத்தும்படியாக செயல்படுத்தி வருகிறார். சிற்சில சமயங்களில் ஆண்டவனால் கொடுக்கப்பட்ட பகுத்தறிவு அகங்காரத்தின் அளவற்ற நிலையினால் மனிதகுலம் மாறுபட்டு செயல்பட ஆரம்பித்துவிடுகிறது. அதற்கு அடிப்படைத் தத்துவம் அளவற்ற ஆசையினால்தான். தெய்வீக சிந்தனை கொண்டு பக்தியின் பரவசத்தால் தன்னைப் படைத்த ஆண்டவனை மனமார தியானித்து வணங்க தான் செய்த அக்ரமங்களை போக்கிக்கொள்ள பகுதி என்ற ஒரேஒரு உண்மையான வழியைக் கொண்டு நல்லதெல்லாம் பெற்றுவிடலாம் என்று திட்டமிட்டு தியானித்த எத்தனையோ தாசர்கள் இருந்திருக்கிறார்கள்; இப்பொழுதும், மானசீகமாக இருக்கிறார்கள் ஒரு சிலருக்கே தன் பிறவியின் பயனால தெய்வீக ஞானம் தன் பக்திப் பரவசத்தை ஆண்டவனிடத்தில் அளவற்ற வகையிலே அர்ப்பணம் செய்து நல்லதோர் நிலையில இருந்துகொண்டு இருக்கிறார்கள் அப்போபபட்ட தன்னை மறந்து எல்லாவற்றையும் துறந்து, சதாகாலமும் தெய்வீக அவதார சிததாந்தத்தைப் பலவாறு புகழ்ந்து அந்தந்த தெய்வத்திற்குத் தகுந்தவாறு மெய்மமறந்து சமர்ப்பிப்ப தென்றால் மிக மிக சாதாரண விஷயம் அல்ல. அப்படி அக்காலத்தில் சமர்ப்பித்த மெய்ஞ்ஞான வித்தகர்களுடைய வேதாந்த சிகரங்களின் ஒளிவிளக்கின் அருள் ஜோதிப் பிரகாசத்தில் வாழும் நமக்கு சற்றாகிலும் உணர்ந்து தெளிவு பெறுவது என்றால், அதுவும் சாதாரண விஷயம் அல்ல. அப்படி நாம தெளிவு பெற்றாலும் மிக எளிய நடையிலே,

எல்லோரும் புரிந்துகொள்ளும் வகையிலே, சாதாரண ஆத்மீக இலக்கியம் கொண்ட பொறுப்பிலே மேலும் பலருக்கு இக்காலத்திலே சுருக்கி எழுதி பத்தியைப் பெருக்கி வாழ்வதற்கு வழிகாட்டியாக ஜன்மம் எடுப்பதென்றால் அவரவர் செய்த பூஜாபலன் மாத்திரம் அல்ல, மூதாதைகள் செய்த சுத்தப் பரப்பிரம்ம பக்தி தியாக வெள்ளத்தின் பயன்தான் என்று சொன்னால் மாத்திரம் மிகையாகாது

இவ்வளவு முன்னோட்டம் கூறிய காரணம், தெய்வீக சக்திய சாக்ஷிதனை எடுத்துக்காட்டாக இப் புத்தகத்தில் எழுதியுள்ள துளசிதாசா ஸ்ரீராமபிரானைப் பற்றியும் அவர் நடந்து நமக்கெல்லாம் காட்டிய நல்லவழி பற்றியும் தான் உள்ளுணர்வுடன் அறிந்த தெய்வீக ஞானத்தால் பெற்ற பாக்கியம் எல்லாவிதமான கர்மாசாரங்களினால் தெய்வமே கூட இந்த லோகத்திலே சாதாரண மனிதனைப்போல பிறந்து வாழ்ந்து பற்பல வேதனைகளுக்கு ஆளாகியும் எடுத்துக்காட்டாக உண்மையான கர்மயோகியாக உள்ள ஸ்ரீராமபிரான் சொல்லாமல் சொல்லி அருளியது என்ன வென்றால், "இருந்தும் இல்லாமல் இரு" என்கிற மூன்று வார்த்தைகளின் தாத்பரியத்தை இதைக அளவற்ற வகையிலே, அமைதிகொண்ட பொறுப்பிலே ஆதமசாந்தி பெறும் வாய்ப்பிலே சமாப்பணம் செய்திருக்கிறார்கள் என்றால் மானசீக பக்திப் பரவசம் இக்காலத்தில் ஏற்பட்டிருப்பதனால் தான. செல்வி. S P ராஜகுமாரி B.A , B.L தமது தெய்வீக விவேகத்தைக் கொண்டு இந்த இளம வயதிலே இக் காலத்துப போக்குக்கு ஏற்றவாறு, (ராம ஜெனம பூமி கொண்டாடும் காலத்திலே) அந்த ஆண்டவனே இவர்களுக்கு மானசீகக் குருவாகத் திகழ்ந்து அனுக்கிரகம செய்திருக்கிறார்கள் என்பது, இப் புத்தகத்தை புததுணர்ச்சியுடன், மிக சாந்தமாக, தகுந்தநேரம் உள்ள சுத்த சதயவேளையிலே படிக்கப் படிக்க, தானாகவே ஒவவொருவருக்கும் தெய்வீக ஞானம சற்றேனும தயங்காது, பறபல விந்தையான விகற்பமற்ற சாத்மீக உணர்வுகளை ஊட்டிக

கொடுக்கும் வல்லமை பெற்றது இத்தனைக் கருத்துள்ள இந்தப் புத்தகத்தை சில மாதங்களுக்கு முன்பு (தன கரத்தாலே எழுதிய புத்தகத்தை) இவளிடம் கொடுத்த காலத்திலே என் குருநாதராகிய வள்ளிமலை தங்கால் ஆஸ்ரமம் மௌன குருவின் கடாட்சத்தை கொண்டு யானும் படித்த காலத்திலே மேலே குறிப்பிட்டுள்ள அத்தனை வார்த்தைகளும் உண்மையாகவே என உள்ளத்திலே மானசீகமாக புதையல் போலிருந்தது குருகடாட்சத்தைக் கொண்டு ஆசீர்வதித்த காலத்திலே, காருண்யக் கலிகாலக் கடவுளாக விளங்கக்கூடிய சப்தகிரிவாசன திருக்கோயில் சந்நதியின் உத்தரவு பேரில இந்த அம்மையார், இந்த அரிய பெரிய செயலை இககாலத்தில பலரும பயன் படுவதற்காக மானசீகத தத்துவார்த்தமாக புத்தகங்களை அச்சிட்டு வெளியிடுவதற்கு ரூபாய பத்தாயிரம் அந்தக கமிட்டியார் உதவுகிறார்கள் என்றால—(பேரீச்சு இல்லாமல்) இதனை தெய்வமே அங்கீகரிக்கிறது என்பதுதான சத்யம்.

ஆகையால, பஞ்ச பூதங்களும, தெய்வங்களும், ஞானிகளும், மகா சித்தர்களும், சுத்த சத்திய நோக்கை கொண்ட பெரியோர்களும் இக காலத்திலும், எக்காலத்திலும் இந்த எழுத்தாளர் செல்வி S.P. ராஜகுமாரி அவர்கள் இதுடன வளமபெற்று வாழ்வதுடன மேலும் பற்பல தெய்வீக கருத்துக்கள் கொண்ட, இக காலத்துக்கு ஏற்றவாறு, நல்லதோர் வேதாந்த, சித்தாந்த புத்தகங்களை வெளியிடுதல் வேண்டுமென்று என குரு கடாட்சத்தையும தெய்வ கடாட்சத்தையும நம்பி ஆசீர்வதிக்க எல்லோரையும் வேண்டிக் கேட்டுக்கொள்வதுடன், அவர்களுக்கு உதவிய அத்தனை சுத்த ஆத்மாக்களுக்கும், அவ்விதமே என உள்ளுணர்வுடனே ஆசீர்வதிக்கிறேன

மயிலை குருஜி சுந்தரராம் ஸ்வாமிஜீ

ஸ்ரீராமஜயம

தர்மப்ரவசன ரத்னம, பிரவசன ரதனாகர
பண்டிதரவதம்ஸ அமிருதவார்வாஷீ
மஞ்சக்குடி
**K. ராஜகோபால சாஸ்திரிகள்**

## வாழ்த்துரை

ஸ்ரீ ராமாவதாரம செயதது மனுவின் வழிநடககும மனுஷ்ய ஸமுதாயததை நலவழியில் நடககச செய்யவே என்பது அறிவாளிகள் கணட உணமை. அந்த நல்வழியில நடந்தால் இஙகும அஙகும பரம ஸுகம என்ற ஜீவன முகதியும விதேஹமுகதியும அடையலாம். ஒவ்வொரு ஆன்மாவும இங்கு ஜீவாத்மாவாக இருக்கும்போதும ஆனந்த நிலையும அவித்யை எனறு அஞ்ஞான இருள போகும நிலை உணடாவதுடன் விவேஹ முக்தி என்ற சாசவத முகதியையும் அடையலாம. இதற்கு காம, பக்தி, ஞானம என்ற மூனறு ஸாதனங்கள இருந்தும பகதி என்ற ஸாதனம மிகவும ஸுலபமானது அது காமாவுடன சேரும ஞானததுடனும சேரும. நடுவே இருப்பதால் பக்தியே முதனமையான முகயமான முகதி ஸாதனம். இதை துளஸீதாஸா என்ற மஹாத்மா ராமரையே பரபிரும்மமாக ஸகுணோபாஸனம செய்து, ஸ்ரீ ராமசரித மானஸம என்ற பாஷா சுரந்தமாக ஸ்ரீ ராம உபாஸனததைச் கொணட மதமே உணடு பண்ணினார் அவர் செய்த பேருபகாரம ஸ்ரீ ராமசந்திர மூர்ததியை உலகு நன்றாக தெரிந்து பக்தி செய்தது அதனால் ஸ்ரீ ராமநாமா உலகுக்கு தாரகமநதிரமானது. இதை ஸதா ஸமரணம செய்தும் பஜனை செயதும பாபம விலகின பரம பக்தியினால முக்தியை அடைந்தார்கள. ரா என்றாலே வாய்திறககிறது. ம என்றால மூடிக்கொளகிறது வாய். ஏன? இப்படிச செய்கிறது என்பதை மஹானகள கூறுவார்கள

"ராசபதோசசா ரணாதேவமுகான நிராமாதி பாதகா
புன ப்ரவேசபீதயா சமகாரஸ்து கவாட வத" ||

ரா, என்றதும வாயதிறநததும பாபம உடன் உள்ளே இருந்து போய்விடுகிறது மறுபடியும அநதப பாபம திருமப வாய்க்குள வநதுவிடுமோ எனறு பயந்து ம எனற எழுததை சொன்னதும் வாய் மூடிககொளகிறது. எனனே? அழகான சொல் இததகைய பெருமைவாய்நத ஆனந்தராமனை துளஸீதாஸர் "வினயபததிரிகா" எனற அத்புதஸ்ருஷ்டியில ஸ்ரீ ராமரிடம 279 விணணப்பம் செய்கிறார். உள்ளததைக தொட்டு பாபபதுடன இலலாமல இந்த விணணப்பம நம் உள்ளத்தில் குடியேறி நாமே துளஸீதாஸராக ஆகிவிடுவோம ஹிநதி தெரியாதே என்று ஏஙகவேணடாம ஹிநதி பாஷை யின சுவைகுறையாமல அதிருசியாக திருநிறைச செலவி. அட்வகேட S.P. ராஜகுமாரி தனது உள்ளததில பெருக கெடுதது பரவாஹமாகத தோனறிய ராமபகதியினால, மிகமிக அழகாக ஒவவொரு பததடின அர்த்தரஸத்துடன சுந்திரத்தமிழில மொழி பெயர்த்து ரமணீயமாகச் செய்திருக கிறாரகள இந்த ராமபகதி சிகாமணிககு ராமபகத ஸமூஹம நன்றி செலுத்த கடமைப்பட்டுளளது இது சீககிரம வெளிவந்து ராமபகதிஸாமராஜயம தோனற ஸ்ரீஸீதாராமச சந்திரமூர்த்தியை வேணடுகிறேன.

K. ராஜகோபால சாஸ்திரிகள்

Plot No. 392, 28வது தெரு,
வேது செக்டர், K.K. நகர,
சென்னை-600 078
போன் 422991

Justice. M SRINIVASAN No 10, Ramaswami Street,
T Nagar, Madras-600 017.

8-5-89



# அணிந்துரை

சில நூற்றாண்டுகளுக்கு முன் நம் பாரத நாட்டில் வாழ்ந்துவந்த பக்த கவிகளில் ஒருவரான கோஸ்வாமி துள்சிதாஸ் ஸ்ரீ வால்மீகி முனிவரின் மறு அவதாரம் என்று கூறுவர் அவர் பிறக்கும்பொழுது அழவில்லை, 'ராம' என்ற சொல்தான் அவர் வாயினின்று வெளிவந்தது என்றும் கூறுவர். அவர் வாழ்க்கை வரலாறு பலவிதமாகக் கூறப்படுகிறது. அது நமக்குத் தேவையில்லை அவர் இயற்றிய "இராமசரிதமானஸ்" புகழ்பெற்று விளங்குகிறது அவர் இராமபிரானுக்கு விடுத்த வேண்டுகோள் "வினய பத்ரிகா" என்ற நூலாக உருப் பெற்றது. இராமபிரானே தன்னுடைய முத்திரையை அதன்மேல் பதித்து அதை ஏற்றுக் கொண்டதாக கடைசி பாடலில் கூறுகிறார்

பகவானிடத்தில் பக்தி செய்வதை ஒன்பது விதமாகச் செய்யலாம் என்று ஒரு பாகுபாடு உண்டு

1. பகவத் குணங்களைப் பற்றிக் கேட்பது
2. பகவத் குணங்களைப்பற்றிப் பாடுதல்.
3. பகவானைப்பற்றியே நினைப்பது.
4. பகவானுடைய பாதங்களில் கைங்கரியம் செய்வது.

5. பகவானைக் குறித்து அர்ச்சனை செய்வது;
6. பகவானை வணங்கிக் கொண்டே இருப்பது,
7. பகவானுக்கு அடிமையாக இருப்பது,
8. பகவானுக்கு நண்பனாக இருத்தல,
9. பகவானிடத்தில் தன்னையே அர்ப்பணித்துக் கொள்ளுதல.

இதில் இரண்டாவதாகக் கூறப்பட்ட முறைதான் துளசிதாசரால் கையாளப்பட்டிருக்கிறது. இந்த முறையில் பகுதி செய்பவர்கள் மட்டுமில்லாமல அந்தப் பாடல்களைக் கேட்பவர்களும் பலன் அடைகிறார்கள்.

ஸ்ரீ இராமனே பரப்ரம்மம், எங்கும் நிறைந்து இருப்பவன் என்று நிலைநாட்டும் கோஷ்டியில் ஸ்ரீ துளசிதாஸ முதன்மையாக நிற்கிறார். பல பாடல்களில அதை வலியுறுத்துகிறார். அதிலும் இராமநாமமே எல்லாப் பலன்களையும் அளிக்க வல்லது என்று அறுதியிட்டுக் கூறுகிறார். ஒரு பாடலில் கூறுகிறார் "கடப்பதற்கரிதான இப் பிறவிப் பெருங்கடலைக் கடப்பதற்கு இராம நாமமே தோணியாகும். இராமநாம ஜபம் என்ற சாதனையினால்தான சகல சௌபாக்யங்களையும் அடையமுடியும். நல்லவரானாலும், கெட்டவரானாலும், குடிசையில இருந்தாலும் மாடியில் இருந்தாலும் இறுதியில் இராம நாமத்தினால் மட்டுமே காரியம் கைகூடும். இராமநாமத்தை விடுத்து வேறிடத்தில நம்பிக்கை வைத்திருப்பவன் எதிரில பரிமாறப்பட்டிருக்கும் உணவை விட்டு வேறு அன்னத்தை எதிர்பார்க்கும் மூடனைப் போன்றவன் ஆவான்."

அவ்வாறே இந் நூல முழுவதும் இராமனின் பெருமையும் இராமநாமத்தின வலிமையும பரக்கப் பேசப்படுகின்றன. சில பாடல்களில தன்னையோ தன் மனத்தையோ விளித்து அறிவுரை கூறுகிறார். பல பாடல்களில இராமபிரானிடம் நேரில் பேசுவது போலப் பேசுகிறார். துளசிதாஸர் பக்தர்

களுக்குள்ளே சிறந்த கவி என்றும் கவிகளுக்குள்ளே சிறந்த பக்தர் என்று கூறலாம்.

ஒரு நூலை அதை இயற்றியவர் அல்லாது வேறு ஒருவர் மாற்று மொழியில் மொழி பெயர்க்க வேண்டுமானால் அது சுலபமான வேலை அல்ல. வெறுமனே சொற்களை மொழி பெயர்த்து எழுதினால் அது உயிரற்ற உடலுக்கு ஈடாக விளங்கும். மொழி பெயர்ப்பவர் நூலை இயற்றியவரின் இதயத்துள்ளே புகுந்து அவருடைய மனதில் இருந்த கருத்தை அறிந்துகொள்ள வேண்டும். இயற்றியவரின் இடத்திலே தன்னை அமர்த்திக் கொண்டு அவர் எந்தக் கருத்தை வெளியிட விரும்பினார் என்று கண்டுபிடித்து அதற்குத் தகுந்த சொற்களைப் பயன்படுத்த வேண்டும்

செல்வி. இராஜகுமாரி மேற்கூறிய முறையைக் கையாண்டிருக்கிறார் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் மூல நூலில் உள்ள எண்ண ஓட்டங்கள் வெகு அழகாகவும் தெளிவாகவும் மொழி பெயர்ப்பில் இடம் பெற்றிருக்கின்றன. இந்த மொழி பெயர்ப்பு மூல நூலின் உண்மையான பிரதிபலிப்பு என்று திண்ணமாகக் கூறலாம். இந்த மொழிபெயர்ப்பு நூல் ஒவ்வொரு தமிழ்மகனின் இல்லத்திலும் குடியிருக்க வேண்டியது அவசியம்.

மா. ஸ்ரீநிவாசன்

**டாக்டர் இ. சுந்தரமூர்த்தி** கே 1 பொறியியற கலலூரிக குடியிருப்பு
எம்.ஏ, பிஎச் டி, டிப், மானிடவியல கிண்டி, சென்னை 600 025.

தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக கழகம
சென்னை 600 005

நாள 22-12-89

# அணிந்துரை

அருளாளா இறைவனை உளம உருகிப்பாடும இயலபினா நினைந்தும நெகிழ்ந்தும உணாந்தும் பாடும அவர் தம மொழிகளில உருக்கம் இழையோடும. உருகிப்பாடும உளளத்தினர்க்கு எநத மொழியும ஏற்ற மொழியேயாகும். காதலால் கசிநது உருகும் அன்பாதம நினைவு உலகம புரக்கும உயர்ந்த இறையருளையே நாடிநிற்கும, நினைந்து நெகிழும் அவர்க்கு எம் மதமும இசைவே, எம மொழியும இனியதே, எவ வுருவும ஏற்றதே அனைததும அருள வடிவாய்க காணும அவர்தம மொழிகளில கருஙகல்லும கரைநதுருகும அனறோ?

துளசிதாசா இராமபிரானை உளளநதோயநது வழிபாடு செயது அவாதம பெருமையை உலகிற்கு உணர்த்தியவா. இந்திய மககள் அனைவரும திருமாலின் வழிபாட்டில் உளளந் தோய்ந்தவா எனபது வரலாறு தென்னகததில கம்பநாடரும் வடபுலத்தில துளசிதாசரும இராமபிரானின எழிறகாவியத தைப படைதத பெருமக்களுள புகழ்பூததுப பொலிந்த வராவா. காலந்தோறும திருமாலின எழிற கோலத்தை அனைத்து மொழி அருளாளர்களும் நெஞ்சு நெக்குருகிப பாடியுள்ளனா. சமயப் பொதுமையாளரான வண்ணச்சரபம தண்டபாணி சுவாமிகளும் ‘திருமால ஆயிரம’ பாடிப போற்றியவர் எனபது கருததத்தககது.

துளசிதாசர் இராமபிரானுககு வேணடுகோள் விடுத்துப் பாடிய நூலே‘விநயபத்ரிகா’ எனபபடும இவ்வருள நூலாகும். இதனை ‘ஸ்ரீ இராமபிரானுககுத துளசிதாசரின் விண்ணப்பம்’

என ஓதி ஓதி உணாநது தமிழாககம செய்துள்ளாா வழககறிஞர் எஸ. பி. இராஜகுமாரி அவர்கள இயல்பாகவே இறையருளில நாட்டம் கொணட அவர் இராமபிரானிடத்து அளவிறநத பததியுடையவராகத் திகழகின்றாா. பன்மொழிப் புலமை வாயநத அவா இந நூலினை உரைநடை வடிவமாக்கி எளிய தமிழில் தநதுளள திறம பாராட்டிறகுரியதாகும். தமிழாக்கம் செய்யுமபோதும மூலநூல வெளிப்படுத்தும் பத்தியுணர்வும ஒலியமைப்பும குனறாதவாறு அமைத துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும

அனைததுத தெயவங்களையும போறறிவழிபாடாற்றும துளசிதாசர் ஆறறையும, தலஙகளையும போறறி வணங்கும தனமை நினைந்து மகிழ்தறகுரியதாகும். 'இப்படியன இநநிறத்தன இவன் இறைவன என்றெழுதிக்காட்ட வொண்ணா' தோறறத்தை உளமுருகிப்பாடுகின்றாா. திருமுறை தரும இறைவனின் பண்புணாவுகளைத் துளசிதாசர் பாடியுளள வேண்டுகோள பாடல்களிலும் காணமுடிகின்றது

'உளளம உடைமை உடைமை' எனறார் திருவளளுவா இராமபிரானை உள்ளததில் இருத்திக்கொண்டால் ஏறபடும உள்ளத்திண்மையைத துளசிதாசா உருவகித்துக கூறுவதை மொழியாககத்திலும அழகாகக் காட்டுவது நம்முள்ளத்தை யும் பிணிகின்றது எனக் கூறவும வேண்டுமோ? அம மொழி யாக்கம் வருமாறு

'நான இராமநாமமென்ற அழகிய சிநதாமணியை அடைந்துவிட்டேன. அதை உளளம் என்னும் கையி லிருநது கீழே நழுவவிடமாட்டேன். ஸ்ரீ ராமருடைய புனித அழகிய மாநிற உருவமென்ற உரைகல்லின்மீது எனது மனமெனனும பொனனை உரைப்பேன இதுவரை நான பிறர் வசமிருந்தேன. இதை அறிநத எனது ஐம்புலன களும என்னைக கணடு நகைத்துக் கொணடிருந்தன. ஆனால இப்போதோ நான எனவசமாகி இருப்பதால பிறர் சிரிக்கும்படியாக இருககமாட்டேன். ஏனெனில

தற்பொழுது ஐம்புலன்களுக்கும் மனத்திற்கும் நான் வசமாகவில்லை. எனவே அவை என்னைச் சிற்றின்பத்தின் பக்கம் இழுத்துச் செல்லமுடியாது. என் மனமென்னும் வண்டை இறைவன் திருவடி நிழலை நிச்சயம் அடையச் செய்வேன்' (105)

இங்ஙனம் நூலின் பல இடங்களில் மொழியாக்கத்தின் இயல்பான நடை புலப்படுவதைக் காணலாம். மொழியாக்க ஆசிரியரின் உள்ளத் தெளிவையும் அருளுணர்வையும் இவை நன்கு காட்டும்.

துளசிதாசரின் 'விநய பத்ரிகா' வினைத் தமிழ்கூறு நல்லுலகிற்கு அருங்கொடையாக வழங்கியிருக்கும் ஆசிரியரின் தொண்டு பாராட்டத்தக்கதாகும். செய்யுளின் இனிமையை உரைநடை வடிவத்திலும் வடித்துத் தந்திருக்கும் பாங்கு தனிச்சிறப்பாகும். எளிமையும் இனிமையும் வாய்ந்த நூலின் பாடுபொருள் தமிழ்ப் பத்திப் பனுவல்களோடு ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கது. ஆசிரியர் மேன்மேலும் இத்தகு பெரும்பணியை மேற்கொண்டு இருமொழியாளர்க்கும் இனிய படைப்புகளைத் தருவாராக! அருளும் ஆற்றலும் அமைந்து அவர்தம் முயற்சி மேன்மேலும் வெற்றி பெறுமாக!

அன்புடன்,

சென்னை
22-12-1989

**இ. சுந்தரமூர்த்தி**

**Dr. S. SUBRAMANIAN**
M.A. (Hindi, English, Sanskrit) Ph.D.,
Treasurer
D. B. Hindi Prachar Sabha, Madras

ஹிந்தி இலக்கிய வரலாற்றில் மிகச் சிறந்த கவிஞராகக் கருதப்படுகிறவர் துளசிதாஸ். பக்தி யெனும் சாற்றைப் பிழிந்து தெள்ளிய கவிதையாகப் படைப்பதில் ஈடு இணையற்றவராகக் கருதப்படுகிறவர். இராமனைத் தவிர வேறு ஒரு தெய்வத்தையும் நான் அறியேன் என்று இரவு பகலாய் இராமன்பால் காதல் கொண்டு கசிந்து கவிதை நல்கியவர் துளசியின் நறுமணமும் புனிதத் தன்மையும் இவரது கவிதைகளின் தனித்தன்மைகள் "விநய பத்ரிகா" இவர் எழுதிய நூல்களில், ராமசரித மானஸக்கு பிறகு சிறப்புத் தன்மையில் இரண்டாவதாக இடம்பெறும் நூலாகும். "தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்ற பரம்பரையில் என்று தன்னை இராமனுக்கு அடிமையென்று அர்ப்பணித்துக் கொண்டு அவர் எழுதிய பதங்கள்தான் "விநய பத்ரிகா" பிற மொழி நூல்களைத் தமிழில் கொண்டு வருவதின் மூலமாக நாம் தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு ஒரு சிறந்த பணிசெய்கின்றோம். "ஸ்ரீ ராமபிரானுக்கு துளஸிதாஸரின் விண்ணப்பம்" என்ற தலைப்பில் குமாரி எஸ். பி ராஜகுமாரி அவர்கள் "வினய பத்ரிகா"வை மொழி பெயர்த்துள்ளார்கள். துளஸிதாஸ ஒரு தனி சிறந்த கவிஞர். அவரது எழுத்துக்களில் மிளிரும் சிறப்புகளை மொழிபெயர்ப்பது என்பது எளிதானதல்ல. இதிகாச புராணங்களிலிருந்து மேற்கோள்கள் செவ்வனே மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. கவிதை நடையிலுள்ள மூலத்தை ராஜகுமாரி அவர்கள் உரைநடையில் மொழி பெயர்த்துள்ளார்கள்.

எளிய நடையின் காரணமாக துளஸிதாஸரால் கொடுக்கப்பட்டுள்ள உட்கதைகள் சிறந்த முறையில

கொடுக்கப்பட்டுள்ளன. எட்டிலிருந்து பதினாறு வரிகளில் உள்ள மூலக் கவிதைகளை மொழி பெயர்ப்பாளர் விரிவாகவே மொழி பெயர்த்துள்ளார். இதனால் மொழி பெயர்ப்பை படிக்கும் ஆனந்தத்தை சாட்டிலும் ஒரு மூல நூலை படிக்கும் ஆனந்தம் நமக்கு ஏற்படுகிறது தமிழ் மக்கள் "எப்பொருள் யார் யார் வாய் கேட்பினும் அப் பொருள் மெய்ப்பொருள் காண்தல் அறிவு" என்ற மனப்பாங்கை கொண்டவர்கள். இந்த நூலின் சிறப்பை ஒரு மத நூலாக இல்லாமல் ஒரு இலக்கிய நூலாக ஏற்று கொள்வார்கள் என்பதில் ஐயமில்லை.

*28-1-90*

S. SUBRAMANIAN

# முன்னுரை

பல வருடங்களுக்கு முன்பு ஒரு சிறுகதையை நான் எழுதி மைலாப்பூரில் வசித்துவந்த அமரா திரு. வி. ஆர் ராதா கிருஷ்ணன் (கிணற்றுத் தவளையாக இருந்த என்னை வெளி உலகுக்கு அறிமுகப்படுத்தியவர்) அவர்களிடம் கொடுத்தேன். அப்போது அங்கிருந்த மைதிலி என்ற தோழி அக் கதையைப் படித்துவிட்டு இது நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் நாங்கள் உனனிடம் பெரிதாக எதிர்பார்க்கிறோம் என்று கூறினாள். அன்றிலிருந்து நாம் எதையாவது பெரிதாக செய்யவேண்டும் என்ற எண்ணம என மனதின அடித்தளத் தில் பதிந்துவிட்டது.

நான கல்லூரியில் படிக்கும்போது கட்டுரைப் போட்டி யில வெற்றி பெற்றதால இந்தியாவின வடபகுதிக்குச செலலும் வாய்ப்பு கிடைத்தது. அதில் காசி நகரமும ஒன்று. சிறு வயது முதலே குளையில் எங்கள வீட்டிற்கு அருகிலிருந்த ஆஞ்சநேயர் கோவிலுக்கு சென்று வருவது வழக்கம் காசிக்குச் செலவதை அக கோவிலில் இருந்த 'தாத்தா' என்று எல்லோராலும அன்புடன் அழைக்கப பட்டுவந்த குருக்களிடம் பெருமையாக கூறினேன. அவரும என்னை உற்சாகப்படுத்தினார். மறுமுறை காசிக்குச சென்றபோதும் அவரிடம கூறினேன் அப்போதும பாராட்டினார். மூன்றாம முறையாக காசிக்குச் செல்வ தாக அவரிடம கூறியபோது இந்தச சிறுவயதில் இத்தனை முறை போகும வாய்ப்பு கிடைத்ததை அறிந்து அதிசயித தார் அப்போது "நீ தவறு செய்யாதவரை நீ எதை நினைததாலும் சாதிக்க முடியும நீ தவறு செய்தால அன்றே படுகுழியில் வீழ்ந்து விடுவாய்" என்று அழுத்தமாக கூறியது என் வாழ்நாளில் நான நேர்மைக்கும நீதிக்கும கட்டுப்பாட்டு நடக்க வழிகாட்டியது

எனது தாய்மொழி இந்தி. உடனே வடநாட்டின பகுதியைச சேர்ந்தவள் என்று ஆராய ஆரம்பித்து

விடாதீர்கள். எனக்குச் சொந்த ஊர் வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள திருப்பத்தூருக்கு அருகாமையில் உள்ள செங்குராம் பட்டறை என்ற கிராமம்தான். எங்கள் இனத்தவருக்கும் வடநாட்டிற்கும் தற்போது எந்த சம்பந்தமும் தொடர்பும் கிடையாது.

நான் சில நாள் ஹாஸ்டலில் தங்கி இருந்தேன் அப்போது கோர்ட்டுக்கு சென்று வந்த நேரம் போக பொழுதுபோக்குக்கு அதிக நேரம் இருந்தது. சிறு வயது முதலே சினிமாவுக்கோ, மற்றவர்களுடன் சேர்ந்து வேறு இடங்களுக்கோ போக பிடிக்காது. எனவே அத் தருணத்தை நல்ல காரியம் செய்ய பயன்படுத்தவேண்டும் என்று தோன்றியபோது எனது தோழி மைதிலி கூறியது ஞாபகத்திற்கு வந்தது. ஏதாவது நல்ல புத்தகம் ஒன்றை மொழி பெயர்ப்பு செய்யலாம் என்று முடிவு செய்தேன். அப்போது துளசிதாசர் எழுதிய ராமசரிதமானஸ என்ற இந்தி இராமாயணம்தான் மனதில் தோன்றியது இக் கருத்தை எனக்கு சீனியராக இருந்த அமரர் திரு. V. P டிகாராமன் அவர்களிடம் என் எண்ணத்தைக் கூறினேன். அவரும் "வயதில் சிறியவள் இவள் என்ன செய்யமுடியும்" என்று நினைக்காமல் உற்சாகப்படுத்தினார். நூல் நிலையத்திலிருந்து 'Petition to Ram' என்ற ஆங்கிலப் புத்தகத்தை எடுத்துக் கொடுத்து அதைப் படித்துபார்த்த பின்பு ஆரம்பிக்கும் படிகூறினார். அப் புத்தகத்தைப் படித்த பின்புதான் 'வினயபத்ரிகா' என்ற இந் நூல் இருப்பதை அறிந்தேன் தமிழில் இதை யாரும் மொழி பெயர்க்கவில்லை என்றறிந்து அதையே மொழி பெயர்க்க ஆரம்பித்தேன். மொழி பெயர்க்க ஆரம்பித்ததும் அதைச் சரிபார்ப்பதற்காக மைலாப்பூர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்திலுள்ள சுவாமி ராகவேஷானந்தரிடம் காட்டினேன். அவர் அதை சுவாமி கமலாத்மானந்தரிடம் காட்ட, அவர் என்னைப் பார்க்க வேண்டும் என்று கூறினாராம். மறுபடி நான் அங்கு சென்ற பொழுது சுவாமி கமலாத்மானந்தரிடம் நான் வந்திருப்பதாக சொல்லி அனுப்பினார். அலுவலகத்திற்கு வந்த அவர் உள்ளே நுழையாமலேயே வெளியில் நின்று பேசிக் கொண்டிருந்தார். பின்பு உள்ளே வரும்படி அழைத்து என்னை அறிமுகப்படுத்தியபோது "நான் இவரை எதிர்பார்க்கவில்லை. 50, 60 வயதுடைய பெரியவரைத்தான் எதிர்பார்த்தேன்' என்றார். மிகக மகிழ்ச்சி அடைந்த அவர் சிறு

சிறு பகுதிகளாக எழுதித் தரச் சொல்லி சில பகுதிகளை
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயத்தில் பிரசுரித்து உற்சாகம் அளித்த
தற்கு நன்றி கூற கடமைப்பட்டிருக்கிறேன்.

துளசிதாசர் என்றதுமே அனைவருக்கும் ஞாபகத்திற்கு
வருவது அவர் எழுதிய ராமசரிதமானஸ் என்ற இந்தி
இராமாயண நூல்தான். ஆனால் 'வினய பத்ரிகா' என்ற
நூலையும் அவர் நமக்கு அளித்திருக்கிறார் என்பதைத்
தென்னகத்தில் ஒரு சிலரே அறிந்திருப்பர் என்று நம்பு
கிறேன். ஏனெனில் இப் புத்தகத்தை மொழி பெயர்த்திருப்ப
தாக பலரிடம் நான் கூறிய போதும் இந்திமொழி
அறியாதவர் யாவரும் அப்படிப்பட்ட புத்தகத்தை நாங்கள்
அறிந்ததே இல்லை என்றுதான் கூறினர். வடமொழியில்
இப் புத்தகத்தை 5,60,000 பிரதிகள் அச்சிட்டிருக்கிறார்கள்
என்பதை அறிந்தபோது ஆச்சரியப்பட்டேன். ஒரு புத்தகத்
தின் முன்னுரையில் துளசிதாசர் கலியுகத்தால் தான் படும்
துன்பங்களைக் கூறி அதை தீர்க்கும்படி ஹனுமாரிடம்
வேண்டினாராம். அவரோ "நானே ஸ்ரீராமரிடத்தில்
சேவகனாக இருக்கிறேன் என்னால் உன் கஷ்டத்தை
எப்படி தீர்க்கமுடியும். நீ வேண்டுமானால் ஒரு விண்ணப்ப
மாக எழுதி தந்தால் அதை ஸ்ரீராமரிடம் சேர்ப்பித்து
விடுகிறேன்" என்று கூறினாராம். துளசிதாசரும்
'வினயபத்ரிகா' என்ற நூலை எழுதித்தர அது இறுதியில்
ராமரிடம் சேர்ந்தவுடனேயே ஸ்ரீராமரின் அங்கீகாரம் பெற்று
துளசிதாசரின் துன்பம் நீங்கியது என்று கூறப்பட்டிருக்கிறது.

என்னைப் பற்றி அறிந்தவர்களுக்கு நன்கு தெரியும்
என் வாழ்க்கை போராட்டமானதென்று. அதிலும் எதிர்
நீச்சல் போட்டு எந்தக் கஷ்டத்தையும் வெற்றிகரமான ஒரு
படிக்கட்டாகவே மாற்றிப் பழக்கப்பட்டவள் என்பதும்
அவர்களுக்குத் தெரியும். மொழி பெயர்ப்பதற்காக இப்
புத்தகத்தைப் படிக்கப் படிக்க என் மனதில் இன்னும் பலமும்
தைரியமும் பெற்றேன். சோதனை ஏற்பட்ட நேரங்களில்
ஆறுதலாக இருந்தது. இப் புத்தகத்தில் துளசிதாசர்
கணபதியை வணங்குகிறார். சூரியபகவானை துதிக்கிறார்,
சிவபெருமானை போற்றுகிறார். கங்கை, யமுனை, சீதா
தேவி, லட்சுமணர், பரதர், ஆஞ்சநேயர் யாவரையும் புகழ்
கிறார். ஸ்ரீராமரிடம் முறையிடுகிறார். வாதம் செய்கிறார்,
யாவும் எதற்காக? பணத்திற்காகவா இல்லை பதவிக்

காகவா? யாவும் ஸ்ரீராமரிடம் நீங்காத அன்பு கொண்டிருக்க வேண்டும் என்பதற்காகத்தானே

பகுதி பாவத்தை எடுத்து விட்டால் இப் புத்தகத்தின் முழு பலனும் கிடைக்காது. எனவேதான் பக்தி பாவம் குறையாமல் இருக்க சில இடங்களில் தமிழர்களின் இடையே நனகு வழக்கிலுள்ள வடமொழிச் சொற்களும், வடமொழி எழுத்துக்களும் இருந்தால் சிறப்பாக இருக்கும் என்று தோன்றிய இடங்களில் எல்லாம் தயங்காமல் அதையே பயன் படுத்தி இருக்கிறேன்.

கைப்பிரதியை மீண்டும் ஒரு முறை நன்றாக புரியும்படி எழுத நான் சிரமப்பட்டுக் கொண்டிருந்தபோது என்னிடத்தில் தட்டச்சராக பணிபுரிந்து வந்த திரு. பிரபு முன்வந்து சிறந்த முறையில் நகல் எடுத்து அளித்தார் அவருக்கும் எனது உளமார்ந்த நன்றி.

பின்பு சென்னை உயர் நீதி மன்றத்தில் தனிச்சிறப்புடன் விளங்கும் மாண்புமிகு நீதிபதி திரு சீனிவாசன் அவர்களிடம் அணிந்துரை வாங்க விரும்பினேன் கோர்ட்டில் பார்த்தது தான் தனிப்பட்ட முறையில் பரிச்சயம் கிடையாது என்ன கூறுவாரோ என்று பயந்து கொண்டுதான் மொழி பெயர்ப்பை அவரிடம் அளித்தேன் அவரும் அதை நன்கு படித்து அதிலிருந்த சந்திப்பிழை முதலான சிறுசிறு பிழைகளையும்கூடத் திருத்தி அளித்து அவரது அணிந்துரையையும் என்னிடம் அளித்தபோது நன்றாகச் செய்திருக்கிறாய் என்று கூறினார். இந் நூலுக்கு மேலும் வளம் சேர்க்கின்ற வகையில் அணிந்துரை அளித்த அவருக்கும் எனது இதயங்கனிந்த நன்றிகள்

வாழ்த்துப்பா அருளிய திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகளுக்கும் என் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்

என்னை ஊக்குவித்து அணிந்துரை அளித்து வாழ்த்திய தாமப்ரவசன ரத்னம் மஞ்சக்குடி K ராஜகோபால சாஸ்திரிகளுக்கும், மயிலை மாமுனி தவத்திரு சுந்தரராம குருஜி சுவாமிகளுக்கும், சென்னைப் பல்கலைக் கழகத்தின் தமிழ் மொழித்துறையில் இணைப் பேராசிரியராக இருக்கும் டாக்டர் திரு இ. சுந்தரமூர்த்தி அவர்களுக்கும், தட்சிண பாரத இந்தி பிரசார சபா பொருளாளர் டாக்டர் திரு

எஸ. சுபரமணியன அவாகளுககும எனது நனறி கலநத வணக்கத்தைத தெரிவித்துச் கொள்கிறேன்.

இப புததகத்தை வெளியிடுவதற்கு முன எனககு ஏறபட்ட பிரச்சனைகளின போதெல்லாம் ஆலோசனை அளித்து தைரியம் அளித்த அட்வகேட் திரு. ஆர். சீனிவாசன அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

மாறுபட்ட கருததுடையவராக இருநதாலும என முயற்சியைப பாராட்டித தூணடுகோலாக இருந்த திரு. ஜோதிப பிரகாசம அவாகளுககும் என நன்றி.

அச்சிடுவதற்கான காகிதத்தை சலுகை விலையில கிடைக்கச செய்த M/S சேஷசாயி பேப்பா நிறுவனத்தாருககும எனது உளமாாநத நன்றிகள

இப்புததகததை அசசிடும நேரததில எனககு உறுதுணையாக இருந்த எனது ஜூனியா செல்வி R சுஜாதாவுக்கும என் நனறி.

குறிபபறிநது இந் நூல வெளிவர உதவிய M/s. புரோமெக்ஸ் நிறுவனததாருக்கும, சைதாப்பேட்டை திரு. கௌதமசநத் ஜெயின் மற்றும எலலா வகையிலும பக்கபலமாக இருந்த அனைத்து பெரியவர்களுக்கும நணபாகளுக்கும் எனது இதயங்கனிந்த நன்றிகள்.

மிகக அககறையோடும, பகதியோடும அசசிட்டு சிறந்த முறையில இந்நூல் வெளிவர காரணமாக இருந்த மாருதி அசசகத்தைச சார்ந்த திரு. ஸ்ரீதரன, திரு பார்த்திபன் திரு ஹரிஹரன அவர்களுககும் என நனறியை உரித்தாக்குகிறேன.

நிசசயமாக தமிழுககாக தமிழாகளும, பக்திக்காரபகதாகளும் இதற்கு நல்ல வரவேறபு அளிப்பார்கள் என்ற நமபிக்கையுடன், இப்புத்தகம பாமரர்கள வரை அடைய வேண்டும என்றும் அனைவருடைய இன்னலையும் நீக்கி துன்பம் நெருங்காதிருக்க அருளபுரிய வேணடுமென்று இறைவனை பிரார்த்திக்கிறேன.

சென்னை

எஸ். பி. ராஜகுமாரி

# பொருளடக்கம்

# ஸ்ரீ ராமபிரானுக்கு துளசிதாசரின் விண்ணப்பம்

## 1

### மகா கணபதி ஸ்துதி

உலகத்தோரின் போற்றுதற்குரிய கணபதியின் புகழினைப் பாடுவோமாக! அவர் சிவபார்வதியின் திருமகன். தம் தாய் தந்தையரை மகிழ்விப்பவர். அஷ்டசித்திகளின் இருப்பிடம், யானை முகத்தினன், விக்னங்களின் அதிபதி. அதாவது, அவருடைய கருணையினால் நமது இடையூறுகள் விலகிவிடும். அவர் கருணைக்கடல், அழகுடையவர், எல்லா வல்லமையும் பொருந்தியவர், கொழுக்கட்டைப் பிரியர். நமக்கு இன்பத்தையும் எல்லா நலங்களையும் அளிப்பவர். கல்விக் கடலாகவும் அறிவின் அதிபதியாகவும் விளங்குபவர். இந்த மங்களமயமான மகா கணபதியை, துளசிதாசனாகிய நான் கைகூப்பி வணங்கி வேண்டுவதெல்லாம் அடியேனின் மனக்கோவிலில் ஸ்ரீராமர் சீதாதேவியுடன் எப்போதும் வாசம் செய்யவேண்டும் என்பதே ஆகும்.

## 2

## சூரியன் ஸ்துதி

நலிவற்றோராமீது கருணை காட்டும் சூரியபகவானே! முனிவர், மானிடர், தேவர், அசுரர் ஆகிய யாவரும் உனக்குச் சேவை செய்கிறார்கள். கிரணங்களை மாலை யாக தரித்திருப்பவனே! நீ பனி இருள் என்னும் யானை களை ஒழிப்பதில் சிங்கத்தைப் போன்றவன். தோஷம், துக்கம், பாபம், நோய் ஆகியவற்றை எரிப்பதில் தீயினைப் போன்றவன். நீ சாதகப்பறவையை—இரவு காரணமாக ஏற்படும் அதன் இதய தாபத்தை நீக்கி—மகிழ்விப்பவன், தாமரையை மலர்விப்பவன், எல்லா அண்டங்களுக்கும் ஒளியைக் கொடுப்பவன். வேகம், வலிமை, ரூபம், ஆனந்தம் ஆகியவற்றின் இருப்பிடமான நீ, திவ்யமான ரதத்தில் பயணம் செய்கிறாய். ஆனால் உனது சாரதி அருணனோ முடவனாக இருக்கிறான்.

ஹே சுவாமி! நீ விஷ்ணு, சிவன், பிரமமா ஆகிய மும்மூர்த்திகளின் வடிவமாக இருக்கிறாய். (பவிஷ்ய புராணம், சூரியனைக் காலையில் பிரம்மன் வடிவமாகவும், மதியத்தில் சிவன் வடிவமாகவும் மாலையில் விஷ்ணு வடிவாகவும் இருப்பதாகக் கூறுகிறது.) வேத புராணங்கள் உனது புகழைப் பாடிக்கொண்டே இருக்கின்றன. துளசிதாசனான எனக்கு ஸ்ரீராமரிடத்தில் அகலாப் பக்தியை வரமாக அளித்தருளவாயாக!

3

## சிவபெருமான் ஸ்துதி

சிவபெருமானே! உனனிடமலலாமல வேறு யாரிடததில யாசகம் கேடகமுடியும்? நீ திக்கறறவாகளிடம் கருணையுடையவன; பக்தர்களின துனபததை போககுபவன, எலலா வகையிலும சாமாத்தியமும செளபாக்கியமும உடையவன, பாறகடலைக* கடைந்தபொழுது ஏறபட்ட ஆலகால விஷததின வெம்மையினால் தேவாகளும் அசுரர்களும பொசுங்கியபோது அவாகளைக காக்க அநத விஷத்தை அருந்திவிடடாய். மூவுலகததிலுளளவர்களுக்கும் பெருந துன்பத்தை அளித்துவந்த திரிபுராசுராகளை* ஒரே அம்பினால் வீழ்த்திவிட்டாய்.

---

* ஒரு சமயம் தேவாகளும் அசுரர்களும் சுமேரு மலையை மத்தாகவும் ஆதிசேஷன என்ற பாம்பை கயிறாகவும கொணடு பாற்கடலைக கடைந்தனர். அப்போது முதலில் ஏற்பட்ட ஆலகால விஷத்தைக் கண்டு அஞ்சி அவர்கள சிவபெருமானிடம் சரணடைந்தனா. சிவபெருமானும் அந்த விஷத்தை தானே உண்டார். அந்த விஷம் கண்டத்திற்கு (கழுத்துககு) கீழே போகாதபடி பார்வதி தேவி அவரது கழுத்தை அழுத்திப பிடித்துக் கொண்டதால் கண்டம நீலநிறமாகியது எனவே அவருககு நீலகண்டன் என்ற பெயர் ஏற்பட்டது எனறு கூறப்படுகிறது

* தாரகன எனற பெயா கொண்ட அரககனுக்கு தாரகாக்ஷன், விதுமாலி கமலலோசன ஆகிய மூன்று புதல்வர்கள இருந்தனர். அவர்கள் கடுமையான தவம செய்து பிரம்மாவிடமும் சிவபெருமானிடமும் முப்புரங்களை ஆட்சி செய்யும் அதிகாரத்தைப் பெற்றனர். அதிகார மமதையினால அநத அசுரர்கள பலவிதமான அக்கிரமங்களைச செய்ய ஆரம்பித்ததால் அவர்களது தொந்தரவு பொறுக்கமாட்டாமல் தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட்டனர். சிவபெருமான் ஒரே பாணத்தினால் முப்புரங்கலையும் எரித்துவிட்டதால் அவருக்கு திரிபுராரி என்ற பெய ஏற்பட்டது என்று கூறப்படுகிறது

எந்த முகதியை அடைவது மகாமுனிவாகளுக்கும் கடினமானது, துர்லபமானது என்று முனிவர்களும் வேதங்களும புராணங்களும் கூறுசின்றனவோ அந்த உத்தம கதியை உனது நகரமான காசியிலே இறக்கும் எல்லோருக்கும பாரபட்சமில்லாமல் அளிக்கிறாய். உனக்குச் சேவை செய்வது மிகச்சுலபம. ஏனெனில், நீ எளிதில மகிழ்ச்சி அடைந்துவிடுகிறாய்.

ஹே பாரவதி மணாளனே! ஹே பரம் பொருளே! நீ கறபக விருடசததைப போன்று உதாரகுணமுடையவன், காமதேவனைப பொசுக்குபவனே! ஹே கருணைக் கடலே! ஸ்ரீராமசசநதிரமூாததியின பாதங்களில சரணடைவதற்கான பகதியை, துளசிதாசனாகிய எனக்கு அளித்து அருளபுரிவாயாக!

## 4

சிவபெருமானை ஒதத வளளல வேறு யாருமிலலை, அவா நலிவுறறோரிடம கருணைமனம கொண்டவர்; கொடுப்பதே அவருககு விருபபமாகும; பிசைஷ கேட்பவர்கள் அவருக்குச சதா நலலவாகளாகத் தெரிகிறார்கள்.

வீரர்களில முதனமையான காமதேவனை எரித்துச் சாமபலாக்கி, பினபு சரீரமில்லாமல உலகத்தில் வாழ வைததவா. இததகைய பிரபுவின் கருணையைக கூற என்னால் எவவாறு இயலும?

எந்த மோடசத்தை அடைய, முனிவர்கள பலவகையான யோகாப்பியாசங்களைச் செய்தும், அதை ஆணடவனிடத்தில கேடகத தயங்குகிறார்களோ, அதே மோடசததை, சிவபெருமானின் நகரமான காசியில

புழுப்பூச்சிகளும் அடைந்துவிடுகின்றன என்று வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இத்தகைய உதாரரும், கருணாமூர்த்தியுமாகிய உமாபதியைத் தவிர்த்துப் பிறிடம் யாசிக்க யார் செல்கிறார்களோ அந்த மூடர்களின் வயிறு ஒருபோதும் நிறையாது.

## 5

சிவபெருமானின் மிதமிஞ்சிய உதார குணத்தைக் கண்ட பிரம்மதேவர் பார்வதி தேவியிடம் கூறலானார் "ஹே பவானி, தங்களுடைய கணவர் ஒரு பைத்தியம், யாருக்கும் ஒருபொழுதும், எதுவும் தானதாமம் செய்யாதவர்களுக்கும் கூட அவர் கொடுக்கும் தயாளராக இருக்கிறார். இதை வேதங்களும் புகழ்ந்து கூறுகின்றன. பரமபுத்திசாலியான தாங்கள் கொஞ்சம் தங்களது வீட்டு நலனையும் கவனியுங்கள். (ஏனெனில் கொடுத்துக் கொடுத்தே வீடு காலியாகிக் கொண்டிருக்கிறது.) சிவபெருமானால் கொடுக்கப்பட்ட பொருட்களைப் பார்த்தே லட்சுமியும் சரஸ்வதியும் பொறாமைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

யாருடைய தலையில் சுகத்தின் நிழலைக்கூட நான் எழுதவில்லையோ, அந்தப் பரம ஏழைகளுக்கெல்லாம் கூட சுவர்க்கத்திற்குப் போக வழி செய்து செய்து எனக்கு மூச்சு இரைக்கிறது. துன்பப் படுபவர்களின் வருத்தமும் ஏழ்மையுமே இப்பொழுது இக்கட்டிலுள்ளது. 'பிச்சை' இப்பொழுது மனத்தளர்ந்திருக்கிறது (ஏனெனில், துன்பம், ஏழ்மை, பிச்சை ஆகியவற்றுக்கு எங்கும் இருக்க இடமில்லை.) இந்த அதிகாரத்தை வேறு யாருக்காவது கொடுத்துவிடுங்கள். என்னால் இதனைத் தாங்க முடியாது. இத் தொழிலைச் செய்வதைவிடப் பிச்சை

எடுப்பதே மேல் என்று தோன்றுகிறது.'' இவ்வாறு அன்பும் புகழ்ச்சியும் பாசமும் பரிகாசமும் நிறைந்த நான்முகனின் அழகிய மொழியைக் கேட்டு சிவபெருமான் மனதில் மகிழ்ச்சி அடைந்தார். உலக மாதா பார்வதிதேவி புன்னகை புரிந்தாள்.

## 6

பார்வதியின் கணவனாகிய உன்னிடம்தான் யாசகம் கேட்க வேண்டும். உனது இல்லம் காசியில் இருக்கிறது. உனக்கு அணிமா முதலான அஷ்ட சித்திகளும் அடிமைகளாக் இருக்கின்றன. நீ எளிதில் மகிழ்ச்சி அடைபவன். மேலும் சிறிதளவு சேவையிலேயே உருகிவிடுகிறாய். கதியற்றவர்கள் கைகூப்பி உன் முன் நிற்பதைக் காண பொறுக்காதவன். உன்னை வணங்குவதால் சொத்து, சுகம், நல்லறிவு, நற்கதி ஆகிய யாவும் கிடைத்துவிடும். துன்பத்தால் பீடிக்கப்பட்டவர்கள் உன்னிடம் அடைக்கலம் புகும்போது நீ அவர்களை அரவணைத்துக்கொண்டு கண நேரத்தில் அவர்களுடைய விருப்பங்களைப் பூர்த்தி செய்து விடுகிறாய். ஸ்ரீரகுபதியின் பவித்ர பக்தி கிடைக்க வேண்டும் என்ற ஆசையின் காரணமாகவே இந்த யாசக துளசிதாசனாகிய நான் உனது புகழைப் பாடிக்கொண்டிருக்கிறேன்.

## 7

ஹே உமாபதியே! ஏன் இந்த ஏழையிடம் இரக்கம் காட்டவில்லை? நீ கொடிய விபத்துக்களையும் போக்குகின்ற கருணையுடையவன். வேதங்களும் புராணங்களும் சிவபெருமான் பரந்த உள்ளம் கொண்டவர் என்று கூறுகின்றன. ஆனால் என் முறை வரும்போது மட்டும்

இரக்கம் காட்டாமல் ஏன் கருணையற்றவனாக இருக்கிறாய்? குணநிதி* என்ற பிராமணர் எத்தகைய பக்தி செய்துவிட்டாரென்று அவருக்கு மட்டும் உன்னுடைய பதமான மோட்சத்தை அளித்துவிட்டாய். எந்த மோட்சத்தை அடைவது அரியதென்று மகா முனிவர்கள் கருதுகிறார்களோ, அந்த மோட்சம், புழு பூச்சிகளுக்கும்கூட உனது காசி நகரத்தில் கிடைத்துவிடுகிறது. காமதேவனை எரித்த சிவபெருமானே! ஹே பிரபு! ஸ்ரீராமரின் திருவடிகளில் சரணடைய பக்தியை, துளசிதாசனாகிய எனக்களித்து எனது பேத புத்தியைப் போக்குவாயாக!

## 8

ஹே சங்கரா! நீ மகாதேவன்! பெருங் கருணைக் குணமுடையவன், கபடமற்றவன்! யார் யார் உன் முன் கைகூப்பி வணங்குகிறார்களோ அவர்கள் எல்லோருடைய துன்பங்களையும் போக்கிவிடுகிறாய். யார் உன்னை வணங்கிப் பூஜை செய்கிறார்களோ, உன்னை மனதில் நினைக்கிறார்களோ, சிறிது வில்வ இலையையோ அல்லது அட்சதையையோ, தூவுகிறார்களோ, அவர்களது குறைகளை நீக்குவதோடு ஆதரவாக பிரதிபலனாக உலகின் எல்லா சுக சம்பத்துக்களையும், யானை, குதிரை,

---

* குணநிதி என்ற அந்தணன் ஒருவன் திருடனாக இருந்தான். ஒரு நாள் அவன் கோவிலிலுள்ள மணியைத் திருட முயன்றான். கோவில் மணி மிகவும் உயரத்தில் இருந்ததால் அதை அவிழ்ப்பதற்காக சிவலிங்கத்தின் மீது ஏறினான். அதற்குள் சிவபெருமான் அவன் முன் பிரசன்னமாகி "மக்கள் என் மீது புஷ்பங்களை ஏற்றுகிறார்கள். ஆனால் நீயோ உன் சரீரத்தையே என் மீது ஏற்றிவிட்டாய். இதனால் நான் மிகவும் சந்தோஷமடைந்தேன். வரத்தைக் கேள்" என்று கூறினார். அவனும் மோட்சத்திற்குச் செல்ல வேண்டும் என்ற வரத்தைக் கேட்டதால் சிவபெருமான் அவனுக்கு மோட்சத்தை அளித்துவிட்டார்.

தோ, ஏவலாளர்கள் சூழும் அரச போகத்தையுங்கூட அளித்துவிடுகிறாய்.

ஹே வாமதேவனே! உனது நகரமான காசியில் இருந்தும் நான் இதுவரை எதையும் உன்னிடம் யாசித்ததில்லை. பக்தர்களைச் சோதிக்கும் சக்திமிக்க துன்பங்களும்கூட உனது தொண்டர்களே ஆதலால், என்னைத் துன்புறுத்திக் கொண்டிருக்கும் அக் கொடிய துன்பங்களெனும் துஷ்டர்களை நீயே அடக்கி அனுக்கிரஹிப்பாயாக! நான் உன்னிடம் சரணடைகிறேன். ஏனெனில் இந்தத் துஷ்டர்கள் துளசிதாசனாகிய துளசிச் செடியை பிடுங்கிவிட்டு முட்களை, நிறைந்த சப்பாத்திக் கள்ளியை நட நினைக்கிறார்கள்.

## 9

ஹே சிவனே! பிரசன்னமாகித் தயை காட்டுவாயாக! நீ கருணைமயமானவன், உனது புகழ் எட்டுத் திக்குகளிலும்பரவி இருக்கிறது. என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன்! எனது மாயையை அகற்றிவிடுவாயாக!

ஹே தாமரைக் கண்ணனே! நீ சாவகுணங்களின் இருப்பிடம். உனது புகழ் எட்டு திக்குகளிலும் பரவி இருந்தும், காமதேவனை நீ எரித்திருக்கின்ற போதிலும், உனது மகிமையை யாரும் அறிந்தவரில்லை. உனது கருணையின்றி ஸ்ரீராமசந்திரமூர்த்தியின் சரணகமலங்களைக் கனவிலகூட அடையமுடியாது. தீர்க்கதரிசிகள், முனிவர், சித்தர், மானிடர், அசுரர், தேவர் மற்றும இவ் வுலகிலுள்ள எல்லா ஜீவன்களும் உனது பாதாரவிந்தங்களில் சரணடையாமல, கல்பகோடி காலம் சென்றாலும் பிறவிப் பெருங்கடலை தாண்டமுடிவதில்லை. நீ

சர்ப்பங்களை ஆபரணமாகக் கொண்டவன். மற்றும் கொடிய தூஷணனைக் கொன்ற ஸ்ரீராமரின் தொண்டன்! ஹே தேவாதி தேவா! நீ திரிபுராசுரர்கள் அழியக் காரண மாக இருந்தாய். ஹே சங்கரா! நீ அறியாமையென்னும் மூடுபனிக்குச் சூரியனைப் போன்றவன். அடைக்கலம் புகுந்தவர்களின் துன்பத்தையும், பயத்தையும் போக்க வல்லவனே! நீ பார்வதிதேவியின் மனமென்னும் தடாகத்தில் உறையும் அன்னம். ஹே காசி நகராதிபதியே! மயானத்தில் இருப்பவனே! துளசிதாசனாகிய எனக்கு ஸ்ரீஹரியின உயர்ந்த சரணாரவிந்தங்களில் அகலாத பக்தியை அளித்து அருள்புரிவாயாக!

## 10

ஹே ஹரனே! ஹே ருத்திரா! ஹே சங்கரா! நீ அடைக்கலம் புகுந்தவர்களின் அறியாமையெனும் இருளைப் போக்குவதில் சூரியனைப் போன்றவன். ஆகை யால் ஹே லோகநாயகா! எனது துயரத்தை அகற்றுவா யாக. சிரசில் துவிதியை திதியின் பாலசந்திரனை தரித்திருக்கிறாய். உனது பெரிய விழிகள் தாமரை மலரை ஒத்திருக்கின்றன. நீ கோடிக்கணக்கான மன்மதன்களின் அழகினுக்கொத்த அழகின் இருப பிடம்!

உனது அழகிய மேனி சங்கினைப் போன்று வழவழப பாகவும் குமுத மலரினைப போன்று அழகாகவும், சந்திரனைப் போன்று குளிர்ச்சி பொருந்தியதாகவும் கற்பூரத்தைப போன்று நல்ல மணமுடையதாகவும் இருப்பதோடு கோடிக்கணக்கான உச்சிநேர சூரியனின் ஒளியை உடையதாக ஒளி வீசிக்கொண்டிருக்கிறது. அங்கம் முழுவதும் சாம்பலைப பூசிக்கொண்டிருக்கிறாய்,

உனது உடலின் பாதிப் பாகத்தில் ஹிமாசலபுத்திரி பார்வதிதேவி பிரகாசித்துக் கொண்டிருக்கிறாள். உனது கழுத்தில் சர்ப்பங்கள் மற்றும் கபாலங்களின் மாலைகள் ஒளிவீசிக்கொண்டிருக்கின்றன.

உனது சிரசின் மீதுள்ள ஜடாமகுடத்தில் ஸ்ரீ விஷ்ணு பகவானின் திருவடிகளால் தூய்மை அடைந்த கங்காதேவி மின்னலைப் போன்று பிரகாசித்துக் கொண்டிருக்கிறாள். செவிகளில் குண்டலமும், கழுத்தில் ஆலகால விஷமும் கொண்டிருக்கும் கருணாகரன், சத் - சித் - ஆனந்த சொரூப யோகியான பகவான் சிவபெருமானே! நான் உன்னை வணங்குகிறேன்.

திரிசூலம், அம்பு, வில், வாள் முதலியன உன் கைகளில் இருக்கின்றன. நீ பகைவராகிய வனத்தை அழிக்கின்ற நெருப்பை ஒத்தவன். ரிஷப வாகனன்; புலி மற்றும் யானையின் தோலை ஆடையாக உடையவன். பிரம்மஞானத்தைப் பொழியவைக்கும் மேகம்; சித்தர், தேவர், முனிவர் மானிடர் ஆகியோரால் வணங்கப்படுபவன்.

நீ, தாண்டவத்தின் போது உடுக்கையை ஒலிப்பவன், அதனுடைய நாதம் டிம், டிம் என்று கேட்கிறது. அமங்கலமாகத் தோற்றமளித்தாலும் உண்மையில் மங்களத்தின் இருப்பிடமாக இருக்கிறாய்; மஹாப்பிரளய காலத்தில் அகில அண்டங்களையும் பொசுக்கிவிடுகிறாய். கைலாசம் உனது இல்லம், காசியில் அமர்ந்திருக்கிறாய். எல்லா தத்துவங்களையும் அறிந்தவன்; யக்ஞங்களின் தலைவன், நிலையானவன், எங்கும் வியாபித்

திருபபவன. ஹே திரிபுராநதகா, உனது அம்சததிலிருநது தான இநத விஸவ பிரம்மாணடம் ஏறபட்டிருககிறது. பிரமமா, இந்திரன, சந்திரன, சூரியன், வருணன, அக்னி, வாயு, யமதர்மன, மற்றும தேவ, பூத கணஙகளும் உனது திருவடிகளை வணங்கியே எலலா அதிகாரஙகளையும பெற்றனா.

நீ அழிவறறவன, கபடற்றவன, உருவறறவன, மாயையற்றவன, சாட்சாத பிரமமம, காமபதங்களில் ஒருவன, பிறப்பு இறப்பு அறறவன்; விகாரமற்றவன. ஹே சஙகரா! அனைத்து பிரமமாணடமும் உனது மேனியாகும். உனது ரூபம் மிகவும பயங்கரமானது! நீ தேவர்களின தலைவன. ஹே சிவனே! நீ எங்கும் வியாபிததிருப்பவன். அனைவர்க்கும் உபகாரம செய்பவன். உன முன இருபபதால ஞானம, வைராக்கியம், தனம, தாமம், மோட்சம, அழகு, சௌபாக்கியம் ஆகிய அனைததையும அடையமுடியும். ஆயினும இந்த மூட மனிதாகள் உனது சரணாரவிந்தங களைச சரணடையாமல உலக இன்பங்களில மூழ்கி இருககிறார்கள்.

ஹே சம்போ! புததியற்று, அளவறற கொடுமையான துன்பங்களில மூழ்கி, துன்பத்தை அனுபவிததுக கொண்டிருககும் துளசிதாசனாகிய நான உன்னிடம அடைககலம் புகுகிறேன். ஹே காமனை அழித்தவனே! மாயையுடன கூடிய பேதபுத்தியை நீக்கி ஸ்ரீராமரின பாதகமலங்களில ஒப்பறற பக்தியை அளிப்பாயாக!

11

## பைரவரூப சிவன் ஸ்துதி

பயங்கர ரூபமுடைய பைரவர்! பூத, பிரேத கணங் களின் தலைவனே! நீ ஆபத்துக்களைப் போக்குபவன்; அறியாமையென்னும் எலிக்குப் பூனை போன்றவன், உலகத்தோரின் பயத்தைப் போக்குபவன், உலக ஜீவன் களைக் கடைத்தேற்றி ரட்சிப்பதோடு தானே முக்தியின் உருவமாக இருந்து அச்சமின்மையை அளிப்பவன்; உனது நிகரற்ற சக்தியை வாணிக்க இயலாது.

உனது சரீரம் நிர்மலமானது, அதனுடைய ஒளி ஆதிசேஷனின் காந்திக்கு ஒப்பானது. உனது சிரசின்மீது மஞ்சள் நிற ஜடாமுடி கோடிக்கணக்கான மின்னலின் ஒளிக்கு ஒப்பாக மிளிர்ந்து கொண்டிருக்கிறது. பரமபவித்ர மான ஜலத்தையுடைய தேவநதியான கங்காதேவி உன் சிரசில் மாலையைப்போல அமர்ந்திருக்கிறாள், அதன் அழகே விசித்திரமானது. உனது அழகிய தலையில் சந்திரன் ஒளிவீசிக் கொண்டிருக்கிறான். குபேரனுடைய நண்பனான உன்னை நான் வணங்குகிறேன்.

சந்திரன், அக்னி, சூரியன் ஆகியவை உனது கண் களாகும் நீ காமதேவனை அடக்கியவன், குணங்களின் இருப்பிடம்; ஞான, விஞ்ஞானத்தின் வடிவம். ஹேகிரிஜா ரமணா! கைலாச பர்வதம் உனது மாளிகையாகும். நீ எப்பொழுதும் காதில் குண்டலங்களை அணிந்திருக் கிறாய்; உனது முகத்தின் அழகு ஒப்பற்றது. உனது கைகள், கேடயம், வாள், சூலம், உடுக்கை, வில், அம்பு முதலானவற்றை ஏந்தியிருக்கின்றன நந்தியெனும் காளையே உனது வாகனமாகும். நீ கருணையின்

இருபபிடம, அதனால்தான பாறகடலைக கடைநத பொழுது ஏறபட்ட விஷ ஜவாலையால தேவா, அசுரா, மானிடா பொசுங்கித் தவிததபோது அவர்களைக காப்பாற்ற, நீயே அநத விஷத்தை அருந்திவிட்டாய்!

சுடலைப பொடிதான உனது மேனியின அலங்காரமாகும, புலிததோலே உனது ஆடையாகும. மார்பில சர்ப்பங்களையும நரமுணடஙகளையும மாலையாக அணிநதிருக்கிறாய்; ஏவல், பில்லி, சூனியம போன்ற மந்திர தந்திரங்களை அழிப்பவன, பெரும்பாவஙகளின பகைவன், முக்காலத்திறகும அதிபதியானவன, கலிகாலம என்ற கொடிய பாமபை அழிககக வந்த கருடன, திரிபுராசுரர்களை அழித்தவன, மற்றும பெரும பயஙகரமான காரியங்களையும் சாதிப்பவன, மஹா பிரளயகாலததில் திக்கஜங்களைத் திரிசூலததினால குததி நிர்க்குணங்களைக் கடந்து நர்த்தனம புரிபவன்; பாபகாமங்களால துன்பமடைந்த இந்தக கோரசம்சாரததில வேறு கதியற்று எண்பத்திநான்கு லட்ச உயிரினஙகளில ஒன்றாகச சுற்றிக்கொண்டிருககும எனனை பாதுகாப்பவா எவருமிலர். ஹே பைரவரூபனே! ஹே ராமரூப ருத்திரனே! எனனைக காப்பாற்றுவாயாக. ஏனெனில், எனது உறவு, குரு, தாய், தந்தை, இறைவன யாவும நீயே!

மாசற்ற மனதுடைய சரஸவதி, வேதம், நாரதர் முதலான பிரமமஞானிகள் ஆதிசேஷன் ஆகியோர் உனது புகழைப பாடுகிறார்கள். சர்வேசுவரனும, ஆனந்தபவனமான காசியில் உறைபவனும் பயத்தைப போக்குபவனுமான உனனை, துளசிதாசனாகிய நான் நமஸகரிக்கிறேன்.

## 12

சிவபெருமானே! நீ மங்களகரமானவன, வாரிவழங்கும வள்ளல், சான்றோர்களுக்கு ஆனந்தமளிப்பவன, பார்வதியின் தலைவன், தன்னிகரற்ற அழகன், காமதேவனின் செருக்கை அழித்தவன், கமலக்கண்ணன, வழிபாட்டினமூலம் அறியக்கூடியவன, உன்னை வணங்குகிறேன்.

உனது மேனி சங்கினைப் போன்று வழவழப்பாகவும் தாமரை மலரினைப் போன்று அழகுடையதாகவும சந்திரனைப் போன்று குளுமை பொருந்தியதாகவும கற்பூரத்தைப் போன்று மணமுடையதாகவும் மிளிர்ந்து கொண்டிருக்கிறது. நீ சத்-சித்-ஆனந்தத்தின சொரூபமானவன் சித்தர், சனகாதிமுனிவர்கள், மகாயோகிகள், தேவர்கள், விஷ்ணு, பிரமமன், முதலானோர உனது சரணாரவிந்தங்களைப் பூஜிக்கின்றனர்.

நீ பிராமணகுலப பிரியன. உன்னை அடைவது எளிது, அதே நேரம கடினமுமாகும். நீ விசித்திரமான வேஷமுடையவன்; எங்கும நிறைந்தவன, வேதத்திறகும அப்பாறபட்டவன, கருணாகரன; ஆலகால விஷத்தையும, கங்காதேவியையும் தாங்கிக் கொண்டிருப்பவன்; நிர்மலன்; நிர்க்குணன்; விகாரமற்றவன. சிவபெருமானே! உன்னை வணங்குகிறேன.

நீ அனைத்துலகங்களுக்கும தலைவனானவன. துயரத்தையும் துன்பத்தையும் நிர்மூலமாக்குபவன; திரிசூலன, மோகமெனும் இருளைப போக்கும சூரியன்; காலனுக்கும காலனானவன்; காலத்தைக் கடந்தவன, நிலையானவன; ஹரன், கடின கலிகாலமெனும வனத்தை அழிக்கவல்ல நெருப்பாகத் திகழபவன, தத்துவங்களின தலைவன,

*அறியாமையெனும் கடலைக் குடித்துவிடும் அகத்தியா* போன்றவன்; சாவவல்லமை பொருந்தியவன், சகல சௌபாக்கியங்களுக்கும் மூலகாரணமானவன். உலகின ஜனம, மரணத் துன்பத்திலிருந்து விடுவித்து அடைக்கலம புகுந்தவர்களுக்கு ஆனந்தமளிப்பவன. துளசிதாசனாகிய நான் உனனிடம் சரணடைந்திருக்கிறேன். எனமீது கருணைக் காட்டுவாயாக!*

## 13

*மனமே! சிவபெருமானின பாத கமலங்களில சேவை செய்வாயாக! ஏனெனில் அப்பாத கமலங்கள எல்லா மங்களங்களையும் அளிக்கவல்ல காமதேனு ஆகும்.*

*சிவபெருமான கற்பூரம் போனறு மிளிர்கினறவன; கருணை காட்டுவதில தயாள குணமுடையவன், உலகத்தின் சாரமானவன். வாசுகியெனும் சர்ப்பத்தை மாலையாக அணிந்திருப்பவன்; சகல சுகத்திற்கும் மூலஸ்தானமானவன். அவனது மகிமை அபாரமானது; அனைத்துக் குணங்களுக்கும் நாயகன், உருவமறறவன, முக்கணணன்*

* [சமுத்திரகரையில் இரண்டு பட்சிகள வசித்து வந்தன கடலலைகள அவற்றின் முட்டைகளை அடித்துச் சென்றுவிட்டது. இதனால் கோபமுற்ற அப் பட்சிகள் சமுத்திரத்திற்குப் பாடம் கற்பிக்க தம் அலகினால் மணலை யெடுத்துக் கடலில் போட ஆரம்பித்தன அவ்விடம் வந்த அகத்தியா பட்சிகளிடம் அநுதாபம் கொணடு 'ஓம் ராம்' எனும் மந்திரத்தை ஜெபித்து மூன்று முறை நீரைப் பருகினார். அந்த மூன்று முறையிலேயே கடல வற்றிவிட்டது, இதனால அக கடலில வாழ்ந்து வந்த ஜீவராசிகளுக்கு மிக்க துன்பமேற்பட்டது தேவர்களின் முறையீட்டின பேரில அம்மாமுனிவர் கடல்நீரை சிறுநீர்மூலம் வெளியேற்றனர். அதிலிருந்து கடல் நீர் உவர்ப்பாகிவிட்டது]

காமதேவனை எரித்தவன், அகங்காரமெனும் மூடுபனியை நீக்கவல்ல உதயசூரியன்!

அவனது தலையில சந்திரன அழகுடன ஒளிவீசிக் கொண்டிருக்கிறான். மூவுலகங்களின துன்பங்களையும போக்க வல்லவன்; கணங்களின் தலைவனானவன்.

பிரம்மா யார் யாருடைய தலையிலெல்லாம நரகதியினை எழுதவில்லையோ அவர்களுக்கெல்லாம்கூட காசிநகரின கருணாமூர்த்தியான சிவபெருமான முக்தியை அளித்துவிடுகிறான.

ஆலகால விஷத்தின ஜ்வாலையிலிருந்து தேவர்களையும அசுரர்களையும காப்பாற்ற அந்த விஷத்தை உண்டு விட்டவன. இப்படிப்பட்ட மகாதேவனைப போன்று உபகாரி உலகில வேறு எவர் உளர்?

அவனது கிருபையினறி எத்தகைய முயறசி செய்யினும உலகத்தில விவேகத்தைப (உலகில உணமை எது, பொய எது என்பதை) பெறமுடியாது. விஞ்ஞானத்தின இருப்பிடமான பார்வதிதேவியின மணாளனான சிவபெருமானே! துளசிதாசனாகிய எனது பயத்தைப் போக்குவாராக.

## 14

ஹே உமாகாந்தனே! பாரும்! இன்று நீ வனமாக இருக்கிறாய். உன்னைக் காணபதற்கு வசந்தகாலம் (பார்வதி தேவி) வந்துவிட்டது போனறு தோன்றுகிறது. அந்தப் பார்வதிதேவியின மேனி ஒளியானது செண்பகப் பூக்களின் மாலையோ என்று கூறும்படியாக இருக்கிறது,

அவரது நீலநிற உடையோர் புதிய தமால இலையை ஒத்துள்ளது.

அவளது அழகிய தொடை வாழை மரத்தைப் போன்றும் திருவடிகள் செந்தாமரையை ஒத்தும் காணப் படுகின்றன; இடுப்பு சிங்கத்தின் இடையாகவும், நடை அன்ன நடையாகவும் தோன்றுகிறது.

பல நிற பூக்களே அவளது ஆபரணமாகும், அவள் அணிந்திருக்கின்ற சிலம்பு மற்றும் ஒட்டியாணத்தின் இனிய நாதமே பட்சிகளின் மதுரமான ஒலியாகும்.

மகிழம்பூ மற்றும் மாந்தளிர்களே அவளது கை களாகும்; வில்வமே மார்பகமாகவும் கொடிகளாலான வலையே ரவிக்கையாகவும் இருக்கிறது. தாமரை முகமும் வட்டமிடும் தேனீக்களைப் போன்ற கூந்தலும் கொண்டவள், அவளது அகன்ற பெரிய கண்கள் நவீன கருநீலத் தாமரை மலராகும்.

அவள் குயிலைப் போன்ற குரலும் மயில் மற்றும் கிளியை ஒத்த அழகிய குணமும் உடையவள், அவளது சிரிப்பு வெண்மலராகவும் லீலைகள் இளந்தென்றலாகவும் இருக்கின்றன.

ஹே பரமஞானி! கேட்பாயாக! இந்தக் காமதேவன் துளசிதாசனாகிய எனது மனதில் இருந்துகொண்டு பெரும் துன்பத்தை அளித்துக்கொண்டிருக்கிறான்.

அந்தக் காமத்தின் மாயையை விலகச் செய்து, அதில் சுகத்தின் அதிபதியான ஸ்ரீராமர் குடியிருக்கும்படி அருள் புரிவாயாக!

## 15

## தேவி ஸ்துதி

சகிக்க இயலாத தோஷங்களையும் துக்கங்களையும் நாசம் செய்யும் தேவியே! என்மீது கருணை காட்டுவா யாக! நீ விஸ்வபிரம்மாண்டத்தின் மூலஸ்தானம்; பக்தா களிடம் கருணை காட்டுபவள்; திரிசூலத்தைக் கையில் ஏந்திக் கொண்டிருக்கிறாய்; மாயையைத் தோற்றுவிக்கும் ஆதிசக்தி நீ.

உனது அழகிய மேனி மின்னலைப்போல் ஒளிவீசிக் கொண்டிருக்கிறது. அதில் பரிசுத்தமான ஆடைகளும் அழகிய ஆபரணங்களும் எப்போதும் துலங்கிக்கொண டிருக்கின்றன. குட்டி மானின் விழிகளையும் நிலவினை ஒத்த முகத்தையும் உடைய உனது அழகினைக் கண்டு கோடிக்கணக்கான ரதிகளும், மன்மதன்களும் வெட்க மடைகிறார்கள்.

நீ அழகு, சுகம், நற்குணம் ஆகியவற்றின் எல்லை யானவள்; பீமாவெனும் நாமமுடைய துர்க்காவும் நீதான், லட்சுமியும் நீதான்; நீ பெண்ணின் உருவாக இருக்கிறாய். பேச்சிலும் ஞானத்திலும் சிறந்த சரஸ்வதி யும் நீ தான். கார்த்திகேயன் மற்றும் விநாயகருடைய தாயான நீ சிவபெருமானின் அன்புத் துணைவி. ஹே பவானி! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

நீ சண்டன் எனும் அரக்கனின் தண்டாயுதத்தைத் தூள் தூளாகத் தகர்த்தெறிந்து விட்டவள், முண்டனெ னும் அசுரனின் கர்வத்தை அழித்தவள்; மகிஷாசுரனைக் கொன்று அவனது அங்கங்களைக் கண்டதுண்டங்களாக்கி யவள்; யுத்தத்தில் சும்ப, நிசும்ப ஆகிய மதயானை

களுக்குப் பெண் சிங்கமானவள், உனது கோபமெனும் கடலில் பகைவர்களின் கூட்டத்தை நாசம் செய்தவள்!

வேத சாஸ்திரங்களும் ஆயிரம் நாக்குகளை உடைய ஆதிசேஷனும் உனது புகழைப் பாடுகின்றனர். ஆனால் உனது புகழினை முழுமையாகப் பாடி முடிப்பது அவ்வளவு எளிதான காரியமல்ல. தாயே! ஸ்ரீராம மேகமாகவும் துளசிதாசனாகிய நான் சாதகப்பறவையாகவும் இருக்கும் படியான வரத்தை அளித்து அருளபுரிவாயாக!

## 16

ஹே ஜகதஜனனி! ஹே தேவி! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! தேவர், மானிடர், முனிவர், அசுரர், யாவரும் உனக்குச் சேவை செய்கிறார்கள். ஹே காளியே! நீ போகத்தையும் மோட்சத்தையும் அளிப்பவள்; பயத்தைப் போக்குபவள்; மங்களம், ஆனந்தம், அஷ்ட சித்திகள் ஆகியவற்றின் இருப்பிடம். உனது முகம் பௌர்ணமி நிலவினை ஒத்திருந்தாலும் மூன்றுதாபங் களெனும் இருளைப் போக்கும் உச்சிநேர சூரியனின் கதிர களானவள்.

உனது உடலின்மீது கவசமும் கைகளில் கேடயம், வாள், சூலம், ஈட்டி, வில், அம்பு ஆகிய யாவும் உள்ளன. நீ யுத்தகளத்தில் பயங்கர ரூபத்துடன் அரக்கர்களைக் கொன்று தீர்ப்பவள், பூதம், பிசாசு, பிரேதம், சூன்யக்காரி போன்ற தீய சக்திகளான பறவைகளுக்கும் மிருகங்களுக கும், அவற்றைப் பிடிக்க உதவும் வலை போன்றவள்.

சிவபெருமானின் அன்புக்குரியவளே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! உனது நாமங்களும் ரூபங்களும் எண்ணி

லடங்கா. நீ அகில உலகங்களுக்கும் தலைவியானவள், இமயபர்வதத்தின் புதல்வியானவள். பக்தர்களைக் காப்பவளே! துளசிதாசனாகிய நான் உன்னிடம் சரணடைந்திருக்கிறேன். நீ எனக்குக் காட்சியளிப்பதோடு, ஸ்ரீரகுபதியின் சரணங்களில் நீங்காத அன்பும் திடமான பக்தியும் இருக்கும்படி அருள்புரிவாயாக!

## 17

## கங்கா ஸ்துதி

பகீரதனின் புதல்வியான* கங்கையே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! நீ முனிவர்கள் கூட்டத்தைப் போன்ற சகோரப பறவைகளுக்கு நிலவொளியைப் போன்றவள். மானிடர், நாகர், தேவர் யாவரும் உன்னைத் துதிக்கிறார்கள். எல்லாம் அறிந்தவளே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

---

* சூரியவம்சத்தைச் சார்ந்த, பராக்ரமசாலியான சகரர் என்னும் அரசருக்கு இரு மனைவியர் இருந்தனர். அதில் ஒருவருக்கு அம்சுமான் என்ற புதல்வனும் மற்றவருக்கு அறுபதாயிரம் புதல்வர்களும் பிறந்தனர். அவ்வரசனின் பராக்ரமத்தைக் கண்டு இந்திரன் எப்போதும் பொறாமை கொண்டிருந்தான். அவ்வரசனின் அசுவமேதயாகக் குதிரையைத் திருடி அதைக் கபில முனிவரின் ஆசிரமத்தில் கட்டிவிட்டான். அக் குதிரையைத் தேடிச் சென்ற சகரரின் அறுபதாயிரம் புதல்வர்கள் முனிவரின் ஆசிரமத்தில் குதிரை இருப்பதைக் கண்டு கடின வார்த்தைகளை மொழிந்தனர். அதைக் கேட்ட முனிவர் கோபமடைந்து அவர்களை எரித்துவிட்டார். அம்சுமானுக்குப் பகீரதனென்னும் புதல்வனிருந்தான். அம் முனிவரின் சாபவிமோசனத்திற்காக அவன் கடுந்தவஞ் செய்து கங்காதேவியை பூலோகத்திற்குக் கொண்டுவந்தான். எனவே கங்கா தேவி பகீரதனின் புதல்வி என்றும் கூறப்பெறுகிறாள்.

நீ விஷ்ணுபகவானின் பாதகமலங்களில் தோன்றி யவள், சிவபெருமானின் சிரசில் ஒளிவீசிக் கொண்டிருப் பவள், விண்ணிலும் மண்ணிலும் பாதாளத்திலும் மூன்று தாரைகளாக ஓடிக்கொண்டிருப்பவள்.

தெய்வத்தால், உடலால், உலகியலால் ஏற்படும் மூன்று வகை தாபங்களையும் (ஆதிதைவிக, ஆதிபௌதிக, ஆதியாத்மிக தாபங்களை) போக்கவல்ல நிர்மலஜலமாக இருப்பவள். நீ அழகிய வண்டினங்களையும் கடலலை களையும் மாலையாகக் கொண்டவள். பூஜையில் முன்னோர்கள் கொடுத்த முக்கியத்துவத்தின் காரணமாக உனது நீரோட்டம் நிலவொளியைப் போன்று ஒளிவீசிக் கொண்டிருக்கிறது. அந்த நீரோட்டம் உலகபாரத்தை அழிக்கவல்லது, பக்தியெனும் கற்பகவிருட்சத்திற்குத் திறவுகோல் போன்றது.

உனது கரையோரத்தில வாழும் பறவை, நீரிலும் நிலத்திலும் வாழும் உயிரினங்கள், புழு பூச்சிகள், தவ முனிவர் ஆகிய எல்லோரையும் சமதிருஷ்டியோடு காப்பவள். மோஹரூப மகிஷாசுரனை அழிப்பதற்காகக் காளி ரூபத்தை எடுத்த கங்கையே! துளசிதாசனாகிய எனக்கு, ரகுவம்ச வீரரான ஸ்ரீராமரின் திருநாமத்தைக் கூறிக்கொண்டு உனது கரைதனில் உலாவிக்கொண்டிருக் கும்படியான புத்தியை அளித்து அருள்புரிவாயாக!

## 18

அனைத்துலகையும் புனிதப்படுத்தும் தேவ கங்கையே, உனக்கு வெற்றி உண்டாகட்டும்! நீ விஷ்ணுபகவானின் சரண கமலங்களில் மதுவினை ஒத்த அழகிய ஜலத்தை ஓடும்படியாகச்செய்பவள், துன்பத்தைப் போக்குபவள், பாப கர்மங்களை நாசம் செய்பவள்!

விஷ்ணுபகவானின் திருவடிகளின் துகளகள் நிறைந் திருக்கும் உனது நிர்மலமான ஜலம் பிரம்மாவின் கமண்டலத்தில நிறைந்திருக்கிறது. நீ சிவபெருமானின் தலையையே வாசஸ்தலமாகக் கொண்டிருப்பவள். ஜஹ்நு மகரிஷியின புதல்வியே! எண்ணற்ற நாமங்களைக் கொண்டிருப்பவளே! நீ சகர அரசனின் அறுபதாயிரம் புத்திரர்களையும் சாபம் நீக்கிப புண்யமடையச் செய்தவள்; மலைகளின குகைகளை உடைத்தெரியும் வல்லமை உடையவள, யக்ஷா, கந்தர்வா, முனிவா, கின்னரா, நாகாகள், தைத்யர், மானிடா யாவரும் அவரவரது துணைவியருடன உனது நீரில் ஸநானம் செய்து பெரும் புண்யத்தை அடைகிறார்கள். நீ மோட்சத் திற்குச் செல்ல உதவும ஏணியைப் போன்றவள்; அறிவை யும் ஞானத்தையும் அளிபபவள்; மோகம, மதம், காமம் ஆகிய தாமரைகளின அழிவுக்குப பனிக்கால இரவினைப போன்றிருப்பவள.

கரைகளின இருமருங்கிலும் அடர்ந்திருக்கும மூங்கில் களின் நடுவே உலகத்தை மகிழ்விக்கும் உனது நீரோட்டம் அமைந்திருக்கிறது. அவ்வமுகிய காட்சியானது ஆதிசேஷன நீலநிறமஞ்சததில படுத்திருக்கிறாரோ என நினைக்கும்படியாகக் காட்சியளிக்கிறது. தேவாகளின தலைவியான ஹே கங்காதேவி! உனது ஆயிரக்கணக்கான நீரூற்றுகளும் ஆதிசேஷனின் ஆயிரம் தலைகளைப போன்றுள்ளன.

மூவுலகையும் ஆட்சி புரிபவளே! உனது சக்தி அபார மானது. நீ ஒப்பற்ற அழகுடையவள, மணிமகுடம் தரித்த அரசாகளால் வணங்கப பெறுபவள. ஹே தாயே! பயத்தைப போக்குபவளே! துளசிதாசனாகிய நான்

ரகுவீரரின் திருவடிகளிடம் பரிபூர்ண அன்பினைச் செலுத்துவதற்கு அருள்புரிவாயாக!

## 19

ஹே கங்கையே! உனை நினைத்தமாத்திரத்தில் பாபங்களையும் மனம், வாக்கு, காயங்களால் ஏற்படும் மூன்றுவித தாபங்களையும் போக்கிவிடுகிறாய். மனோரத ரூபப் பழங்களை நிரம்பிய கற்பகத்தருவைப் போன்று நீ பூலோகத்தில் ஒளிவீசிக்கொண்டிருக்கிறாய்.

பூரண சந்திரனை ஒத்த அமுதமெனும் ஜலத்தில் ஏற்படும் உனது அலைகள், ராமசரிதத்தைப் போன்று ஒளிவீசிக்கொண்டிருக்கின்றன.

ஹே ஜகன்மாதா! நீ இல்லாவிட்டால், இந்தக் கலியுகம் யாது செய்யுமோ தெரியவில்லை! இந் நிலையில் இந்தப் பயங்கர பிறவிப் பெருங்கடலைக் கடக்க, துளசி தாசனாகிய என்னால் எவ்வாறு இயலும்?

## 20

ஹே மாதேஸ்வரி கங்கையே! நீ சிவபெருமானின் தலையில் குடியிருப்பவள், ஆகாயம், பாதாளம், பூலோகம் ஆகிய மூன்று மார்க்கங்களிலும் ஒளிவீசிக் கொண்டிருப்பவள்; தேவர், மானிடர், முனிவர், நாகர், சித்தர், சானறோர் முதலானவர்க்கு நன்மையைச் செய்பவள்.

உனைப் பார்த்தாலே துன்பம், தோஷம், பாபம், தாபம், தரித்திரம் யாவும் நாசமடைந்துவிடும். சகர

அரசனின் புதல்வர்களின் பெருந்துன்பத்தைப் போக்கிச் சமுத்திரத்தில் நீரைப் பரப்பியவள் நீயே!

நீ நான்முகன், விஷ்ணு, சிவன் ஆகியோரின் பெருமையை உயர்த்தியவள். எவ்வாறு உனது நீரானது தூய்மையாக இருக்கிறதோ, அவ்வாறே ஸ்ரீராமசந்திரரின் புகழினை, துளசிதாசனாகிய நான் பாடும்படியாக எனது வாக்கினையும் தூய்மை உடையதாக்குவாயாக!

## 21

## யமுனை ஸ்துதி

ஹே யமுனா தேவியே! உன் ஓட்டம் அதிகரிக்கும் போது புண்யத்தின் ரூபமான வீரர்கள் கலி என்னும் அரசனை விரட்டி விடுகிறார்கள்.

மழை காலத்தில் தண்ணீர் அதிகரித்து கலங்கலாக மாறும்போது யமதூதர்களின் முகங்களும் கறுத்து விடுகின்றன. யாரை யமலோகத்திற்கு அழைத்துச் செல்வோம் என்று பரிதவிக்கின்றனர். அப்படி நீ உன் புண்ய ரூப மேகத்தில் உலக மக்களின் பாபத்தை போக்கு கிறாய்.

## 22

## காசி ஸ்துதி

கலியுகத்தில் காமதேனுவை ஒத்திருக்கும் காசி நகரமே! உடலை வருத்தி உனக்குச் சேவை செய்வது நல்லது, துன்பம், துயரம் மற்றும் பாவத்தைப் போக்க வல்லது; அனைத்து மங்களங்களின் புனிதஸ்தலமாக இருப்பதும் நீயே!

உனது நாற்புறங்களும் பெருமை மிகுந்த காமதேனுவின் நான்கு புனித திருவடிகளாகும். அத் திருவடிகளை ஸ்வர்க்கத்தில் வசிப்பவர்களும் வணங்குகிறார்கள். இங்குள்ள தீர்த்தகட்டங்களே உனது புனித அங்கங்களாகும்; எல்லையற்றதும் அழிவற்றதுமான கணக்கற்ற சிவலிங்கங்களே ரோமமாகும்.

இந்நகரத்தின் மத்யபாகமே காமதேனுவாகும். அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்பலன்களே நான்கு ஸ்தனங்களாம். பசு தன் கன்றுக்குப் பாலைச் சுரந்து அளிப்பதைப் போன்று வேதத்தில் நம்பிக்கை கொண்டிருப்பவர்களான கன்றுக்கு இறைவனருள் எனும் பாலைக் காசி நகரம் அளிக்கிறது. வருணா நதி காமதேனுவின் கழுத்தில் தொங்கும் சதையைப் போன்று பிரகாசித்துக் கொண்டும் அஸியெனும் நதி வாலைப் போன்று பரந்தும் காணப்படுகிறது.

தண்டதாரிபைரவனே உனது இரண்டு கொம்புகள், அந்த இரண்டு கொம்புகளும் பாபஞ்செய்வதில் நாட்டமுள்ள துஷ்டர்களைப் பயமுறுத்திக் கொண்டே இருக்கின்றன. லோலார்க, திரிலோசனம் ஆகிய இரண்டு தீர்த்தகட்டங்களுமே உனது இரு விழிகளாகும். கர்ணகண்டம்* என்ற இடமே உனது கழுத்தில் கட்டப் பட்டிருக்கும் மணியாகும்.

---

* [காசியில் பிராமண சிவபக்தனொருவன் சிவநாமத்தைத் தவிர வேறு நாமம் தன் காதில் விழாமலிருப்பதற்காகக் காதில் மணியைக் கட்டிக் கொண்டிருந்தான். தன்னிடம் யாராவது வேறு நாமத்தைக் கூறினால் மணியை ஆட்டிக்கொண்டே அந்த வேறு நாமத்தைக் கேட்காமல் ஓடி விடுவான் இதனால் அவனது பெயர் கர்ணகண்டா (காதில் மணி யுடையவன்) என வழங்கலாயிற்று. அதனால் அவன் இருந்த இடத்திற்குக் கர்ணகண்டா என்ற பெயர் ஏற்பட்டது.]

மணிகர்ணிகாவெனும் பெயருடைய இடமே நீர்ப்பலினை ஒத்த உனது முகமாகும். கங்காதேவியிடமிருந்து கிடைக்கின்ற சுகம்தான் உனது அழகாகும். இம்மைக்கும் மறுமைக்கும் பரிபூரணமான பஞ்சகோசியின் பரிக்ரமங்களே உனது மகிமையாகும்.

இரக்க குணமுடைய விசுவநாதரே உன்னைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறார்; பார்வதிதேவிதான் வளர்த்துக் கொண்டிருக்கிறாள். அஷ்டசித்திகளும் இந்திராணியும் சரஸ்வதியும் உனனை வணங்கிறார்கள். மூவுலகுக்கும் தலைவியான லட்சுமிதேவி உனபக்கம் பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

நமசிவாயமெனும் பஞ்சாட்சர மந்திரமே உனது மூச்சாகும், பிந்து மாதவன்தான் ஆனந்தம். ஐந்து நதிகளும் பசுவிலிருந்து உண்டாகும் பஞ்ச கவ்யமாகும் (பால, தயிர, நெய, சாணம், கோமூத்திரம்). உலகை மகிழ்விக்கின்ற 'ராமா' எனும் திருநாமமே பிரம்மத திறக்கும் ஜீவன்களுக்கும் சமமானதாக இருக்கின்றது.

இங்கு நற்காரியங்களையும் தீயசெயல்களையும் செய்து மடியும் அத்தனை ஜீவனகளுக்கும், அவரவர்கள் செய்த நல்லன, தீயனவாகிய கர்மரூப புலலே அதனுடைய உணவாகும். அவ் வுணவை உண்ணும் காமதேனு தரும மோட்சமெனும் புனிதமான பாலை, மரிக்கும் ஜீவன்கள் பருகுகின்றன. இவ்வையக, வாழவை வெறுத்த மகாமுனிவர்களுக்கும் கிடைப்பதற்கு அரிதானது இந்தக் காமதேனு தரும் மோக்ஷமாகிய பால.

புகழ்வான பிந்துமாதவன் தன கைகளால காசி நகரத்தைக் கலைச்செல்வத்துடன நிர்மாணித்ததாகப் புராணங

கள கூறுகினறன. யாா நனமையை விரும்புகிறார் களோ அவாகள் காசி நகரததில வசித்து ஸ்ரீராமருடைய திருநாமத்தை ஜெபிப்பார்களாக. ஏ துளசிதாஸ்! நீயும் சுகததை விரும்புவதாக இருந்தால காசி நகரத்தில வசிபபாயாக!

## 23

## சித்ரகூட ஸ்துதி

எல்லாத துன்பங்களையும் போக்குகின்ற சிதரகூட மலையானது கலியுகத்தை நாசபபடுத்தி சநதோஷததை உண்டாக்க வலல பசுமையான மரமாகும். அங்குளள புனிதபூமி, அநத மரததிறகாக நீரைத் தேககிவைக்கும பளளமாகும். அதன் நான மருஙகிலும் இருககினற வனததில—தோட்டத்தில் பல அபூாவ மரங்கள் இருக கின்றன.

தோட்டககாரன தோட்டத்திறகு நீரைப் பாய்ச்சும் போது அநநீா எபபடிப் புல, மரம், செடி என்று வித்தியாசம் பாராமல பாயகினறதோ, அதேபோன்று மந்தாகினி நதிரூப தோட்டக்காரனும் மானிடா யாவரையும் உயர்ந்தோர், தாழ்நதோா என்று வேறு பாடின்றி—சமமாகப பராமரிக்கிறது.

அம் மலையின் சிகரமே அம் மரத்தின் கிளை களாகும், அதிலுளள மரஙகளே இலைகளாகும்; சுனை களிலுளள அமுதம போன்ற ஜலம்தான் மிருதுவான காறறாகும்; அஙகுளள காறறுதான் அதனுடைய அழகாகும்.

அங்கு தவமிருக்கும் முனிவர்தான் கிளி, குயில், மற்றும் வண்டினங்களாவர். அம் முனிவர்களுடைய சாதனைகள்தான் அத் தோட்டத்தின் மலராகும். அறம், பொருள், இன்பம், வீடு இவை நான்கும்தான் அழகிய பழங்களாகும்.

அம் மரத்தின் நிழல்தான உலகின் பிறப்பு, இறப்பு எனும் உச்சிவெயிலைத் தணிக்கவல்லது. ஞானகியின் அன்புக்குரிய ஸ்ரீராமர் அங்கு வாசம்செய்து அதன் பெருமையை மேலும் ஓங்கச் செய்திருக்கிறார்.

அதிர்ஷ்டவசத்தால் நன்னடத்தையுள்ளவர்களும் யோகிகளும் அங்கு வந்தடைந்தவுடன் அவர்களது எல்லா ஆசைகளும் நிறைவேறிவிடும். அது நிர்க்குணமுடையது, கால வரம்பற்றது, காமவினையற்றது. தயாளுவான சீதா, ஸ்ரீராமா, லட்சுமணரே அதனைப் பாதுகாக்கின்றனர்.

துளசிதாஸ! ஸ்ரீராமசந்திரமூர்த்தியின் திருவடி நிழலை அடைய விரும்பினால நீ மனதை ஒரு நிலைப்படுத்திச் சித்ரகூட மலையினை வணங்குவாயாக!

## 24

ஏ மனமே! இப்பொழுது நீ எச்சரிக்கையுடன் சித்ரகூட மலைக்குச் செல்வாயாக. கலியுகமானது கோபமடைந்து நல்வழிகளை ஞானம், பக்தி, வைராக்கியம் ஆகியவற்றை அழித்துவிட்டிருக்கிறது. இதனால் மாயை, மோகம், பாபங்கள் யாவும் அதிக அளவில பரவியுள்ளன,

நீ ஸ்ரீராமசந்திரமூர்த்தியின் திருவடிகள் பதிந்த அந்தப் புனித பூமியைச் சென்று பார்ப்பாயாக. ஸ்ரீரகுவீரரின் விளையாட்டு தலமான அந்த வனதைப் பார். அங்கு கபடம், வெளிவேஷம், வஞ்சம் ஆகியவற்றை அழித்து, வாழ்க்கைப் பந்தங்களிலிருந்து விடுவிக்கும் கருணைமயமான மலைச் சிகரங்களைப் பார்.

உலகத்தந்தை பிரம்மன், விஷ்ணு, சிவன் யாவரும் தங்கள் தங்கள் தொழிலை விட்டு (படைத்தல், காத்தல், அழித்தல்) அனுசூயையினால் குழந்தைகளாக கபடமற்றவர்களாக அவதரித்தார்கள். எந்த ஆசிரமத்திலுள்ள நுழைந்தவுடனேயே பாண்டவர் மற்றும் மஹராஜா நளனுடைய துன்பங்கள் நீங்கிற்றோ, அந்த இடத்திற்குச் செல்வதில் தாமதம் செய்யாதே. ஏனெனில் தாமதம் செய்யும் ஒவ்வொரு நிமிடமும் வாழ்நாளில் கடந்துவிட்ட பலவருடங்களுக்குச் சமமானது என்பதை உணர்ந்து கொள். அங்கு சென்றவுடன், எந்த மந்திரத்தை ஜபித்து சிவபெருமான் ஆலகால விஷத்தை உண்டபின் பும் அழிவற்றவராய் ஆனாரோ, அந்த மந்திரத்தை ஜபித்துக் கொண்டிரு!

நீ பிரதி தினமும் ராமநாமத்தை ஜபித்துக் கொண்டும் புனித பயஸ்வினி நதியில் நீராடிக்கொண்டும் அதன் நீரைப் பருகிக்கொண்டும் இருப்பாயானால் ஸ்ரீராமர் உனது மனவிருப்பங்களைப் பூர்த்தி செய்துவிடுவார். இச் சுலப வழியினால் அவரிடம் சரணடைவாயானால் உனக்கு அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்பலன்களும் கிடைத்துவிடும்.

சித்ரகூடத்திலுள்ள 'காமதாநாத' எனும் மலைதான் எல்லா ஆசைகளையும் பூர்த்தி செய்யும் கற்பகவிருட்சமும்

மணிமகுடமுமாகும். அது யுகயுகமாகப் பூவுலகில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. சித்ரகூடத்தின் பெருமையை அனைவரும் அறிந்துகொள்ள வேண்டிய அவசியமிருப்பினும், ஏ துளசிதாஸ! நீ குறிப்பாக அறிந்து கொள்ளவேண்டும். ஏனெனில் அது ஒன்றுதான் உனது நம்பிக்கைக்கும் அன்புக்கும் உரியதாக இருக்கிறது.

## 25

## ஹனுமன் ஸ்துதி

ஹே ஹனுமான்! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! அஞ்ஜனையின் கர்ப்பக்கடலிலிருந்து உதித்த சந்திரனை ஒத்த தேவகுலமான குமுத மலரை மலரச் செய்தின்றவனே! உனது தந்தை கேசரியின் சகோரப் பறவை போன்ற அழகிய கண்களுக்கு மகிழ்ச்சியை அளிப்பதோடு எல்லா மக்களுடைய துன்பங்களையும் போக்குபவனே!

நீ உனது குழந்தைப் பருவத்தில், உதயசூரியனை விளையாட்டுப் பொருளென்று நினைத்து அதை எடுத்துக் கொண்டவன்! அச் சமயம் சூரியனைக் காக்க வந்த ராகுவையும் விழுங்க நினைத்ததோடு, ராகு, சூரியன், இந்திரன் ஆகியோருடைய கர்வத்தையும் குறைத்தவன! சரணாகதி அடைந்தவர்களின் பயத்தைப் போக்குபவனே! பதினான்கு லோகங்களின் தலைவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

யுத்தக்களத்திலும் தாமததைக் கடைபிடிக்கும் மாவீரனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! உலகரட்சகனான நீ ஸ்ரீராமருக்கு தொண்டு செய்பவன், தேவர்களில் முதன்மையான ருத்ரரின் அவதாரம், பிராமணர்,

தேவர், சித்தர், முனிவர் ஆகியோரின் ஆசிக்கடலே உனது சொரூபம். மாசற்ற குணமுடையவனே! ஞானக்கடலே! உசிதசிட்சையினால் சுக்ரீவனைக் காப்பாற்றி வெற்றி பெற்ற ஹனுமானே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! மகாபராக்ரமசாலியான வாலியின் மரணத்திற்குக் காரணமாக இருந்தவனே! சமுத்திரத்தைத் தாண்டியபோது சிம்ஹிகாயெனும் அரக்கியை அழித்த சிங்கமே! அரக்கர்களின் இலங்கையில் கலக்கத்தை ஏற்படுத்திய வாலநட்சத்திரமே!

ஜானகிதேவியின் கவலையை அகற்றியவனே! அசோக வனத்தை அழித்தவனே! நிர்ப்பயமாக மேகநாதனின் பிரம்மாஸ்திரத்திற்குக் கட்டுண்டவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! நீ உனது வாலின் தீ மாலையைக் கொண்டு ராவணனின் இலங்கையை எரித்து ஹோமவிதகனம் போன்று கலக்கத்தை ஏற்படுத்தியவன்!

ஸ்ரீராமரையும், லக்ஷ்மணரையும் மகிழ்விப்பவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! நீ வானரம் மற்றும் கரடிகளின் சேனையை ஒன்றுசேர்க்கும் தலைவனாக இருந்து சமுத்திரத்தின்மீது பாலம் கட்டியவனே. தேவர்களுக்கு நன்மையைச் செய்பவனே! சூரிய குல நட்சத்திரமான ஸ்ரீராமருக்கு யுத்தத்தில் வெற்றிகிட்டக் காரணமாக இருந்தவனே!

உனது சரீரம், பல், நகம், முகம் யாவும் வஜ்ரத்தை ஒத்துள்ளன. மரங்களையும் மலைகளையும் எடுத்து வீசக்கூடிய அளவுக்கு உனது கைகள் வலிமையுடையவை; செக்கில் எள்ளினைப் போடுவது போன்று அரக்கர்களையும் பெரிய பெரிய வீரர்களையும் அழித்தவன் நீ!

ராவணன, கும்பகாணன், மேகநாதன, காலநேமி ஆகியோரின அழிவுககுக காரணமாக இருநதவனே! உனக்கு வெற்றி உணடாகடடும்!

நீ செயய முடியாததை முடிக்கவும, நடககவேண்டிய வற்றை நடககமுடியாமலும செய்யக் கூடியவன, மிகப பயங்கரமானவன, நிலத்திலும நீரிலும் பாதாளததிலும ஆகாயததிலும் தடையற்ற கதியை உடையவன்.

உலகப பிரசிததம் பெற்ற வீரனே! உனககு வெற்றி உணடாகட்டும்! வேதஙகளும பணடிதர்களும இனிய குரலில உனது குணஙகளை வாணிககின்றனர். துளசிதாச னாகிய எனது பயத்தைப போக்குகின்ற ஸ்ரீசீதாரமண ருடன அயோததியில எபபோதும நீ பிரகாசிததுக் கொணடிருக்கிறாய்!

## 26

ஹே வானர அரசனே! உனககு வெற்றி உணடாகட டும்! சிங்கததை ஒத்த பராக்ரமசாலியே! தேவாகளில உயர்ந்தவனே! ஆனநதம் மற்றும் மஙகளத்தின் இருப்பிடமானவனே! கபாலஙகளை அணிந்திருக்கும் சிவபெருமானின் அவதாரமே! மோகம, காமம், காமம் கோபம ஆகியவை நிறைந்த இவ வுலகமெனும் இரவுக்குச் சூரியனைப போனறவனே! உனககு வெற்றி உணடா கட்டும்!

தேவமாதா அஞ்ஜனிககுப் பிறநத வானரச் சிஙகமே! உலகத துன்பங்களைப போக்குபவனே! ஆளபவன், ஆளபபடுபவனைப போன்றுள்ள சகரவாகப பறவைகள மற்றும் தாமரை மலரின் துனபததைப

போக்கும் சூரியனைப் போன்றவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! பலமுடைய பருத்த சரீரத்தைக் கொண்ட உனது பலமான புஜங்கள் வஜ்ரத்தாலானவை. உனது நகங்களும் பற்களும் வஜ்ரத்தைப்போல பிரகாசிக்கின்றன. உனது வால் மிகவும் நீளமாக இருக்கிறது. பகைவர்களை அழிக்கும் ஆயுதங்களை வைத்திருப்பவனே! நீ மலைகளையும் கையில் எடுக்க வல்லவன்!

சீதாதேவியின் கவலைகளையும் துன்பங்களையும் போக்குகின்றவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! ராமர்-லட்சுமணரெனனும் இரு தாமரைகளையும் மலரச் செய்பவனே! நீ வானரங்களின் விளையாட்டுத் தனத்துடன் வாலினால் இலங்கையை எரித்து அசோக வனத்தை அழிப்பதற்கான உச்சிவெயிலைப் போன்றவன்.

சமுத்திரத்தின்மீது கற்களாலான பாலத்தை அமைத்து, அரக்கர்களின் மகிழ்ச்சியின் அழிவிற்குக் காரணமானவனே! கொடிய ராவணன் கும்பகர்ணன், மேகநாதன் ஆகியோரின் மரணத்திற்கான மர்மஸ்தானங்களை அறிந்து அவர்களின் கர்மத்தின் பலனைப் பெறச் செய்தவனே! மூவுலகத்தின் அபூர்வ ஆபரணமே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! விபீஷணனுக்கு வரமளித்ததோடு யுத்தகளத்தில் ஸ்ரீராமசந்திரருடன் பெருமைமிக்க காரியங்களைச் செய்தவனே! புஷ்பக விமானத்தில் அமர்ந்து, லட்சுமணர் மற்றும் சீதாதேவி சமேதராக இருக்கும் சூரியவம்சத்தின் சூரியனான ஸ்ரீராமசந்திர மூர்த்தியின் புகழினைப் பரப்புகிற கொடி போன்றவனே உனக்கு வெற்றி உண்டாகட்டும்! பிறரை அழிக்க மற்றவர்களால் செய்யப்படுகின்ற மந்திரதந்திரங்களைத் தோற்கச் செய்து ஏவல், சூனியம், பேய், பிசாசு மற்றுமுள்ள துஷ்ட

தேவதைகளை வெற்றி காண்பவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

பலவித கலைகளிலும் சிறந்து, வேதங்களையும் வேதாகமங்களையும், வேதாந்த சாஸ்திரங்களையும் நன்கு அறிந்து ப்ரம்மஞானியாய இருக்கின்றவனே! எங்கும் வியாபித்திருப்பவனே! ஞானம், விஞ்ஞானம், வைராக்கியம் ஆகியவற்றின் இருப்பிடமே! சுகதேவரும் நாரதரும் உனது நிர்மலமான குணங்களைப் பாடிக் கொண்டிருக்கிறார்கள். உனக்கு வெற்றி உண்டாகட்டும்.

காலம், குணம், காமம் முதலான மாயைகளை நீக்க வல்லவனே! உனது ஞானம் மற்றும் விரதம் நிலையானது. சத்தியம் தவறாமல் தர்மத்தின் வழியில் நடப்பவனே! சித்தர், தேவர், மகாயோகிகள் யாவரும் எப்பொழுதும் உனக்குச் சேவை செய்துகொண்டிருக் கிறார்கள். பயமெனும் இருளைப் போக்குவதற்குச் சூரியனைப் போன்றவனே! துளசிதாசனாகிய நான் உன்னை வணங்குகிறேன்.

## 27

மங்களத்தின் இருப்பிடமும் உலகப்பாரத்தைப் போக்குபவனுமான ஹனுமானே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! உனது சரீரம் குரங்கின் சரீரத்தைப் போன்றுள்ளது. ஆனால் நீயோ சாட்சாத் சிவனின் அவதாரம். ராக்ஷஸர்களாகிய விட்டில் பூச்சிகளை அழிக்க ஸ்ரீராமசந்திரமூர்த்தியின் கோபாக்னியின் சுவாலை போன்றவனே! வாயு மற்றும் அஞ்சனா தேவியின் ஆனந்தத்தின் இருப்பிடமே! உனக்கு வெற்றி உண்டா கட்டும்! துன்பக்கடலில் தலைகுனிந்து இருந்த

சுகிரீவனுககு இணைபிரியாத தோழனாக இருநதவனே! கொடிய அரககாகளின கோபமாகிய காலாக்னியை அழிதது, சிததர், தேவா, நலலோரககளின ஆனநதக கடலாக விளஙகுபவனே! உனககு வெற்றி உண்டாகட்டும்! ஏகாதசருத்ராகளில முதனமையானவனே! உலகிலுள்ள பிரசித்தமானவாகளுககெல்லாம் அர்சனைப போனறவனே! சாம வேதததைப பாடுவதில முதனமை யானவனே! நீ காமதேவனை வெலவதில முதல்மையான இடததைப் பெறற தகுந்தவன. ஸ்ரீராமசநதிரமூர்த்தியின பகதனான நீ ராமபகதாளைக காபபவன. உனக்கு வெற்றி உணடாகட்டும்! யுததகளததில வெற்றியடையச் செய்பவனே! ஸ்ரீராமருடைய சநதேசத்தை சீதாதேவி யிடம் கொணடு சென்றவனே! பரதன முதலான அயோதயாவாசிகளிடம நறசெயதியை அறிவிதது மகிழ் வித்தவனே! நீ ஸ்ரீராமசந்திரமூர்த்தியைப் பிரிநததால் ஏறபட்ட துன்பததால பீடிககப்பட்ட பரதன் முதலான அயோதயாவாசிகளின மனம குளிரவைபபதற்கான கறபகவிருட்சம! ஹே, ராஜசிமமாசனததினமீது ஒளி வீசிக்கொண்டிருககும ஜானகியின மணாளனான ஸ்ரீராமசந்திரரைக கண்டு அளவறற ஆனந்ததததில குதித்தாடுபவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! ஸ்ரீராமரின நகரமான அயோததியில வாசம செய்கிற ஹனுமானே! இநத துளசிதாசனின உளளததில, நீ ஸ்ரீராமசந்திரமூர்த்தியின குடும்பததுடன எபபொழுதும வாசம் செயவாயாக!

## 28

ஹே வாயு குமாரனே! உனககு வெற்றி உண்டா கட்டும். உனது வலிமை புகழமிக்கது, புஜங்கள் விசால மானவை. அளவற்ற பலம் பொருநதிய உனது வால் மிக

நீளமானது, உனது உருவம் மேரு மலையினை ஒத்ததாக இருக்கிறது, ரோமம் அழகிய ஒளிபொருந்திய கொடிகளைப்போன்று ஒளிவீசிக்கொண்டிருக்கிறது உனக்கு வெற்றி உண்டாகட்டும்! கம்பீரமான உனது முகம் உதயகால சூரியனைப் போன்றிருக்கிறது, கண்கள் மஞ்சள் நிறமாக இருக்கின்றன. நீ பழுப்பு நிற ஜடாமுடியைக் கொண்டிருக்கிறாய்; உனது புருவங்கள் வளைந்து இருக்கின்றன; பற்களும் நகமும் வஜ்ரத்தைப் போன்றுள்ளன. பகைவரெனும் மதம் பிடித்த யானைகளை அடக்கும் சிங்கத்தைப் போன்றவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! நீ பீமன்* அர்ஜுனன்*, கருடன்* ஆகியோரின் கர்வத்தை அடக்கியதோடு அர்ஜுனனின் கொடிக் கம்பத்தின் மீதமர்ந்து அவரைக் காப்பாற்றினாய். பீஷ்மர், துரோணாச்சாரியார், கர்ணன் ஆகியோரால் காப்பாற்றப்பட்டு வந்த துரியோதனனின் சேனையின் அழிவுக்கு முக்கிய காரணமானவனே! உனக்கு

---

* (1) பாண்டவர்கள் வனவாசத்தில் இருந்தபோது ஒருநாள் பீமன் கர்வத்துடன் சென்றுகொண்டிருந்தான் வழியில் ஒரு குரங்கு படுத்திருப்பதைக்கண்டு வழிவிடும்படி கூற, குரங்கு தான் வயதானவன் என்றும் தனது வாலை நகர்த்திவிட்டுப் போகும்படியும் கூறியது பீமன் கோபத்துடன் அதை இழுத்து தூரத் தள்ளிவிட நினைத்து, முழுப்பலத்துடன் அதைத் தள்ளியபோதும் அதன் வாலைக்கூட அவனால் அசைக்க முடியவில்லை. இறுதியில் அக் குரங்குதான் ஹனுமான் என்பதை அறிந்து பீமன் வணக்கம் செலுத்தினான்.

* மற்றொரு சமயம் ராமருக்கும் ராவணனுக்கும் இடையே நடந்த சண்டையில் ஹனுமான் கொண்டிருந்த உருவத்தைத் தனக்கும் காட்டும்படி பீமன் கேட்டான் ''எனது ரூபம் மிகவும் பயங்கரமானது, பயந்துவிடுவாய்'' என்று ஹனுமன் கூறியதைக் கேட்க மறுத்தான் பீமன். உடனே அந்த ரூபத்தில் ஹனுமன் தரிசனம் தர, பார்க்க பயந்து பீமன் கண்களை மூடிக்கொண்டு நடுங்க ஆரம்பித்தான் இவ் விரண்டு நிகழ்ச்சிகளுக்குப் பின் பீமன் கர்வத்தைவிடுத்து ஹனுமாரிடம் சரணடைந்தான்.

வெற்றி உண்டாகட்டும். நீ உலகிலுள்ள கஷ்டங்களைப் போக்குவதோடு துஷ்டர்களின் கர்வத்தை அடக்குபவனாகவும் இருக்கின்றாய். ஆபத்து பயம், துஷ்கிரகம், ஆவிகள், திருடன், நெருப்பு, நோய் முதலானவைகளை நாசம்படுத்துபவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! பல கலைகளின் சமுத்திரமான நீ வேதங்களுக்கும் சாஸ்திரங்களுக்கும் உரை எழுதி இருக்கிறாய். காவியங்கள் மற்றும் அநேக கலைகளின் இருப்பிடமானவன் நீ! சாமவேதத்தை ஓதுபவன், பக்தர்களின் வேண்டுதல்களை நிறைவேற்றுபவன், சிவபெருமானின் அவதாரமாகவும் ஸ்ரீராமரின் அனுக்கிரகத்துக்கு சகோதரனாகவும் இருக்கின்றவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! சூரியனின் கிரணங்

[முன் பக்கம் தொடர்ச்சி]

* மகாபாரத யுத்தத்தில் அர்ஜுனன், கர்ணனின் தேர்மீது அம்பைச் செலுத்தியபோது கர்ணனின் தேர் வெகுதூரம் சென்றது ஆனால் கர்ணன் தனது அம்பைச்செலுத்தி அர்ஜுனனின் தேரைச் சிறிது தூரம்தான் நகர்த்த முடிந்தது ஆனாலும் கிருஷ்ண பகவான் கர்ணனை மட்டும் பாராட்டிய போது தன்னைப் பாராட்டவில்லையே என்று அர்ஜுனன் வருந்தினான் அதை அறிந்த பரமாத்மா தேரின் கொடிக் கம்பத்தில் அமர்ந்திருந்த ஹனுமாரை விலகிவிடும்படி சைகை செய்தார். ஹனுமன் விலகியவுடன் கர்ணனது அம்பினால் அர்ஜுனனின் தேர் வெகுதூரம் செல்ல ஆரம்பித்தது அர்ஜுனன் இதன் காரணத்தைக் கிருஷ்ணரிடம் கேட்டபொழுது ஹனுமாரினால்தான் தேர் வெகுதூரம் நகரவில்லை என்று காரணத்தைக் கூறியவுடன் அர்ஜுனனது தவறான எண்ணம் விலகியது.

* ஒருமுறை விஷ்ணு பகவான் ஹனுமாரை அழைத்து வரும்படி கருடனிடம் கூறினார். கருடன் ஹனுமாரை அழைத்தபொழுது ஹனுமன் கருடனை முன் செல்லுமாறும், தான் சிறிது நேரம் கழித்துப் பின் தொடர்வதாகவும் கூறினார். ஆனால் கருடன் தன் கூடவே வரும்படி வற்புறுத்தியபோது, தாமதித்துக் கிளம்பினாலும் தானே முன் செல்வேனென்று ஹனுமன் கூற, கருடன் தன் வேகத்தில் அதிக நம்பிக்கை கொண்டிருந்ததால் தன்னை இழிவு படுத்துவதாக நினைத்து அதிவேகமாகச் செல்ல ஆரம்பித்தார். ஆனால் அவர் விஷ்ணுபகவானை அடைந்தபோது அங்கு ஹனுமன் இருப்பதைக் கண்டு மிக்க வெட்கமடைந்தார்.

களால எரிக்கபபட்ட சம்பாதிககு* நீ புதிய இறக்கை களையும் கணகளையும் திவ்யமான சரீரததையும் அளிததாய. சதா கலியுகத்தின தொநதிரவுகளால் துன்பபபடுக கொணடிருககிற துளசிதாசனாகிய நான் உனனை வணங்குகிறேன. ஏனெனில எனககு நீதான தாய, தநதையுமாய் இருககினறாய்.

## 29

பூரண ஆனநதததின இருபபிடமே! வானரங்களில் சிங்கம் போனறவனே! கேசரியின புதலவனே! உலகைக் காக்கும் ஒப்பறற தலைவனே! உனக்கு வெற்றி உணடாகட்டும்! நீ அர்ஜுனா ரூப புனித நிலததிலுதித்த அழகிய ரதனம, பக்தர்களின குறைகளையும் கவலைகளை யும போககுபவன். ஹே சுவாமி! அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நானகையும நலகுபவனே! பிரமமலோக வைபவஙகளிலகூட பறறறறவனே, நினைவில, சொல்லில, செயலில தாமததைக கடைப்பிடிப்பவனே! ஸ்ரீராம பிரானின திருவடிகளில பறறுடையவனே! உனககு வெற்றி உணடாகட்டும்!

கருடனுக்குத் தன பலம, வேகம், புத்தி, ஆகிய வற்றினாலிருநத காவததைப போககியவனே! காம

* ரோட்டியின காரணமாக ஜடாயுவின சகோதரனான சம்பாதி ஒருநாள். சகோதரா ஜடாயுவுடன் சூரியனைத் தொட ஆகாயததில கிளம்பினார். புத்திசாலியான ஜடாயு சூரியனின் வெபபத்தை உணர்ந்து திரும்பிவிட்டார். ஆனால் சம்பாதியோ தொடர்நது சென்றதால சூரியனின் வெபபத்தில அவரது இறக்கைகள எரிந்து மால்யவான் மலையின்மீது விழ நேர்ந்து ஒருசமயம் சுக்ரீவனது ஆகஞையினால் வானரங்களும் கரடிகளும் சீதா தேவியைத் தேடுவதில் ஈடுபட்டிருந்தன. சம்பாதி சீதாதேவியைப பறறிய விவரத்தைக் கூறியதால் ஹனுமன அவர் மீண்டும் புதிய இறக்கைகளையும் நவீன கண்களையும அழகிய உடலையும் பெறும்படிச் செய்தார்.

தேவனை அழிக்கின்ற பூர்ண பிரம்மசாரியே! நாடகாசிரியனே! கவிஞர்களின் திலகமே! பார்புவதில் வல்லவரென்று கர்வம் கொண்டிருந்த கந்தவர்களை வென்றவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! வீரர்களில மகுடம் போன்றவனே! ராவணனின் முன்னிலையில மண்டோதரியின் கூந்தலைப்* பிடித்திழுத்தவனே! உலகத்தாயான ஜானகியின் துக்கத்தைக் கண்டு சகியாமல், யமதேவன் அனைத்துயிர்களையும் துன்பப் படுத்துவது போன்று, அரக்கர்களைத் துன்புறுத்தியவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! ராமாயணத்தைக் கேட்கும்போது புளங்காகிதமடைந்து உனது கண்களில நீர் ததும்பி, குரல் தழுதழுத்து விடுகிறது. ஸ்ரீராமரின் திருவடிகளென்னும் தாமரை மலரின் மதுவினைப் பருகும் வண்டு போன்ற ஹனுமானே! தயவுசெய்து என்னைக் காப்பாயாக! திரிசூலதாரி சிவஸ்வரூபமுடைய ஹனுமானே! துளசிதாசனாகிய நான் உன்னிடம் அடைக்கலம் புகுந்திருக்கிறேன்.

## 30

துளசிதாஸ்! யாருக்கு ஹனுமருடைய துணை இருக்கிறதோ அவர்களுடைய ஆசைகள் யாவும் நிறைவேறிவிடும் என்று ஆணித்தரமாகக் கூறிவிடலாம். நடக்க முடியாதவற்றை நடத்தக்கூடியவரும் நடக்கக் கூடிய

* யுத்த காலத்தில் ராவணன் மேற்கொண்டிருந்த யக்ஞத்தைக் கலைப்பதற்காக ஹனுமனை ராமர் அனுப்பி வைத்தார். தன் தலைவனின் ஆணையை நிறைவேற்ற வேறு உபாயம் ஏதும் தோன்றாததால் ராவணனின் கோபத்தைக் கிளறுவதற்காக ஹனுமான் மண்டோதரியின் கூந்தலைப் பிடித்திழுத்தார் கோபமடைந்த ராவணன் அவ்விடத்திலிருந்து எழுந்ததால் யக்ஞம் கலைந்துவிட்டது. உண்மையில் மண்டோதரியைப் பிடித்திழுக்காமல் ஹனுமன் மாயரூபத்தைப் பிடித்திழுத்தார் என்று கூறுவாரும் உளர்

வறறை நடககமுடியாமல செயயககூடியவரும் ஆவார் எனகிற விருது ஹனுமானைத் தவிர வேறு யாருககு மிலலை. ஆனநதமயமான ஹனுமானின் ரூபததை நினைததவுடனேயே அனைத்துச் சஙகடஙகளும் துயரங களும விலகிவிடும. ஹனுமானின கருணை நிறைந்த பார்வையானது எல்லா மங்களங்களுக்கும இருப்பிட மாகும. ஏனெனில, யாரமீது அவரது பார்வை இருககிறதோ அவர்களுககுப பார்வதி, சிவன், லக்ஷ்மணன, ராமா, ஜானகி ஆகியோருடைய கடைக்கண் பார்வை கிடைததுவிடுகிறது.

## 31

கேசரியின மைநதனான ஹனுமானிடததில முழு நமபிககை வைததிருப்பவர்களிடம் யார்தான் கோபத தைக் காட்டமுடியும்? பகதர்களைப பரவசப்படுததவும் பகைவர்களை அழிககவும் துஷ்டர்களைத் தலைகுனிய வைககவும் கூடிய பலம வேறு யாரிடததில் இருக்கிறது? இவருடைய பெருமையைப பற்றி வேதஙகளும் புராணஙகளும் தெரிவிக்கின்றன. வீரதீரங்களில இவரை விட உயர்ந்தவராக வேறு யாருளர்? பதவி இழந்தவர் களைப பதவி ஏறகச செய்யவும பதவியிலிருநதவர் களை இறஙகச் செய்யவும் (வாலி மறறும் ராவணனை பதவியிலிருநது இறக்கி, சுக்ரீவனையும் விபீடணனையும ராஜசிம்மாசனததில அமர்ததியவர்) கொடுத்த வாக கிற்குக கட்டுப்பட்டுத தேவர்களைத துன்பததிலிருநது விடுவிககவும் கூடிய திறமைசாலி இவரன்றி வேறு யார இருககிறார்கள்? சமுததிரத்தைத் தாண்டி இலஙகையை எரிப்பவரும் அஙகிருந்த பலம பொருநதிய பயஙகர அரக்கர்களை அழிக்ககூடியவரும் யார்? குழந்தைப் பருவச் செயல்களை நினைதது உதயகாலச் சூரியனை

இப்பொழுதும் அனுசும்படியாக வைத்திருப்பவரும் மோவாய்க் கட்டையின் இடியாலேயே வஜ்ராயுதத்தின் பறகளைத் துகள்களாக்கியவருமான இவரைப்போன்று வேறு யார் இருக்கிறார்கள்? லோக பாலகர்கள் அவருடைய கருணைப் பார்வையை எதிர் நோக்கு கின்றனர். போரில் குழப்பத்தை உண்டுபண்ணுகின்ற ஹனுமானின் தொண்டர்களாக இருப்பவர்கள் யாவரும், எப்பொழுதும் பயமின்றி இருப்பதோடு, ஆனந்தத்தையும் வெற்றியையும் அடைகிறார்கள். பூரண சந்திரனை ஒத்த ஸ்ரீராமரின் முகத்தை, சகோரப் பட்சியைப்போன்று பார்த்துக்கொண்டிருக்கும் ஹனுமானின் நாமமானது, பக்தர்களுக்குக் கற்பக விருட்சத்தைப்போன்றது, துளசிதாஸா! இழந்த பொருளை மீண்டும் பெற்றுத் தரக்கூடிய ஹனுமானின் புகழினைப் பாடுகிறவர்களுக்கு, அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கும் உள்ளங்கை நெல்லிக்கனியைப் போன்றதாகும்.

## 32

ஹே ஹனுமான்! நீ இவ்வாறு பிடிவாதமாக இருக்கலாகாது! ஸ்ரீராமரை ஒத்த வேறு தெய்வமில்லை, உன்னை ஒத்த வேறு தாதருமில்லை. நீ பார்த்துக் கொண்டிருக்கும்போதே குட்டிச் சிங்கமான என்னைக் கலியுக ரூபமான தவளை விழுங்கிக் கொண்டிருக்கிறது. கலியுக ரூபமானது உனது மனத்தையும் குணங்களையும் கூட கட்டுப்படுத்தி விட்டிருக்கிறதென்று நினைக்கிறேன். உனது உறுமலைக் கேட்டவுடனேயே பத்துத்தலை ராவணனது மூட்டுக்கள் தளர்ந்து விட்டன. இப்பொழுது அந்தச் சக்தி உனது உடலில் இல்லையோ, அல்லது நீ காவ லடைந்து விட்டாயோ, தெரியவில்லை. தொண்டனின்

முகத்திரை கிழிந்துவிட்டால் அதைத் தைத்துவிடக்கூடிய வல்லமை உடையவன் நீ. ஏனெனில் நீ உன்னைவிட உனது தொண்டர்களை அதிகமாக மதிப்பவன், அவர்களது குறைகளைக் கேட்டு அவர்களது மதிப்பைக் காப்பவன். எனது துயரங்களைக் கேட்டு அதை நிவர்த்தி செய்யும் புகழையும் நீயே பெறுக கொள்வாயாக! ஏனெனில் ஸ்ரீராமரிடம் அன்பு கொண்டவர்களுக்கு முக்காலமும் இன்பமே கிடைக்கும். நானும் ஸ்ரீராமரையே சரணடைந்திருப்பதால் எவ்வகையிலாவது எனக்கும் நன்மையே கிடைத்துவிடும். எனவே, புகழ்பெற வேண்டுமென்று நீ விரும்புவாயாகில் துளசிதாசனாகிய எனது கஷ்டங்களைப் போக்குவாயாக!

## 33

சாமர்த்தியமுடைய ஹே வாயுகுமாரனே! ஹே ராமபக்தனே நீ என்னை யாது செய்ய நினைக்கிறாயோ, அதைச் செய்துகொள். புளியங்கொட்டைகூட உனது மகிமையால் பணத்தோடு சேர்ந்துவிடும். அப்படியிருக்க, மூவுலகங்களிலும் புகழ் பெற்ற நீ, என்னை மட்டும் இருட்டில் வைத்திருப்பதேன்? முன்பு மட்டும் நான் என்ன நல்ல காரியங்கள் செய்து விட்டேனென்று என்னைப் பக்தனாகப் பாவித்து மதிப்பளித்தாய்? இப்பொழுது எந்தப் பாபத்திற்காக, தீயகுணத்திற்காக நீ என்னைக் கைவிட்டு விட்டாய்!

எப்போதும் உன் நாமத்தைக் கூறிக்கொண்டுதான் உஞ்சவிருத்தி செய்து அன்னத்தைப்பெற்று உண்கிறேன். என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். ஏனெனில் உனது பலத்தினால்தான் இன்றுவரை நான் உலகில் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்,

எனது மனம் உன்னிடம் அன்பு கொள்ளாவிட்டால், நண்பனைப் போன்று உன்னிடம் பேசி எவ்வாறு நான் என் முகத்தை உன்னிடம் காட்டுவேன்? உன்னைப் போன்ற மகாஞானியும் என் மனதில் உள்ள எல்லா மறுத்தவரும் வேறு யார் இருக்கிறார்கள்? தலைவனுடன் கோபித்துக் கொள்வதன் பலன் அழிவுதானென்பதை நான் அறிவேன்.

உனது தலைவரான ஸ்ரீராமா மற்றும் ஜானகிதேவி வீற்றிருக்கும் தர்பாரில், துளசிதாசனாகிய எனக்கு உதவி செய்ய உன்னைத் தவிரவேறு யார் இருக்கிறார்கள்?

## 34

துன்பத்தில் மூழ்கி இருப்பவர்கள், தன்னலமிக்கவர்கள், திக்கற்றவர்கள் ஆகியோர் கூறும் வார்த்தைகளைத் தவறாக எடுத்துக் கொள்ள வேண்டாம். ஏனெனில் அவர்கள் எதையும் தீர விசாரித்து, யோசித்துப் பேசுவதில்லை.

உலகில் அதிக மழை பெய்தாலும் அல்லது மழையின்றி அதிக வறட்சி ஏற்பட்டாலும், ஆடவரும் பெண்டிரும் இறைவனமீது வசைபாடும் இயல்பைக் கண்டும் கேட்டும் இருக்கிறோம்.

ஹே தலைவா! சம்சாரத் துக்கமும் கலியின் பயமும் ஏற்பட்டிருப்பதாலேயே உன்னிடம் இவ்வளவு பேசி விட்டேன். இப்பொழுது நீ உனது கருணைத் தன்மையால் என்னை மன்னித்து விடுவாயாக!

துன்பக் காலத்தில் மக்கள் தங்களமீது அக்கறையுடன் நன்மை செய்யக்கூடியவர்களை நினைக்கிறார்கள். அவர

களும் இவர்களுடைய தவறுகளை மன்னித்து எல்லா உதவிகளையும் செய்கின்றனர்.

தொண்டர்களின் சீரழிந்த நிலைமையை அவர்களின் தலைவர்கள்தான் சரி செய்கிறார்கள். துளசிதாசனாகிய என் மீதும் உனது தன்னலமற்ற அசாதாரணமான கருணை இருக்கிறதென்பது தெளிவான விஷயமாகும்.

## 35

யாவரும் மலவருத்தத்தினபோதுதான் கடுமையான வார்த்தைகளைப் பேசிவிடுகிறார்கள். அதைக் கேட்டறியும் நல்ல தலைவர்கள் தமது வழக்கப்படி தீய தொண்டர்களையும் நல்லவராக்கி விடுகின்றனர்.

எல்லாம் வல்லவராக, நல்லவராக மற்றவர்களின் துயரங்களை நீக்குபவராக உள்ள தலைவனைக் கண்டு விட்டால், எவ்வாறு நதிகள் சமுத்திரத்தை நோக்கிப் பாய்கின்றனவோ, அவ்வாறே, மக்களெல்லோரும் அத் தலைவனையே நாடி அவருக்குச் சேவைசெய்ய

ரும் பெண்டிரும் அவரவா
குகின்றனா. அதற்காக சுப, அசுப
ந்தத் தெய்வம ஏற்றதென்று
தயே பூஜிக்கின்றனா. ஆனால்
கும உன்னிடம்தான் நம்பிக்கை
ந்தது பலாத்காரமாக யாரை நீ
அவர்கள் உனக்குச் சேவை

செய்யாதபோதும் அவர்களை உனது தொண்டர்களாகப் பாவித்து ரட்சிக்கவேண்டும்!

எல்லாத் தவறுகளுக்கும், சஞ்சலத்திற்கும் தான்தான் காரணம். நீயோ பெரியவன், பெரும் புகழுடையவன் ஆதரவளிப்பதால் அற்பர்கள் தமது அற்பத்தனத்தால மரியாதையிழந்து விடுகிறார்கள்.

சகல பந்தங்களிலிருந்தும் விடுவிக்கவல்ல ஹனுமானே! வேதங்களும் சாஸ்திரங்களும் உனது புகழைப் பாடியிருக்கின்றன. துளசிதாசனாகிய எனக்கு உனது கருணையினால்தான் நன்மை ஏற்படமுடியும்.

## 36

ஹே வாயு குமாரனே! மங்களமூர்த்தியான நீ எல்லாச் சங்கடங்களையும் வேரோடு களைந்தெறிபவன்.

ஹே ஹனுமான்! சாதுக்களைக் காக்கும் உனது மனக்கோயிலில் ஸ்ரீராமசந்திரமூர்த்தி எப்பொழுதும் வாசம் செய்கிறார்.

தாய், தந்தை, குரு, விநாயகர், சரஸ்வதி, பார்வதி சமேதரான சிவபெருமான், சுகதேவர், நாரதர் ஆகியோருடைய திருவடிகளைத் துதித்து நான் வேண்டுவதெல்லாம், ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியின் திருவடிகளிடம் எனக்குள்ள அன்பு நீங்காது நிலைத்திருக்கவேண்டுமென்பதே! துளசிதாசனாகிய நான் ராமர், லட்சுமணர், ஜானகி ஆகியோரை வணங்குகிறேன், ஏனெனில் அவர்கள் எனது நண்பர்களாவர்.

## 37

## லட்சுமணன் ஸ்துதி

ஹே பிரிய லட்சுமணனே! நீ ராமபக்தர்களுக்கு நன்மையைச் செய்பவன, உன்னை நினைத்தவுடனேயே அவர்களது சங்கடங்களை அகற்றி எல்லாவகையிலும் அவர்களுக்கு நன்மை ஏற்படும்படிச் செய்பவன், கொடுத்த பிரதிக்ஞையைக் காக்கும் கருணையுடையவன்.

நீ பூமியைத் தாங்கிக்கொண்டும், பூபாரத்தைக் குறைப்பவராகவும் உள்ள பராக்ரமசாலியான ஆதிசேஷனின் அவதாரம்; வாக்குறுதியையும் ஸங்கல்பத்தையும் சத்யமாக்குபவனாகவும் தர்மத்தைக் கடைபிடிப்பவனாகவும் இரும்பதோடு தூய்மையான மனம், வாக்கு, காயத்தை உடையவன். நீ அழகின் இருப்பிடம், கைகளில் வில்லும் அம்பும் உடையவன், இடையில் அம்பாரத்துணி யணிந்த மாவீரன், பெரும் போர்களில் வெற்றி பெறுபவன், தொண்டர்களுக்குச் சுகமளிப்பவன். மகா பலசாலியான ஜானகி மணாளனின் புகழை நீ பாடிக் கொண்டிருக்கிறாய்.

பரதரின் அன்புக்குரியவனாகவும் சுமித்ரா மற்றும் சீதாதேவியின் செல்லமாகவும் ஸ்ரீராமரென்னும் மேகங்களுக்குச் சாதக பறவையாகவும் இருக்கிறாய்; ஊர்மிளா தேவியின் கணவன்; அன்பினால் உன்னை எளிதில் அடையமுடியும், துளசிதாசனாகிய என்னைப் போன்ற ஏழைகளுக்கு, ஸ்ரீராமரின் அன்பெனும் செல்வத்தை அளிக்கவல்ல பெருஞ்செல்வன.

## 38

ஹே வடசுமணனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! நீ அனந்தமயமானவன், ஐஸ்வரியமுடையவன், பூமியைத் தாங்கிக்கொண்டிருக்கும் ஆதிசேஷன்; அகில உலகங்களின் தலைவன்; பூபாரத்தைக் குறைப்பவன், பிரளயக் காலத்தில் நெருப்பாகயிருந்து உலகத்துன்பங்களை நசிக்கச்செய்பவன்.

ஹே தசரத புத்ரனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! போர்வீரனான நீ சுமித்தரையின் மகன், ஸ்ரீராமா, சத்ருக்கனன், பரதன் ஆகியோரின் சகோதரன். ஹே அழகுக்கடலான லட்சுமணா! உனது அழகிய சரீரம் செண்பகமலரை ஒத்திருக்கிறது. ஒப்பற்ற திவ்யமான ஆடைகளையும் ஆபரணங்களையும் அணிந்து கொண்டிருக்கும் உனக்கு வெற்றி உண்டாகட்டும்.

நீ விசுவாமித்திரா, கௌதமா, ஜனகமகாராஜா ஆகியோருக்கு ஆனந்தமளித்தவன், உலகின் முட்களை ஒத்த கோடிக்கணக்கான துஷ்டர்களை அழித்து ஸ்ரீராமரைப் பின்தொடர்ந்து செல்பவனே! சொல் வன்மையால் பரசுராமரின் கர்வத்தை அழித்தவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! நீ சிற்றின்பத்தில் நாட்டமற்று ஸ்ரீராமருக்குச் சேவை செய்வதில் உறுதி உடையவன், உலக விஷயங்களின் பற்றற்றவன்; தன்னல மற்றுத் தர்மத்தைக் கடைபிடிப்பவன்; மாவீரன் மேகநாதனை வெல்லுமளவிற்கான அளவில்லாப் பலத்தின் மூலஸ்தானம். ஸ்ரீராமரின் வெற்றிக்கு உனது திருக்கரங்கள் பாலம் போன்றவையாகும்.

பயங்கர யுத்தக் கடலைக் கடப்பவனே, ஊர்மிளாவின் மணாளனே! நீ மங்களம் மற்றும் நல்லனவற்றின்

இருப்பிடம், துளசிதாசனாகிய எனது தோஷங்களை நீங்கு வதற்கான முக்கிய காரணகர்த்தா.

நீ சுபாஹு முதலிய அரக்கர்களை அழித்து விசுவாமித்திரரையும், ஸ்ரீராமசந்திரரின் மூலமாக அகலிகையின் சாபவிமோசனத்திற்குக் காரணமாக இருந்து கௌதமரையும், மிதிலாபுரியில் நடந்த யகஞத்தினபோது வீர ஒத்துழைப்பளித்து ஜனக மகா ராஜரையும் மகிழ்வித்தாய்!

பன்னிரண்டு வருடங்களுக்கு ஊண், உறக்கம், பெண்ணுறவு ஆகியவற்றை யார் தியாகம் செய்கிறார் களோ அவர்களால்தான், தான் கொல்லப்பட வேண்டு மென்ற வரத்தை மேகநாதன் பெற்றிருந்தான். இறுதியில் அத் தகுதிகளைப் பெற்றிருந்த உன்னால் அவன் கொல்லப்பட்டான்.

## 39

## பரதன் ஸ்துதி

ஸ்ரீராமசந்திரரின் பாதகமலங்களில் அன்பெனும் மகரந்தத்தைப் பருகும் தேனீயை ஒத்த பாக்யசாலியான பரதனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

நீ உலகின் ஒளிமயமான சூரிய வம்சத்தின் ஆபரணம்; அரச வம்சத்தின் மணிமகுடமான ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியிடம் அன்புடையவன்; இந்திரன் மற்றும் குபேரனுக்குமகூட கிடைப்பதற்கும் அரிய, சுகமான மாபெரும் பேரரசைத் தியாகம் செய்தவன். கூர்மையான கத்திமுனையைப் போன்று யோக முனிவர்களிடையே

முதன்மையாகக் கருதப்படுகிறாய்! உனது தூய அறிவெனும் பெண் ஸ்ரீ ராமரூபக் கணவனுடன் இணைந்திருக்கிறாள்.

ஸ்ரீ ராமச்சந்திரருக்காகச் சலனமற்ற மனதுடன், பக்தியோடு சித்ரகூட மலைக்கு நடந்து சென்றவனே! ஸ்ரீ ராமரின் பாதுகையையே அரசராகப் பாவித்து நாட்டை ஆண்டவனே! தர்மத்தைக் காக்கும் மாவீரனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

சஞ்சீவி மலையை* எடுத்துச் சென்ற சமயத்தில் ஏற்பட்ட சங்கடத்தின்போது ஹனுமான் உனது பராக்கிரமத்தின் மகிமையைப் புகழ்ந்து கூறியிருப்பதே உனது வலிமைக்கும் தைரியத்திறனுக்குமான அத்தாட்சிப் பத்திரமாகும். உன்னைப்பற்றி முழுமையாக ஜானகியின் மணாளரான ஸ்ரீ ராமர்தான் அறிவார்.

யுத்தத்தில் கந்தர்வர்களைத் தோற்கச் செய்ததோடு, அவர்களே ஸ்ரீ ராமரின் புகழினைப்* பாடும்படி செய்தவனே! மாண்டவி தேவியின் மனமெனும் சாதகப் பறவைக்கு மேகத்தைப் போன்றவனே! சரணடைந்த துளசிதாசனாகிய எனக்கு அபயமளிப்பவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

---

* லட்சுமணரின் மூர்ச்சை தெளிவிப்பதற்காகச் சஞ்சீவி மலையைத் தூக்கிக் கொண்டு வந்த ஹனுமாரை மாயராட்சஸனென்று கருதிய பரதர் அம்பினை ஏவ, ஹனுமார் "ராம் ராம்" என்று கூறிக்கொண்டு கீழே விழுந்தார். ராமநாமத்தைக் கேட்ட பரதர், ஹனுமான் ஓர் ராமபக்தரென்பதை அறிந்து அவரை அணைத்துக்கொண்டார். அச்சமயம் ஹனுமார், தன் செயலுக்கு வருந்திய பரதரின் அம்பின் பெருமையைக் கூறினார்.

* தற்சமயம் காஷ்மீரம் என்றழைக்கப்படும் கேகய நாட்டை ஸ்ரீராமரின் பகைவர்களாயிருந்த கந்தர்வர்கள் ஆக்ரமித்துக் கொண்டபொழுது, பரதர் அவர்களை வென்று அவர்களையும் 'ஸ்ரீராமரின்' புகழைப் பாடும்படிச் செய்தார்

## 40

## சத்ருக்னன் ஸ்துதி

பகைவர்களெனும் யானையை அழிப்பதற்கான சிங்கம் போன்ற சத்ருக்னனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

நீ பகைவரெனனும் இருளையும் பனியையும் போக்கு கின்ற சூரியனைப் போன்றவன், தேவர், பிராமணர், பசு, பக்தர், முனிவர், சித்தர் ஆகிய யாவருக்கும் நன்மையை ஏற்படுத்துபவன்; மிகக அழகானவன், சுமித்தரையின் புதல்வன. நீ பரதரின் ஆணைப்படி நடப்பவனெனும் உண்மை உலகறிந்த விஷயமாகும்.

கவசம், கேடயம், வாள், வில், வேல ஆகியவற்றை உடையவனே! பகைவர்களால ஏற்படுகின்ற சங்கடங் களைப் போக்குவதுடன், அவர்களைக் காலகளில விழச் செய்பவனே! லவணாசுரரூபக் கடலைக் குடிக்கக்கூடிய அகத்தியரைப் போன்றவனே! மாபெரும அரக்கர்களை யும துஷ்டர்களையும் அழித்துப பாபஙகளைப போககு பவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்.

லட்சுமணனின் இளைய சகோதரனான பரதன், ஸ்ரீராமா மற்றும் சீதாதேவியின பாததூளியை அழகிய நெற்றியில் திலகமாக அணிந்திருப்பவனே! வேதஙகளால புகழப்பட்டிருக்கும் அன்பனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

நாஸ்திகர்களுக்குத் துர்லபமாகவும் பக்தர்களுக்குச் சுலபமாகவும் வணங்கியவுடனேயே நன்மை அளிப்பவனாக வும், முக்தி அளிப்பவனாகவும் இருப்பவனே! ஹே பிரபோ! உனது பாதங்களைச் சரணடைந்திருக்கும் துளசிதாசனாகிய நான் கஷ்டத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். ஏழைகள் மற்றும் கஷ்டப்படுபவர்களின் துன்பத்தைப் போக்குபவனே, என்னை ரக்ஷிப்பாயாக!

## 41

## சீதாதேவி ஸ்துதி

ஹே தாயே! சமயம் வாய்க்கும்போது பிரபுவிடம் மனதை உருக்கும் கதைகளைக் கூறிவிட்டபின் என்னைப் பற்றியும் ஞாபகப் படுத்துவாயாக!

மகா பாவியான திக்கற்ற ஒருவன் மெலிந்த உருவமுடன், அழுக்கடைந்தவனாய், ஒரு பொருளுமின்றி அவருடைய தாஸனென்றும் பக்தனென்றும் துளசி—(ராமர்) தாசன—(தாசன்)—துளசிதாசர் கூறிக்கொண்டு அவரது பெயரை உபயோகித்துத் தன் வயிற்றை நிரப்பு கின்றவனென்று அவரிடம் கூறுவாயாக! யாரவனென்று அவர் கேட்கும்போது எனது பெயரைக் கூறுவதோடு எனது நிலைமையையும் இயம்புவாயாக! பிரபு அதைக் கேட்டுவிட்டாலே எனது கஷ்டங்கள் தீர்ந்து நற்கதி ஏற்பட்டுவிடும்!

ஹே உலகத் தாயான ஜானகிதேவி! எனக்கு உனது வார்த்தைகளால் இந்த உபகாரத்தைச் செய்துவிட்டா

யென்றால் நான் உனது சுவாமியின் புகழைப் பாடிப் பாடியே பிறவிப்பெருங்கடலைக் கடந்துவிடுவேன்.

## 42

ஹே மாதேஸ்வரி ஜானகி! சமயம் கிடைக்கும்போது பகவானுக்கு என்னைப் பற்றி ஞாபகப் படுத்துவாயாக!

நான் மழை நீரைமட்டும் அருந்தும் சாதகப் பட்சியைப்போன்று அவரது அன்பைப் பருகவேண்டுமென்ற உறுதியுடன் அவரது தாஸனென்று கூறிக்கொண்டு அவருடைய திருநாமத்தை ஜபித்துக்கொண்டிருக்கிறேன். இரக்கத்தின் இருப்பிடமான ஸ்ரீராமரின் சுபாவத்தை நீ அறிவாய்! தன் நலவியலுகளையோ, தனது தொண்டர்கள் செய்யும் தவறுகளையோ, பகைவர்களால் செய்யப்படும் விரும்பத் தகாத செயல்களையோ மனதில் வைக்காமல் மறந்துவிடுவதுதான் அவரது இயல்பாகும். எங்கும் மரியாதை கிடைக்காதவர்களுக்கும் மதிப்பளிப்பவர். கனவில்கூட மனம், வாக்கு, காயத்தால் உதவி செய்வோரின்றி இருக்கும் துளசிதாசனாகிய என்னை—அவர் தன் சுபாவப்படி—மறக்காமல் இருப்பாராக.

## 43

## ஸ்ரீராமர் ஸ்துதி

எங்கும் வியாபித்திருப்பவனும் சத் - சித்—ஆனந்த சொரூபனும் பரம்பொருளும் சச்சரவுகளைத் தீர்ப்பவனுமான அவதார புருஷனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

லீலைகளைச் செய்வதற்காகவே ஓய்வற்ற பிரம்மா முதலான தேவர்களும், சித்தர்களும் செய்வதறியாமல் கலக்கமடைந்திருந்த போது உருவெடுத்தாய்! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! தசரத மாவேந்தா மற்றும் மங்கள கரமான மாதரசி கௌசல்யாவிற்கு மோட்சத்தின் நற்பலனைப்போன்றவனே! வேத விற்பன்னனாக வும், தாம காரியங்களைச் செய்பவனாகவும், பசு மற்றும் பிராமணர்களுக்குச் சேவை செய்பவர்களுக்கும் சாதுக்களுக்கும் ஆனந்தத்தை அளிப்பவனாகவும் இருப்பவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

பிரம்மரிஷி விசுவாமித்திரரின்* யகஞத்தைக் காத்தவனே! சாது ஜனங்களின் துன்பங்களைத் தீர்த்தவனே! சாபத்தின் காரணமாகக் கல்லாய் இருந்த கௌதமரின் மனைவி அகலிகையின்* சாபவிமோசனத்திற்குக் காரணமானவனே! சிவபெருமானின் வில்லினை ஒடித்து அரசர்களின் பெருமையை அழித்ததோடு, புகழ்

---

* அரக்கர்கள் விசுவாமித்திரரின் ஆசிரமத்தினருகில் இருந்துகொண்டு, அவரை யாகம் செய்யவிடாமல் இடையூறுகளைச் செய்துவந்தனர். எனவே ராமலட்சுமணர் அயோத்தியிலிருந்து அழைத்து வரப்பட்டனர். அவர்களால் சுபாகு என்ற அரக்கன் கொல்லப்பட்டான். மாரீசன் என்பவன் ஓடிவிட்டான் முனிவருடைய வேள்வி காப்பாற்றப்பட்டது.

* ஒரு நாள் கௌதம முனிவர் சந்தியாவந்தனம் செய்வதற்கு வெளியே சென்றிருந்தபோது, அவர் மனைவியான அகலிகைமீது மோகம் கொண்ட இந்திரன், கௌதமரின் வேடங்கொண்டு அகலிகையிடம் சென்று தவறான முறையில் நடந்துகொண்டான் நடந்ததை அறிந்த கௌதமர் கோபமடைந்து இந்திரனுக்கு ஆயிரம் கண்கள் உண்டாகும்படியாகவும், அகலிகை கல்லாகும்படியாகவும் சாபமிட்டார் கோபம் தணிந்த பின் ஸ்ரீராமர் வில்லினை வளைக்கும்போது இந்திரனுக்கும் ஸ்ரீராமருடைய பாதங்கள் அக்கல்லின்மீது படும்போது அகலிகைக்கும் சாபவிமோசனம் ஏற்படுமென்று கௌதமர் கூறினார்,

பெற்ற பரசுராமரைத்* தலைகுனியச் செய்தவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

தாய், தந்தை, குரு, சகோதரன் ஆகியோரின் வாக்கை மதிப்பவனே! தார்மீகத்தின் அச்சாணியே! தீரனே, ரகுகுலத்தின் அசாதாரண வீரனே! சித்ரகூட மலைக்கும் விந்திய மலைக்கும் சென்று, அவ்விரு மலைகளுக்கும் ஆசி வழங்கியதோடு 'தண்டகா' வனத்திற்கு விஜயம் செய்து அதைப் புனிதமாக்கியவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும். காக்கை வேஷத்திலிருந்த இந்திரனின் குமாரனான ஐயந்தனுக்கு* அவன் செய்த தவறுக்கு தகுந்த பலனை அளித்தவனே, விராதன் என்ற ராட்சதனைக் குழிதோண்டிப் புதைத்தவனே, அழகிய ரூபத்திலிருந்த சூர்ப்பணகையின் இலங்கண்டு, வெறுத்து அவளது மூக்கை அறுத்து, உலகின் இடையூறான ராவணனை அவமதித்த ஸ்ரீராமசந்திரனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்.

கர்வமுடைய கர தூஷணாதிகளையும் அவர்களுடைய பதினாலாயிர சேனைகளையும் அழித்து மாரீசனின்

---

* இருபத்தொருமுறை க்ஷத்ரிய அரசர்களை வென்று எல்லா நிலத்தையும் தானம் செய்திருந்த பரசுராமர் தன் பலத்தைப் பற்றிப் பெரும் கர்வம் கொண்டிருந்தார். பரசுராமர் தன்னுடைய வில்லை நாணேற்றச் சொன்னார். ஸ்ரீராமரும் அப்படியே செய்து பரசுராமரின் கர்வத்தை அடக்கினார்.

* இந்திரனுடைய குமாரனான ஐயந்தன் காகத்தின் உருவில் வந்து சீதையின் அங்கங்களைக் கொத்திச் சென்றான். ஸ்ரீராமர் ஒரு தர்ப்பையை அஸ்திரமாக ப்ரயோகம் செய்தார். ஐயந்தன் மூவுலகிலும் தஞ்சம் கிடைக்காமல் கடைசியில் ஸ்ரீராமரிடமே சரணடைந்தான். ஸ்ரீராமரும் கருணை கொண்டு ஐயந்தனைக் கொல்லாமல் ஒரு கண்ணை மட்டும் குருடாக்கினார். இதன் காரணத்தால்தான் தற்போதும் காகத்தின் ஒரு கண் குருடாக இருக்கிறது என்று கூறுவர்.

அழிவிறகும காரணமானவனே, ஜடாயு மறறும் சபரியின பக்திக்கு வசமான கருணைககடலே; களங்கமற்ற சரிததிரத்தை உடையவனே, மூவகையான துக்கங்களை யும் நசியச் செயபவனே! உனககு வெற்றி உணடாகட்டும்.

மூடனும், துஷ்டனும், மாவீரனுமான வாலியை வதம்செயது சுக்ரீவனை அரியணையில் அமர்த்தியவனே; வானரங்களையும் கரடிகளையும் ஒன்றுசேர்த்துப படையை திரட்டியவனே! தனது திருவடிகளில் சரணடைநத உடனேயே விபீஷணனுககுக கருணை காட்டியவனே! உனக்கு வெற்றி உணடாகட்டும்.

கடல் மீது பாலத்தை நீர்மாணித்தது உனது லீலை களில ஒன்றாகும். காலனும் தன்னால அழிகக முடியா தென்று நினைத்திருந்த இலங்கையையும ராவணனின குலத்தையும் உற்றார் உறவினரையும் வேரோடழித்து, இந்திரன், குபேரன் முதலான மூவுலகவாசிகளையும விடுதலை பெறச் செயதவனே! உனககு வெற்றி உணடா கட்டும்!

அதன்பிறகு லட்சுமணன், சீதாதேவி, சுக்ரீவன, ஹனுமான் ஆகியோருடன புஷ்பக விமானததில் அயோதயாபுரிககுச் சென்றவனே! உனக்கு வெற்றி உணடாகட்டும்! துளசிதாசர் கூறுகிறார், ஸ்ரீராமச் சந்திரா அரசராகி, சீதாதேவி அரசியானவுடன் அனைதது அயோத்யா வாசிகளும் ஆனநதமடைநதனர்.

## 44

ஹே ராஜாதி ராஜனே! கமலக்கண்ணா! ஸ்ரீராமா! கலியுகத்தில உனது ராம் என்னும் திருநாமம் கறபகத் தருவாக இருககிறது. சமத்துவ குணமுடையவனாகவும்

அந்நியெனும், கடலினை அறிபபதறகு அகததியரைப போன்றும் துர்தேவதையெனும இருளுககு உச்சிநேர சூரியனைப போன்று' இருப்பவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

முனிவர், தேவர் மற்றும் மானிடர்களின் தெய்வமான தாசரதே! உனது மகிமையால முனிவரும் தேவரும் அயோத்யாவாசிகளை வணங்குமபடி செய்துவிட்டாய. குடிமக்களெனனும் சககரவாகப் பறவையின துய ரத்தைப போக்குபவனே! சூரிய வம்சமெனும் தாமரை மலரை மலரச் செய்பவனே! உனககு வெற்றி உண்டாகட்டும்!

உனது சரீரம அழகிய தடாகத்தில் மலாநதிருக்கும் நீலகமலத்தின் நிறத்தை ஒத்திருக்கிறது. நற்குணங் களின் இருப்பிடமாகவும உலகை ரட்சிப்பவனாகவும் எல்லா சௌபாக்கியமும சௌநதாயமும நிறைந்த வனாகவும் கோடிககணக்கான காமதேவனின காவத்தை அழிப்பவனாகவும இருப்பவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்.

அழகிய வில்லும் அம்பும், வாளும் வேலும் கவசமும் உடையவனே! தர்மத்தை நிலைநாட்டும் தீரனே! ரகுவம்ச வீரனே! ராட்சதர்களை அழிததுப் பூபாரத்தைக் குறைக்கும் அளவிடமுடியாத வலிமையான புஜங்களை உடைய ஹே ஸ்ரீராமா! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

தங்கததினாலான மணிமகுடத்தையும் காதில் குண்டலங்களையும நெற்றியில ஒளிவீசும் அழகிய திலகத்தையும் உடையவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! உன திரு முகமணடலம சநதிரனைப் போல் பிரகாசித்துக கொணடிருககிறது. திவயமான

ஆபரணங்களையும் பீதாம்பரத்தையும் (மஞ்சள் நிற ஆடைகளையும்) பூநூலையும் அணிந்திருக்கின்ற உனது சொரூபத்தைத் தியானம் செய்பவர் யார்தான் நற்பலனை அடையமாட்டார்கள்?

பரதன், லட்சுமணன், சத்ருக்னன் ஆகியோரால் வணங்கப்படுபவனே! பக்தர்களுக்குச் சுக சம்பத்துக்களை அளிப்பவனே! தாழ்ந்த நிலையிலுள்ளவர்களும் துன்பத்திலுள்ளவர்களும் திகைத்த மஹாபாவிகளும் ஒரே ஒரு முறை என்னைக் காப்பாற்றுங்களென்று வணங்கி விட்டார்களானால் அவர்களுக்கும் அருள்புரிபவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

ஹே ஸ்ரீ ராமராஜனே! புண்யமயமான, போற்றுதலுக்குரிய உனது புகழ் பதினான்கு லோகங்களி லும் ஒலித்துக் கொண்டிருக்கிறது. மஹாகவி வால்மீகி யென்னும் மலையிலிருந்து உற்பத்தியாகிய உனது கதை யென்னும் கங்கையில் ஈசனடியார்கள் குடித்து ம் குளித்தும் ஆனந்தமடையும் பெருமையுடையவனே, உனக்கு வெற்றி உண்டாகட்டும்! உனது ஆட்சிக்காலத்தில் நான்கு வர்ணத்தாரும் (பிராமணர், க்ஷத்ரியர், வைசியர், சூத்திரர்) நான்கு ஆசிரமத்தாரும் (பிரமமச்சாரிகள், கிரகஸ்தர்கள், வானப் பிரஸ்தர்கள், சந்யாசிகள்) தங்கள் தங்கள் கடமைகளைச் செய்துகொண்டிருந்தனர். எல்லா ஆடவரும், பெண்டிரும் தோஷங்களும் துக்கங்களுமின்றி அமைதியுடனும் கட்டுப்பாட்டுடனும் இரக்க குணத்துடன் உனது புகழைப் பாடிக்கொண்டும் கேட்டுக்கொண்டும் ஆனந்தத்துடனிருந்தனர்.

வைராக்யம் மற்றும் விஞ்ஞானக் கடலான ஹே ஸ்ரீராமா! உன்னை வணங்கியவர்களுக்கு விரைந்து

ஆனந்தத்தை அளிப்பவனே! பாபத்தையும் போக்கு பவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்! பயத்தைப் போக்குகின்ற ஹே ஜானகிநாதா! உன்னைச் சரணடைந்த இந்தத் துளசிதாசனுக்கு அடைக்கலமளிப்பாயாக!

## 45

ஏ மனமே! உலகத்தவரின் பயத்தைப் போக்கும் தன்மையுடைய ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியை ஜபிப்பாயாக! அவரது கண்கள் புதிதாக மலர்ந்த தாமரை மலரினை ஒத்துள, முகமும் கைகளும் திருவடிகளும் செந்தாமரை மலரினைப் போன்றும்இருக்கின்றன. அவரது அழகோ எண்ணற்ற காமதேவன்களின் அழகையும் மிஞ்சும்படியாக இருக்கிறது. மேகநிறசரீரத்தில் துலங்கும் பீதாம்பரம், மின்னலோ என்று நினைக்கும்படியாக ஒளிவீசிக் கொண்டிருக்கிறது. இத்தகைய பரிசுத்தமான ஜானகிநாதர் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியை நான் வணங்குகிறேன்.

ஏ மனமே! ஏழைகளின் காப்பாளராகவும் சூரியனைப் போன்று ஒளி பொருந்தியவராகவும் அரக்கர்களின் வம்சத்தை அடியோடு அழிப்பவராகவும் ஆனந்தமயமான கோசலநாடனும் ஆகாயத்தில் ஒளிவீசும் மதியினைப் போன்ற வருமான தசரதரின் புத்திரருமான ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியை ஜபிப்பாயாக. அவர் சிரசில் மகுடத்தையும் காதில் குண்டலங்களையும் நெற்றியில் அழகிய திலகத்தையும் அழகிய சரீரத்தில் ஆபரணங்களையும் அணிந்து கொண்டிருக்கிறார்; நீண்ட கைகளில் விலலும் அம்பும் ஏந்தியவர், போரில் கர்வமுடையவர்களையும் குற்றம் செய்தவர்களையும் வெற்றி கொள்பவர். சிவபெருமான், ஆதிசேஷன் மற்றும் முனிவர்களின் மனதை ஆனந்த

மடையச் செய்யும் ஸ்ரீரகுநாதரிடம் துளசிதாசனாகிய நான் கோருவதெல்லாம், அவர் என் மனதின் காம குரோதமாகிய துஷ்டர்களை அழித்து, எனது இதயகமலத்தில் வாசம் செய்ய வேண்டுமென்பதேயாகும்.

## 46

ஏ மூட மனமே! எப்பொழுதும் தொடர்ச்சியாக "ராம் ராம்" என்று ராம நாமத்தையே ஜபித்துக் கொண்டிருப்பாயாக. ஏ முட்டாளே! இந்த ஜபமே எல்லா நலன்களையும் கொண்ட புதையல் என்பதை அறிந்து கொள். வேதத்தின் சாரமான இத் திருநாமத்தின் மீது நம்பிக்கை கொண்டு 'ராம் ராம்' என்று ஜபித்துக் கொண்டே இருப்பாயாக! கோசலநாட்டு ஸ்ரீராமச்சந்திரரின் சரீரத்தின் ஒளி நீல தாமரை மலரை ஒத்திருக்கிறது. அவர், சிவபெருமானின் இதயத்தில் சுற்றிவரும் வண்டு, சீதாதேவியின் துணைவர்; இன்பமயமானவர்; அனைத்துலகின் ஒரே தலைவர்; யுத்தத்தில் பகைவர்களை அழிப்பவர், அதே சமயம் கருணைமயமானவர். அவர் அசுரர்களுக்கு நெருப்பைப் போன்றவர்; வலிமை பொருந்திய நீண்ட கரங்களில் அழகிய வில்லையும் அம்பையும் ஏந்தியவர், அவரது முழங்கால்வரை நீண்ட கரங்கள், திருவடிகள், முகம், கண்கள் யாவும் செந்தாமரை மலரை ஒத்திருக்கின்றன. எல்லா நற்குணங்களையும் உடையவர்; மேலும் அநேக காமதேவர்களின் அழகின் இருப்பிடம். ஆசையெனும் குமுதத்தை வாடச் செய்யும் சூரியன், காமம், குரோதம், மதம் முதலான தாமரை வனத்தை அழிக்கும் பனி போன்றவர். அளவற்ற மதம் கொண்ட ஆசை எனும் யானையை அடக்கும் சிங்கத்தைப் போன்றவர். பக்தர்களைக் காத்து உலகப் பாபங்களைப் போக்குபவர்.

பிரம்மா மற்றும் சிவபெருமானால் பூஜிக்கப்பட்ட அவரது திருவடிகள் கங்காதேவியின் உற்பத்தி ஸ்தான மாகும்; எப்பொழுதும் ஆனந்தமயமானவர், மோகத்தை அழிப்பவர்; பயங்கரமான பிறவிகடலைக் கடக்க உதவும் தோணி. துக்கம் மற்றும் சந்தேகமெனும் மேகங்களைச் சின்னாபின்னமாக்கும் வாயு, பாபமெனும் மலையைத் தகர்ப்பதற்கான வஜ்ராயுதம், அவரது திருநாமம் முனிவர்களின் அபிலாசைகளைக் காமதேனுவைப் போன்று பூர்த்தி செய்வதல்லது, கலியுகப் பாபங்களை அழிப்பதில் ஒப்பற்றது

ராமநாமம், தாமரூபக் கற்பக விருட்சம் நிறைந்த வனமாகும்; சனமாரக்கத்தில் செல்பவர்களின் வழிச் செலவுக்குதவும் பொருளாகும், சகல சித்திகளுக்கும் மூல ஆதாரமாகும். பக்தி, வைராக்கியம், விஞ்ஞானம், அமைதி, கட்டுப்பாடு, இரக்கம், முக்தி யாவையும் அடைவ தற்குண்டான சாதனங்கள் யாவும் இத் திருநாமத்தில் அடங்கி உள்ளன. இவ்வகண்ட கலியுகத்தில் யார் ஸ்ரீராமநாமத்தை மீண்டும், மீண்டும், உச்சரித்துக் கொண்டிருக்கிறார்களோ, அவர்கள் தவம், யகஞம் செய்தவராகவும் யாவற்றையும் தானமளித்தவராகவும் எல்லா நற்காரியங்களையும் செய்தவராகவும் கருதப் படுவர். திய குணங்களையுடைய பெருந்துஷ்டர்கள், காட்டில் வசிப்பவர் யாவரும் ஸ்ரீராமநாமப் பலத்தினா லேயே விஷ்ணு லோகத்தை அடைந்தனர்.

ஹே துளசிதாஸ்! எல்லா ஆசைகளையும் பயத்தை யும் விட்டொழித்துப் பிறவித்தளையை அறுத்தெறியக் கூடிய, கூரிய கத்தி போன்ற பகவானின் திருநாமத்தை ஜபித்துக் கொண்டிருப்பாயாக!

## 47

ஏ மனமே! ரகுகுல வீரரான ஸ்ரீராமச்சந்திரரை வணங்குவாயாக! அவர் துக்கங்களை நசிக்கச் செய்பவர்; இந்திரியங்களின் தலைவர் ஆனந்தமயமானவர், எங்கும் நிறைந்திருப்பவர்; ஆதியும் அந்தமுமற்றவர். இத்தகைய பெருமையுடைய பரமாத்மாவுக்குத் தூபத்தைக் காட்டுவாயாக!

தூபத்திற்குப் பிறகு தீபத்தைக் காட்டுவாயாக! அந்த ஆத்ம ஞான ரூப தீபத்தினால் காம, குரோத, கர்வம் முதலான இருளை நீக்கிவிடுவாயாக! பின்பு, மங்கள மூர்த்தியான லட்சுமிபதிக்குப் பரம சந்தோஷத்துடன் உயர்ந்த நிர்மலமான பக்தியை நைவேத்யம் செய்வாயாக! துக்கத்தையும் பயத்தையும் போக்குவதுடன், சிற்றின்ப மெனும் விதையை அழிக்கக்கூடிய அனபெனும் தாம்பூலத்தை அர்ப்பணம் செய்வாயாக! சுபம் அசுபம் என்னும் கர்மங்களை ஒத்த நெய்யில் தோய்க்கப்பட்ட பத்து இந்திரியங்களாகிய திரிகளையும் தியாகமெனும் நெருப்பில் எரித்து ஒழுக்கமெனும் ஒளியை ஏற்படுத்துவாயாக! இவ்வகையில் பக்தி, வைராக்கியம், விஞ்ஞானம் முதலான தீப ஒளியினால் ஆரத்தி செய்து இவ்வுலகில் வாழ்வாயாக!

ஆரத்தியைச் செய்து முடித்தபின் நிர்மலமான இதயத்தில், சாந்தமாகிய மங்களமான கட்டிலை அமைத்து, அதில் ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தியைப் படுக்க வைத்து இளைப்பாறச் செய்வாயாக! அவ்விடம் கருணையையும், மன்னிக்கும் தன்மையையும் சேவகர்களாக நியமித்திடுவாயாக! இவ்வாறு பகவான் உறங்கும் இடத்தில் பேதபுத்தியோ, மாயையோ இருப்பதில்லை.

இந்த ஆராதனையில் சனகாதி முனிவர்களும் வேதம் ஆதிசேஷன், சிவபெருமான், நாரதர் மற்றுமுள்ள தவமுனிவர்களும் தேவர்களும் உண்மையில் ஈடுபாடு கொண்டிருக்கிறார்கள். எனவே ஆசைகளை விட்டொழித்து இந்த ஆராதனையை யார் செய்கிறார் களோ, அவர்களே பிறவிப் பெருங்கடலைக் கடக்க முடியு மென்று நிர்மலமான அறிஞர்கள் கூறுகிறார்கள் என்பதே துளசிதாசனாகிய எனது முடிவாகும்.

## 48

ஸ்ரீராமச்சந்திர மூர்த்திக்குச் செய்யப்படும் ஆராதனை, எல்லாத் துக்கங்களையும் தோஷங்களையும் எரிப்பதோடு ஆசைகளை நிர்மூலமாக்கி வேதனைகளை நீக்கிவிடுகிறது. அழகிய மணம் பொருந்திய தூபமும் தீபமும் மாலையாக விளங்குகின்றன. அந்த ஆராதனை யின்போது கைகளினால் ஆட்டப்படும் மணியோசையில் பாபமெனும் பறவைகள் பறந்தோடிவிடுகின்றன; அது பக்தர்களின் இதயமென்னும் கோவிலிலிருக்கும் அஞ்ஞானத்தை நீக்கி நிர்மலமான அறிவொளியைப் பரப்புகிறது.

மோகம், காமம், குரோதம் மற்றும் பாபமெனும் தாமரை மலர்களுக்கு பனிமூடிய இரவினைப் போன்றது. முக்தியென்னும் நாயகியை அடைய, அது மின்னலை ஒத்த ஒளிபொருந்திய சரீரத்தைக் கொண்ட தோழியைப் போன்றது; சரணடைந்த பக்தர்களென்னும் அல்லிமலர் களை மலரச் செய்யும் சந்திரன், துளசிதாசனாகிய எனது கர்வமென்னும் மகிஷாசுரனை அழிப்பதற்கான காளியாகும்.

## 49

## ஹரி சங்கர் ஸ்துதி

*(இதில் விஷ்ணுவும் சிவபெருமானும் சேர்ந்து புகழப்பட்டிருக்கிறார்கள்.)*

ஹே தேவா! (விஷ்ணு) நீ அரக்கரென்னும் வனத்தை அழிப்பவன், நற்குணங்களின் இருப்பிடம், நந்தகோபன் முதலான கோபர்களுக்கு ஆனந்தத்தை வழங்குபவன், அழிவற்றவன்.

ஹே தேவா! (சிவன்) நீ சம்பு, சிவன், ருத்ரன், சங்கரன் போன்ற பெயர்களால் பிரசித்தமானவன், ஒளிபொருந்திய உருவத்தையும் பயங்கர ரூபத்தையும் உடையவன்; (துஷ்டர்களுக்கு) கோபத்தின் ஸ்வரூபமாக இருப்பவன்.

ஹே தேவா! (விஷ்ணு) நீ எல்லையற்றவன், பெருஞ் செல்வத்தை உடையவன்; உலகின் முடிவானவன், மரண பயத்தைப் போக்குபவன், லக்ஷ்மிதேவியின் துணைவன், விஸ்வ பிரம்மாண்டத்தையும் ஆனந்தத்தில் மூழ்கச் செய்பவன்.

ஹே தேவா! (சிவன்) கைலாசத்தின் தலைவனான நீதான் ஜகத்தின் சுவாமி, எஜமானன், அறிவின் மேகம், ஞானம் மற்றும் மங்களத்தின் இருப்பிடம்.

ஹே தேவா! (விஷ்ணு) நீ வாமன ரூபன்* கண்ணுக் கெட்டாதவன், புனிதமானவன், ஆதி-அந்தத்தின் தலைவன், சாட்சாத் பரமாத்மாவாகவும் இயற்கையின் தெய்வமாகவும் இருப்பவன்.

---

* பலி யென்னும் அரசனிடம் மூன்றடி மண் கேட்டு அவனை அழிப்பதற்காக விஷ்ணுபகவான் வாமன அவதாரமெடுத்தார்

ஹே தேவா! (சிவன்) நீ தலையில் சந்திரனையும் கையில் திரிசூலத்தையும் உடையவன், அழித்தல் தொழிலுடையவன், பாபமற்றவன், பிறப்பற்றவன், எல்லையற்றவன், நந்தியின்மீது உலா வருபவன்.

ஹே தேவா! (விஷ்ணு) நீல மேகத்தை ஒத்த உனது சியாமள சரீரத்தின் ஒளியானது அநேக காமதேவர்களின் அழகினை ஒத்திருக்கிறது. தாமரைக் கண்களைக் கொண்ட நீ கருணை மயமானவன். ஸ்ரீராமன்.

ஹே தேவா! (சிவன்) உனது ஒளிபொருந்திய சரீரமானது சங்கு மற்றும் கற்பூரத்தைப்போல நிர்மலமாக இருக்கிறது. உனது சிரசில் ஜடாமுடியும் கங்கையும் இருக்கிறது. நீ வெள்ளை மலர்மாலைகளை அணிந்தவன்.

ஹே தேவா! (விஷ்ணு) நீ தாமரை மலரின் மகரந்தத்தை ஒத்த பீதாம்பரத்தை அணிந்து, சக்ரம், வில், சங்கு, கதை ஆகியவற்றைக் கைகளில் ஏந்திக்கொண்டிருப்பவன்.

ஹே தேவா! (சிவன்) காமதேவனென்னும் யானைக்கு சிங்கம் போன்றவனே! முக்கண்களை உடையவனே! உலகத் துன்பத்தைப் போக்குபவனே! உன்னை நான் வணங்குகிறேன்.

ஹே தேவா! (விஷ்ணு) நீதான் கிருஷ்ணபகவான். நீ உனது அழகினால் மற்றவர்களை கவரக்கூடியவன்; கருணையின் இருப்பிடம், காலிங்கனெனும்* நாகத்தை

---

*யமுனை நதியில் காலிங்கன் என்னும் நாகம் தனது விஷ ஜ்வாலையால் நீரை எப்பொழுதும் பொங்கும்படி செய்துகொண்டிருந்தது. கிருஷ்ண பகவான் அதன் தலைமீதேறி நின்று அதை அடக்கித் தன்வசமாக்கினார். பின்பு அது யமுனைநதியை விட்டு சமுத்திரத்திற்குச் சென்றுவிட்டது.

அடக்கியவன், கம்சன் போன்ற துஷ்டர்களின் வம்சத்தை அழித்தவன்.

ஹே தேவா! (சிவன்) நீ திரிபுராசுரர்களின் கர்வத்தை அழித்தவன்; மதயானையின் தோலை அணிந்திருப்பவன், அந்தகாசுரனெனும்* நாகத்தை அழிக்கும் கருடனைப் போன்றவன்.

ஹே தேவா! (விஷ்ணு) நீ பரம்பொருள், எங்கும் வியாபித்திருப்பவன், உருவமற்றவன், எல்லோரையும்விட மேலானவன், நன்மையை விரும்புவன், சாதாரண ஞானத்திற்கும் இந்திரியங்களுக்கும் எட்டாதவன், மாயையால் ஏற்படும் விளைவுகளைத் தோற்கடிப்பவன்.

ஹே தேவா! (சிவன்) நீ சிந்துவின் புத்திரனான ஜலந்தரின்* கர்வமய மலையைத் தகர்த்த வஜ்ராயுதம்,

---

* இரண்யனின் புத்திரனான அந்தகனெனும் பலசாலி அசுரன் தேவர்களை மிகவும் துன்புறுத்திவந்தான். தேவர்கள் பயந்து மந்திர மலைக்குச் சென்றபோது அங்கும் அவர்களைத் துன்புறுத்தலானான். இறுதியில் தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்க சிவபெருமான் அவனை அழித்தார்.

* ஜலந்தா எனனும் அரசன் மகாபராக்ரமசாலியாக இருந்தான். தேவலோகங்களையும் வென்றிருந்த இவனைச் சிவபெருமான் அழிக்க முயன்றும் அவனது மனைவி ப்ருந்தாவின் பதிவிரத மகிமையால் அழிக்க இயலவில்லை. விஷ்ணு பகவான் கபடமாகச் சன்யாசி வேஷத்தில் வந்து ப்ருந்தாவின் பதிவிரதத்தைப் பங்கப்படுத்தியபோது சிவபெருமான் ஜலந்தரை அழித்தார். அப்போது ப்ருந்தா, கபட சன்யாசி ரூபத்தில் அவரது மனைவியும் அபஹரிக்கப்படுவான் என்று விஷ்ணுவுக்குச் சாபமளித்தாள். ப்ருந்தா இறந்த இடத்தில் ஒரு துளசி வனம் ஏற்பட்டது. அது மஹாவிஷ்ணுவுக்கு பிரியமானதால் அதன் மகிமை மேன்மையானது.

பார்வதியின் கணவன்; உலகம் தோன்றக் காரணமானவன்; தக்ஷனின்* சம்பூரண யாகத்தை அழித்தவன்.

ஹே தேவா! (விஷ்ணு) நீ பக்திப் பிரியன், பக்தர்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதில் காமதேனுவை ஒத்தவன், நாராயணன், பெரிய பயங்கர விபத்துக்களை நீக்குபவன்,

ஹே தேவா! (சிவன்) நீ சுகமளிப்பவன், அன்னதாதா விரும்பிய வரமளிப்பவன், அஞ்ஞானமற்றவன், தோஷங்களற்றவன், ஆனந்தவனமான காசியின் வீதிகளில் வாசம் செய்பவன்.

இந்த ஹரிசங்கரெனும் மந்திரநாமம், தோஷங்களையும் துக்கங்களையும் நசிக்கச் செய்யவல்ல ஆனந்தத்தின் இருப்பிடமும் வைகுண்டத்திற்கும் கைலாசத்திற்கும் செல்ல உதவும் படிகளைப் போன்றதுமாகும் என்பதே துளசிதாசனாகிய எனது தூய எண்ணமாகும்.

---

* பராக்ரமசாலியான தக்ஷனின் மகள் சதிக்கும் சிவபெருமானுக்கும் திருமணம் நடந்தது. ஒரு நாள் தக்ஷன் பிரம்மாவிடம் சென்றபோது அங்கிருந்த தேவர்கள் எழுந்து நின்று வணங்கினர். ஆனால் சிவபெருமான் மட்டும் எழுந்து வணங்கவில்லை. அதனால் கோபங்கொண்டு சிவபெருமானை அவமானப்படுத்துவதற்காக, தான் ஏற்பாடு செய்திருந்த யாகத்திற்குச் சிவபெருமானை அவன் அழைக்கவில்லை. தன் தந்தை தன்னை அழைக்காத போதிலும், சதி யாகத்திற்குச் சென்று அங்கு சிவபெருமான் இல்லாமலே யாகம் நடப்பதைக் கண்டு கோபமுற்று தந்தையிடம் சண்டையிட்ட பின் அக்னியில் இறங்கிவிட்டாள். இதை அறிந்த சிவபெருமான் கோபமுற்று வீரபத்ரனை அனுப்பி யாகபங்கம் செய்தார் பின்பு தானே சென்று அந்த யாகத்தை முழுமை பெறச் செய்தார்

## 50

ஹே தேவா! நீ சூரியவம்ச ரூபத் தாமரைத் தடாகத்திற்குச் சூரியனைப் போன்றவன்; கோடிக்கணக்கான காமதேவனின் காந்தியை ஒத்த அழகினை உடையவன்; கலிகாலமென்னும் சர்ப்பத்திற்குக் கருடனைப் போன்றவன்; பலம் பொருந்திய கைகளில் பிரபலமான வில்லையும் அம்புகளையும் உடையவன், அளவற்ற பலசாலி.

செந்தாமரைக் கண்களை உடையவன்; அழகின் இருப்பிடம்; நீலமேகத்தை ஒத்த ஒளிபொருந்திய அழகிய சரீரத்தையும் உருக்கிய தங்கத்தின் நிறத்தை ஒத்த பீதாம்பரத்தையும் உடையவன்; வித்தைகளில் தேர்ந்தவன்; சித்தர்கள் மற்றும் தேவர்களால் பூஜிக்கப்படுபவன்; உனது நாபியில தாமரை தோன்றியிருக்கிறது. நீ பூரண அழகின் இருப்பிடம்; உனது சரீரமே விஸ்வ பிரம்மாண்டமாகும்; நீ எல்லையற்ற சாமர்த்தியசாலி, இனிமையானவன், அபார மகிமையுடையவன்; பயமற்றவன், அறிஞானவன், சுவர்க்கலோகத்தின் தலைவன்; சம்சாரப் பந்தமென்னும் விருட்சத்தை வெட்டுவதற்கான கோடாலி போன்றவன்.

கௌதமரின மனைவியான அகல்யாவின் சாப விமோசனத்தைச் செய்தவன; பிராமணர்களுக்கு நன்மையைச் செய்பவன; விசுவாமித்திரரின் யாகத்தைக் காப்பதில உதவிசெய்தவன். ஜனகருடைய அரசவையில் சிவதனுசை ஒடித்தவன், பரசுராமரின் கர்வத்தையும் அடக்கியவன. தேவர்களும் தியாகஞ் செய்யத் தயங்கும் ராஜ்யத்தையும் செல்வத்தையும் பிதாவின் வாக்கைக் காப்பதற்காகத் தியாகம் செய்தவன். நீ பிறப்பற்றவனாயினும் லட்சுமணர் மற்றும் சீதையுடன் மரவுரிகளைப

போன்று பிறந்து லீலையாகத் துஷ்டர்களை அழித்து மூவுலகங்களையும் காப்பாற்றுபவன்.

உனது புனித திருவடிகள் பட்டதுமே தண்டகாருண்ய வனம் புண்ய பூமியாக மாறிவிட்டது. மான் ரூபத்திலிருந்த மாரீசனைக் கொன்றவன், பலசாலியான வாலியென்னும் யானைக்குச் சிங்கத்தைப் போன்றவன், நல்லமனமுள்ள சுக்ரீவனின் துன்பத்தைத் தீர்த்தவன், கரடி மற்றும் குரங்குகளைக் கொண்டு மலைபோன்ற பகைவர்களையும் மலைகளைச் செய்தவன்; சமுத்திரத்தைக் கட்டுப் படுத்தியவன்; பத்துத் தலை ராவணனையும் அவனுடைய இனத்தையும் அழித்துத் தேவர்களை மகிழ்வித்தவன். தேவர்களின் பகைவர்களை அழித்து பூதேவியின் பாரத்தைக் குறைப்பதற்காக அவதார மெடுத்த கருணாமூர்த்தி, களங்கமற்றவன், தோஷ மற்றவன், இணையற்றவன், நிர்குணன், அரச ரூபத்தில் சாட்சாத் பரம்பொருள். ஆதிசேஷன, வேதம், சரஸ்வதி, சிவபெருமான், நாரதர் மற்றும் சனகாதி முனிவர்கள் உனது புகழைப் பாடிக் கொண்டிருக்கிறார்கள். ஆயினும் உனது புகழை முழுமையாகப் பாட இயலாது!

காமவேதனை அழித்த (சிவபெருமான)வரின் அன்புக் குரியவனே! அயோத்யாபுரியின் அரசனே! ஸ்ரீராமா! நீயே துளசிதாசனாகிய எனது பயமெனனும் கடலைக் கடக்க உதவும் தோணியைப் போன்றவன், உன்னை நான் வணங்குகிறேன்.

## 51

ஹே தேவா! ஜானகியின் மணாளனே! ரகுகுலத்தின் தலைவனே! உலகப் பற்று எனும் இருளைப் போக்குகின்ற

உச்சிநேரச் சூரியனைப் போன்றவனே! சத் சித், ஆனந்தத்தின் இருப்பிடமே! ஆனந்தமயமானவனே! உலகில் இளைப்பாறும் இடத்தையும் சுகத்தையும் அளிப்பவனே! நீ அழகிய நீல மேகத்தை ஒத்த ஒளியுடையவன், இடையில் உயர்ந்த பட்டுப் பீதாம்பரத்தை அணிந்திருப்பவன், உனது சிரசினைக் கோடிக்கணக்கான சூரியனின் ஒளியினை ஒத்த ரத்தினங்கள் நிறைந்த பொன்மகுடம் அலங்கரித்துக் கொண்டிருக்கிறது.

உனது காதில் குண்டலமும், நெற்றியில் திலகமும் இருக்கின்றன. புருவங்கள் எல்லையற்ற அழகுடையவை, விசாலமான கண்களோ செந்தாமரையை ஒத்திருக்கிறது, உனது முகம் மூவுலகங்களிலுமுள்ள துயரத்தை நீக்க வல்லது, நீ சிவபெருமானின் மனமெனும் சாகரத்தில் வசிக்கும் அன்னத்தைப் போன்றவன். உனது மூக்கும், கன்னமும் மிக அழகானவை, பற்களோ ரத்தினத்தைப் போன்று ஒளி வீசிக்கொண்டிருக்கின்றன. உதடுகள் சிவந்த கொவ்வைப் பழத்தை ஒத்திருக்கின்றன. உனது சிரிப்பு இனிமையானது; சங்கத்வனி போன்ற உனது குரலிலிருந்து வெளிவரும் நாதம் கம்பீரமானது; சத்தியவாககுடைய நீ தேவர்களின் பயத்தைப் போக்குபவன். உனது மார்பினை துளசிதளத்தோடு கூடிய அழகிய புஷ்பங்களடங்கிய வனமாலை அலங்கரித்துக் கொண்டிருக்கின்றன, அப்புஷ்பங்களின் மணத்தில் மயங்கிய வண்டுகள் ரீங்காரமிட்டுச் சுற்றிக்கொண்டிருக்கின்றன, உனது மார்பினில் ஸ்ரீவத்ஸத்தின் சின்னம் இருக்கிறது; புஜங்களில் கவசமும் கைகளில் கங்கணமும் கழுத்தில் மாலையும் இடையில் ஒட்டியாணத்தின் மணிகளும் ஒலித்துக்கொண்டு இருக்கின்றன.

சிம்மாசனத்தில உனது இடதுபுறத்தில ஜானகிதேவி அமர்ந்திருப்பதானது, ஒரு பசுமையான மரத்தின் அருகில் அழகிய பொற்கொடி இருக்கிறதோ என்று நினைக்கும்படியாக இருக்கிறது. நீ முழங்கால வரையில நீண்ட கைகளை உடையவன், உனது இடது கையில் விலலும் வலது கையில் அம்பும் இருக்கின்றன; அனைத்து முனிவர்களும் சித்தர்களும் கந்தவர்களும மானிடரும் நாகம மற்றுமுள்ள உயிர்களும் உன்னை வணங்கிக் கொண்டிருக்கின்றனர். நீ பாபமற்றவன், அழிவற்றவன், எங்கும நிறைந்தவன, எல்லோருக்கும் தலைவன. எங்களுக்கு எல்லாமங்களங்களையும் நிச்சயமாக அளிப்பவன், பக்தர்கள் வணங்கியவுடனேயே அவா களுடைய துன்பங்களை நீக்கும் கலையில வல்லவன்!

ஹே ஸ்ரீராமச்சந்திரா! லட்சுமணர் சகிதமாக இருக்கும் உன்னை நான் வணஙகுகிறேன. சுகததின் இருப்பிடமாகவும் லட்சுமியின இருபபிடமாகவும் இருக்கும் உனது பாதகமலங்களின அழகே அலாதியானது. ஹனுமானின் இதயத்தைப் புனிதக் கோவிலாக்கியதும் துன்பங்களைப் போக்கக் கூடியதுமான உனது பாதங் களில் துளசிதாசனாகிய நானும் சரணடைகிறேன.

## 52

ஹே தேவா! ஹே கோசலப்தி! ஹே ஜகதீசா! உலகை ரட்சிப்பதில் இணையற்றவனே! உனது உயர்ந்த குணங் களும் லீலாவிநோதங்களும் வர்ணிக்கபபட முடியாதவை. வேதங்களும், ஆதிசேஷன், சிவபெருமான், மறறும் சிந்திக கும் இயல்புடைய சனகாதி முனிவாகளும் உனது அழகிய பவித்ரமான சரித்திரத்தைப் பாடிக் கொண்டிருக கின்றனா.

பக்தர்களைக் காப்பாற்றுவதற்கென்று மச்ச அவதாரமெடுத்துப் பூமியைப் படகாகச் செய்த உனது மகிமை அபாரமானது. எல்லா யக்ஞங்களின் அம்சமான நீ பன்றியின் உருவமுள்ளவராக அவதாரமெடுத்து இரண்யனென்னும் அரக்கனை அழித்து உலகைக் காப்பாற்றியவன். ஹே முராரே! நீ விசாலமான ஆமை உருவமுள்ள கூர்ம அவதாரமெடுத்து மந்திரமலையைத் தன் கடினமான முதுகில் சந்தோஷத்துடன் தாங்கி, சிரங்குடைய மனிதனுக்குச் சொறிந்தால் எத்தகைய இன்பம் கிடைக்குமோ, அத்தகைய இன்பத்தை அனுபவித்ததோடு அமிர்தம், காமதேனு, லக்ஷ்மி, சந்திரன் ஆகியவற்றைத் தோன்றச்செய்து தேவர்களை மகிழச் செய்தவன்.

மானிடர், முனிவர், சித்தர், தேவர் மற்றும் நாகர் யாவரையும் துன்புறுத்திக்கொண்டிருந்ததோடு பிராமண தர்மத்தையும் அழித்துக் கொண்டிருந்த இரண்ய னென்னும் அரக்கனை, நரசிம்ம அவதாரமெடுத்து அழித்து அவனது புதல்வனான பிரகலாதனை மகிழ்வித்தவன். பலியென்னும் அரசனை ஏமாற்று வதற்குக் கபட பிராமணரூபத்தில் வாமன அவதார மெடுத்து மூன்றடி மண் கேட்டு மூன்று லோகங்களையும் அளந்துகொண்டவன். அச்சமயம் மூன்று லோகங்களை யும் புனிதப்படுத்துவதற்காக உனது திருவடி நகத்தி லிருந்து தோன்றிய நதிதான் இன்று கங்கையென்னும் பெயருடன், பிரசித்தமாக இருக்கிறது. பலியிடமிருந்து பெற்ற ராஜ்யத்தை இந்திரனுக்கு அளித்ததன் மூலம் தேவர்களின் தாயான அதிதியின் துயரத்தைப் போக்கியவன் நீ.

நீ பகை அரசர்கள என்னும் யானைக் கூட்டத்தை அழிப்பதற்குச் சிங்கம் போன்று பரசுராம

அவதாரமெடுத்தவனே, இருபது கைகளையும் பத்துத் தலைகளையும் கொண்ட ராவணனை அழிப்பதற்கென்று நிலத்தை பசுமையாகச்செய்யும் மேகம் போன்று ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தியின் அவதாரமெடுத்த உன்னை வணங்குகிறேன்.

நீ பரப்பிரம்மமாக இருந்தும் உலகை ரட்சிப்பதற்காகவும் பக்தர்களைக் காக்கவும் மானிட உருவமெடுத்தவன்; யதுகுலமெனனும் அலலியை மலரச்செய்யும் சந்திரனைப் போன்றவன், கம்சனின் வம்சமென்னும் காட்டினை அழிப்பதற்கு அக்னி ரூபமெடுத்த ராதாரமணன, பூமண்டலம் வஞ்சகர்களால் நிரம்பியதைக் கண்டு யக்ஞ காமங்களை நியமித்தவன, பரிசுத்தமான ஞானத்தையும் அறிவையும் தயாள குணத்தையும் கொண்டு சகல குணங்களின் இருப்பிடமாகவும் பிறப்பறுக்கும் உள்ள உனது புத்த அவதாரத்தை வணங்குகிறேன்.

கலிகாலத்தில் ஏற்பட்ட பாபங்களின காரணமாக எலலா மானிடர்களின் மனமும அசுத்தமடைந்துவிட்டது. அந்த அசுத்தமென்னும் இருளைப் போக்குவதற்கு உதயமான சூரியனைப் போன்று விஷ்ணுயசன என்னும் பெயருடைய பிராமணரின் புத்திரனாகக் கலகி அவதாரமெடுத்தவரே! துளசிதாசனாகிய என்னை ஆபத்துக்களினின்றும் காப்பாற்றுவாயாக! ।

## 53

ஹே தேவா! எலலா சௌபாக்கியங்களையும் அளிப்பவனே! எல்லாவகையான மங்களத்தின இருப்பிடமே! யக்ஞ புருஷனே! எலலோரின் தலைவனே!

எலவோருக்கும ஆனநதமளிபபவனே! சிவபெருமா னென்னும் தாமரையின மகரநதத்தைப் பரப்பும வண்டினைபபோனறவனே! அரசர்களின் மணிமகுடமான ஸ்ரீராமா! உனனை வணங்குகிறேன.

ஹே தேவா! நீ அனைததுச் சுகங்களின இருபபிடம், உனது குணம ஆனநதமயமானது, திருநாமம புனித மானது, நீ நிராமயமானவன், ஸதிரமானவன், அழகிய சுத்த ஞானததின் இருபபிடம, கோபம், கர்வம் ஆகிய வறறைப போக்கும் கருணையின இருபபிடம்; உனனை யாராலும வெல்ல முடியாது!

நீ கபடமறறவன, கணணுககுப புலபபடாதவன, சர்வ வலலமையுடையவன, அழிவறறவன், இணையறறவன், மானிட உடலில வியாபிததிருக்கும பரமாதமா, எல்லோருடைய நலனையும விரும்பும் பரம்பொருளே! உனனை நான வணங்குகிறேன.

நீ பூமியைத் தாஙகிக கொணடிருப்பவன், லக்ஷ்மி காந்தன், அழகிற சிறந்தவனென்னும் காமதேவனின கர்வத்தை அழிக்கக்கூடிய எலலையறற அழகுடையவன், மனதிறகுப் பிடிக்தமானவன, துர்லபமானவன், எளிதில காட்சி அளிக்காதவன், அநுமானத்திற்குள் அடங்கா தவன, கடபபதற்கரிதான பிறவிப பெருங்கடலை எளிதில் கடக்கச் செய்வதில் வல்லவன், அன்புடையவர்க்கு எளிதில் காட்சி அளிப்பவன். நீ சத்தியத்தைக் கூறுபவன், சத்தியததில் மூழ்கியவன, சத்தியவிரதம் பூணடவன், வலிமையானவன், சநதோஷமடையச் செய்பவன், கஷ்டஙகளைப போக்குபவன, தாமரூப கவசத்தை அணிந திருப்பவன, பரபபிரமம, சொரூபன், கர்மஞானத்தில இணையறறவன், பிராமணர்களால் வணங்கபபடுபவன்,

பிராமணர்களைக் காப்பவன், பக்தர்களிடம் அன்புடை யவன், முரன் எனனும் அரக்கனின் பகைவன். நீ நித்திய மானவன், மமதை அற்றவன், பந்தங்களிலிருந்து விடுபட்டவன், கர்வமற்றவன், நாராயணன், ஞானத்தின் இருப்பிடம், சச்சிதானந்தன், எல்லாவற்றுக்கும் மூல காரணமானவன், எல்லோரையும் ரட்சிப்பவன். எல்லோரையும் அழிக்கின்ற யமராஜனுக்கும் தலைவன், அனைத்திலும் பரவி இருப்பவன், பெரிய உபாசனை களால் பக்தர்களமீது பரவசமடைபவன்.

நீ சித்தி பெற்றவன், சாதனை புரியக் கூடியவன், சொல்லும் அதன் பொருளும் யாவும் நீயே! மந்திரத்தை ஜபிப்பவனும், ஜபிக்கப்படுபவனும் நீயே! சிருஷ்டியும் நீயே! சிருஷ்டிக்கப்படுபவனும் நீயே! நீயே, பிரதான காரணமானவன், பதமநாபன், நீ மேகத்தின் ஒளியை ஒத்த சரீரமுடையவன், முக்குணமுடையவன், நிர்குணன்; எல்லா இடத்தைப் பார்ப்பவனும், பார்க்கப்படுபவனும் நீயே! நீ ஆகாயத்தைப் போன்று எங்கும் வியாபித் திருப்பவன், அழியாமை அற்றவன், சாட்சாத பரமபொருள், வரமளிப்பவர்களுக்குத் தலைவன், விஷ்ணு, வாமன அவதாரத்தின் சுத்த பிரம்மச்சாரி, சித்தர் களாலும் தேவர்களாலும் எப்பொழுதும் பூஜிக்கப் படுபவன், அறியாமையை அழித்து நிர்மூலமாக்குபவன். நீ பூரண ஆனந்தத்தின் இருப்பிடம்; மோகம், அஞ்ஞானம், அபகீர்த்தல் ஆகிய முக்குணங்களையும் போக்குபவன், துளசிதாசனாகிய எனது மனம், சொல், செயல் ஆகியவற்றில் ஏறபட்டுள்ள பயமெனனும் கடலை வற்றச் செய்வதற்கான அகத்திய முனி போன்றவன்.

## 54

ஹே தேவா! நீ எங்கும் நிறைந்திருப்பவன, உலகின தலைவன்; விஸ்வரூபம் கொண்டவன, உலகின் பெருமையைக் காப்பவன; கருடனின்மீது பிரயாணம் செய்பவன், பரப்பிரம்மாகிய நீ வரமளிக்கும் தேவர்களுக்கும் தலைவன், சரஸ்வதி தேவியின் தலைவன்; எங்கும் நிறைந்திருப்பவன; நிர்மலமானவன, எல்லையற்ற பலம் பொருந்தியவன், மோட்சத்தின அதிகாரி, இயற்கை, பரப்பிரம்மம்; ஒலி முதலானவைகளும் முக்குணங்களும தேவர்கள, ஆகாயம், வாயு, அக்னி, நிலம், நீர் முதலான பஞ்சபூதங்களும் பத்து இந்திரியங்களும் அறிவு, மனம், ஆத்மா, முக்காலம, மனோசக்தி ஆகிய யாவும் நீயே.

ஹே ராஜசிரோமணியே! ஹே விஷ்ணு! நீ பேதமற்றவன; இந்தப் பரந்த உலகம் உன்னுடையது. உனது திருவடிகள் சிவபெருமானால் வணங்கப்பட்டவை, அத் திருவடிகளே கங்கையை உண்டாக்கின. ஹே பகவானே! நீ இறந்தகாலம், நிகழ்காலம, எதிர்காலம் ஆகிய முக்காலத்தையும் அறிந்த கடவுள, வேதாந்திகளாக இருப்பவர்கள்; துணியில் நூலையும் பானையில் மண்ணையும், பாம்பில மாலையையும் மரயானையில மரத்தையும், ஆபரணங்களில பொன்னையும் காண்பது போல் உன்னைப் பார்க்கிறார்கள். நீ ரகசியமான, சிக்கலான, மறைந்திருக்கும பொருளின அர்த்தத்தையும புரிந்தவன். அறிவுச் சுடர். உயர்ந்த ஞானத்தின் இருப்பிடம். அறிவதற்குகந்தவன். ஞானத்தைப் பெரிதாக மதிப்பவன். பெரிய மகிமையின் இருப்பிடம். பயங்கரம் நிறைந்த இவ்வுலகிற்கு அப்பாற்பட்டவன். நீ சத்திய விரதம பூண்டவன், கற்பனைக்கு அப்பாற்பட்டவன்,

ஆதிசேஷன மேல துயில்பவன், கமலககண்ண
பத்மநாபன், மேகத்தின் காந்தியை ஒத்த சரீரத்
உடையவன்; கோடிக்கணக்கான காமதேவனின அழகி
கொத்த அழகின் இருப்பிடம்.

நீ உனது பக்தர்களுக்குச் சுலபமாகவும் துஷ்
களுககுத் துர்லபமாகவும் இருப்பவன்; உனக்கு ஆராதன
செய்வது கடினமாயினும் ஆராதனைக்குகந்தவன்;
கவலைகளைத் தீாப்பவன்; எளிதில் புலப்படாதவ
துக்கங்களை நசிக்கச் செய்பவன்;* பிரம்மாவின மகன
சனகாதிகளின கலவிச செருககினை அடக்கினவன.*

உலகத துயரங்களை அடியோடு நசிககச் செய
பக்தர்களுக்கு அநுகூலமாக இருப்பவன், உனது திருநா
பாபமென்னும பஞ்சினைச் சாம்பலாக்கும் நெருப்பின
ஒத்தது, நிலையற்ற ஆசையென்னும இருளைப போ
சூரியனை ஒத்தவன், ஜகத்தினைத தாஙகிச் சரணா
அடைந்தவர்களின் பயத்தைப் போக்குபவன், கரு
யானவன். தேவாகள் உனது இரு பாதங்களை

* கிருஷ்ண பக்தையான மீராபாயின ஞானக்கண திறந்திருந்தது. அ
மகாராணா மீராபாயைக் கொல்வதற்காகப் பெட்டியில பாம்பி
வைத்துக்கொடுத்தனுப்பினாா அதைச் சேவகிகள அரசரால கொடு
பட்ட பரிசு என்று மீராபாயிடம் கொடுத்தனர். மீராபாய் அப் பெட்
மகிழ்ச்சியோடு திறந்தபோது அதில் பாம்பிருக்கக் கண்டு, அ
மாலையாக அணிந்துகொண்டார். பக்தையான மீராபாய்க்குப் பா
மாலையாக காட்சியளித்தது

* பிரமமாவின மகனான சனகாதிகளின் வேதாநத கேள்விகளுககுப பிர
சரியான பதிலைத் தாராததால் சனகாதிகள் கல்விச் செருக்கை அடைந்
பிரம்மா விஷ்ணுவை மனதில் நினைத்தவுடன் அவா அன்ன உரு
வந்து சனகாதிகளுக்கு உபதேசம் செய்து அவர்களுடைய செருக்
போக்கினார்.

பூஜித்துக் கொண்டிருக்கிறார்கள். பாரிஜாத மலர் மாலையை அணிநது கொண்டிருப்பவனே! ராவணனின் பகைவனான ஸ்ரீராமா! சதா சஞ்சலத்தில் மூழ்கியிருக்கும் துளசிதாசனாகிய நான் உன்னிடம் சரணடைந்திருக்கிறேன். என்னைக் காப்பாற்றுவாயாக!

## 55

ஹே தேவா! ஸ்ரீ ராமா! நீ ஈசனடியார்களின் துன்பத்தைப் போக்குபவன்; மிகச் சுத்தமான ஞானத்தினை உடையவன், சத், சித், ஆனந்தத்தின் நிகேதன், சாதுக்களின் சந்தோஷத்தை மேம்படச் செய்வதற்காகக் கரன் என்னும் ராட்சதனின் பகைவன்.

ஹே ராமா! நீ நல்லொழுககம், சமத்துவம் ஆகிய வற்றின் இருப்பிடம். ஏற்றத்தாழ்வுகளை நீக்குபவன், ரகுபதி. ராவணனின் பகைவன். கையில் வாளையும் கேடயத்தையும் உடையவன்; கவசத்தையும் இடையில் அழகிய இடைக்கச்சையையும் அணிந்து வில்லையும் அம்பையும் ஏந்தியிருப்பவன், நீ சத்தியவிரதன், மோட்சமளிப்பவன், பரோபகாரி, எல்லா நற்குணங்களையும் உடையவன், விஞ்ஞானத்தில் பரிபூரணனாய் விளங்குபவன்.

உனது திருநாமம உலகில் நிறைந்திருக்கும். அஞ்ஞான மெனும் இருளைப் போக்கும் அறிவொளிக் கிரணங்களைக் கொண்ட சூரியனை ஒத்திருக்கிறது. நீ கொடிய, தீவிரமான துக்கங்களையும் நசிக்கச் செய்பவன். ராஜசரீரததைக் கொண்டிருந்தபோதிலும் தவத்தின் மூர்த்தியாய் இருப்பவன். கல்விச் செல்வம் நிறைந்த தவமுனிவன. புத்திமானாகிய நீ மானம், கர்வம்

பொறாமை, ஆசை, மோகம் ஆகிய குணங்கள் நிறைந்த கடலைக் கடையும் மந்திரமலையாக இருப்பவன். சிந்தனையாளன்.

நீ வேதங்களால் புகழப்படுபவன். வரமளிக்கும் தேவர்களுக்கும் தலைவனாக இருப்பவன்; வாமன அவதாரங் கொண்டவன்; நிர்மலமானவன்; பற்றுதலற்றவன்; சரஸ்வதியின் தலைவன், வைகுண்டத்தின் நாதன்; காமக் குரோதங்களை அழிப்பவன்; மன்னிக்கும் தன்மையை வளர்ப்பவனாக, சாந்தமூர்த்தியாய் கருடன் மீது உலா வருபவன்; நீ பாபமெனும் வனத்தினை நிமிடத்தில் நிர்மூலமாக்கக் கூடிய நெருப்பினை ஒத்தவன்; விஸ்வ பிரம்மாண்டத்தின் ஆபரணம், துஷ்ட அசுரர்களின் பகைவன், மக்களின் தலைவன், ஜகந்நாதன். அகில அண்டத்தின் தலைவனே! உனக்கு வெற்றி உண்டாகட்டும்!

நீ நிர்மலமானவன், அழிவற்றவன், உருவமற்றவன், கலிகாலத்தின் வலிமையால் துன்புறும் உயிர்களின் துன்பத்தைப் போக்குபவன், ஆனந்தத்தின் இருப்பிடம், ஆதிசேஷனின் மீது பள்ளிகொண்டிருப்பவன், அன்றலர்ந்த தாமரையை ஒத்த கண்களை உடையவன், அமுதக் கடலில் இருப்பவன், எல்லாவற்றிலும் நிறைந்து காணப்படுபவன். சித்தர், கவிஞர், வித்வான் முதலானோர்க்கு ஆனந்தத்தை அளிக்கும் உனது திருவடிகள், பாபிகளுக்கு மிகவும் துர்லபமானவை; அந்தத் திருவடிகளிலிருந்து புறப்படும் புனித கங்காதேவி, தனது பார்வையினாலேயே மானிடர்களின் எல்லாப் பாபங்களையும் போக்கிவிடுகிறாள். நீ அழிவற்றவன், நற்குணமுடையவன், நிர்க்குணன், ஆனந்த மயமானவன், பரமாத்மா, பிறவிப் பெருங்

கடலைக் கடக்க உதவும் தோணி, வைகுண்டத்தை அடையச் செய்யும ரதத்தின் சாரதி, எல்லோர் மீதும் ஆட்சி புரிபவன, உலகைப் பராமரிப்பவன, உலகத்தின் மூலகாரணமானவன், மறறும் துளசிதாசனாகிய எனது பயத்தைப் போக்குபவன்.

## 56

ஹே தேவா! நீ அசுரர்களை அழிப்பவன. தயையின சமுத்திரம். காவத்தைப் போக்குபவன். பெரிய தோஷங் களையும் துகள்களாக்குபவன. பாபங்களைப போககுபவன், துஷ்டர்களை அழிப்பவன, ஐம்புலனகளை யும அடக்குபவன, துக்கங்களைப் போக்குபவன், தீய சிற்றின்பத்தை அழிப்பவன்.

நீ நிறைய ஆபரணங்களை அணிந்திருக்கிறாய், சூரியனைப்போன்று ஒளிபொருந்தியவன்; செல்வம் நிறைந்தவன, ஜனனமரண பயத்திலிருந்து விடுதலை பெற அபயமளிப்பவன். அதாவது, பிரம்மாவைவிட உயர்ந்தவன, கற்பனைக்கு அப்பாற்பட்டவன. சிவபெருமானின மதிப்பிற்குரியவன. சிவபக்தர்களை ரட்சிப்பவன, பூலோகத்தைத் தாங்குபவன, கோவர்த்தனக் கிரிதரன.

ஹே சௌபாக்கியமே! நீ வரமளிப்பவன, மேகத்தைப் போன்ற காந்தியுள்ளவன், இனிய வாக்கின அதிபதி, உலகின் ஆத்மாவாக இருப்பவன், நிர்மலமானவன், வைகுண்டத்தில் வாசம் செய்பவன, ஆகாயத்தைப் போன்று எங்கும் வியாபித்திருப்பவன, வணக்கத்திற்குரியவன், வாமன அவதாரங்கொண்டவன, பவித்ரமானவன, சாட்சாத் பிரம்மாவாக இருப்பவன, கவலைகளைப் போக்குபவன.

நீ இயற்கையாகவே அழகானவன், சிரித்த முகத்தை யும நல்ல மனத்தையும் உடையவன், எப்பொழுதும் மங்களகரமானவன், உண்மையானவன், எல்லா மறிந்தவன், எல்லாவற்றுக்கும் காரணமானவன், எல்லோரையும் பராமரிப்பவன், எல்லோரையும் வெற்றி கொள்பவன், எல்லோரிடமும அன்புடையவன், சத்தியவாக்குடையவன், பிரளயமேற்படுத்துபவன்.

நீ நித்யமானவன், சாந்தமானவன், முக்தியை அளிப்பவன், ஆனந்த ரூபன், சாசுவதமானவன், எப்பொழுதும் சுதந்திரமானவன், எல்லோரையும் நிர்வகிப்பவன்.

நீ எல்லா மங்களங்களுக்கும் காரணமானவன், ஆனந்தம் மற்றும் மகிமையின் இருப்பிடம், மூட மது வென்ற அசுரனை அழித்தவன், கௌரவத்தின் இருப்பிடம், கர்வமற்றவன், காமதேவனை அழிப்பவன், ஆனந்தத்தில் மூழ்கியவன், மாயையற்றவன், மனதைக் கவரக்கூடிய அழகினையுடைய லக்ஷ்மியின் நாதன், எப்பொழுதும் தாமரை மலரை கையில் ஏந்தி யிருப்பவன்.

நீ கமலக்கண்ணன, கலைகளின் இருப்பிடம், வில்லேந் தியவன், அயோத்தியின் அரசன், மங்களங்களின் குவியல், எண்ணற்ற ராட்சத ரூபங்கொண்ட மதம் கொண்ட யானைகளுக்குச் சிங்கம் போன்றவன். ஆனால், பக்தர் களின் மனமெனும் வனத்தில் வசிப்பவன்!

ஹே ஆனந்தக் கடலே! நீ பாபமற்றவன், ஒப்பற் றவன், குற்றமற்றவன், கணக்குக்குப் புலப்படாதவன், பிறப்பு இறப்பு அற்றவன், எல்லையற்றவன், ஆறுவித மாறுபாடுகள் இல்லாதவன்.

மேகநாதனை அழிதத லக்ஷ்மணரின சகோதரனே! நீ சாசுவதமானவன, இருப்பிடமறறவன, வியாதிகளறறவன, ஆதரவறறவாகளின தோழன, துளசிதாசனாகிய நான், சமசார துககங்களினால ஏறபடும் துயரத்துடனும அளவறற பயத்துடனும ஆபதபாநதவனான உனனிடம சரணடைநதிருசகிறேன். சரணடைநதவாகளைக காபபவனே! அளவற்ற கருணையின இருபபிடமே! பூமிநாதனே! துாபாக்கியவானாகிய எனனைக காபபாறறுவாயாக!

## 57

ஸ்ரீரஙகனே! உலகப பநதஙகளால ஏறபடும துககஙகளைப போககடிககும ஸதஸஙகததை எனக்குக் கொடுபபாயாக!

ஹே முராரி! உனது சரணாரவிநதங்களைச் சிக்கெனப பிடித்துப் பகதியில் திளைத்திருக்கும் ஸாதுக்கள யாவரும் பயத்தினின்று விடுதலைப பெற்றுவிடுகிறார்கள். உனது தரிசனததினாலேயே ஸதஸங்கத்தைப் பெறுபவர்கள், துர்தேவதைகள, தேவர், நாகர், மானிடர், யக்ஷர், கநதாவா, பட்சிகள, அரக்கர், சிததர் மறறுமுள்ள எல்லாவகையான ஜீவராசிகளும, முனிவர்களுக்கும் கிடைததறகரிய மோட்சததைப பெறறுவிடுகிறார்கள். விருத்திராசுரன*, பலி, கஜேநதிரன, பிரஹலாதன்,

* விருததிராசுரனெனனும அசுரன பரமபகதனாகவும பராகரமசாலியாகவும இருந்தான். அவனை அழிப்பதற்காகத் தேவர்கள் ததீசியின எலும்பினைத் தானமாகக் கேட்டுப பெற்று அதிலேயே வஜ்ராயுதத்தைச செய்தனா அநத வஜ்ராயுதத்தைக் கொண்டு இந்திரன் விருத்திராசுரனை அழிததாா

மயன, பாணாசுரன்*, தாமனெனும வேடன, ஜடாயு, அஜாமிளன்*, ;யவனன ஆகியோரின பாபஙகள யாவும சாதுக்களின திருவடி ஜலத்தினால் நீஙகியதால கைவல்ய பததத்தின் அதிபதிகளாயினா.

ஹே சகரபாணீ! உலகைத துறநது உனனைச சரணடைநதவர்கள், சாந்தமாக உலக வாழ்வில பறறற்று, மோகம, மமதை, காமம், குரோதம முதலிய நோயகளறறு, குற்றமறறவாகளாக, வேதஙகளைப படிததவர்களாக, பிரமமஞானிகளாய, சமததுவ நோககுடன சுகமாக இருககிறாாகள. எபபொழுதும உலக நனமைககாகச சிநதிததுககொணடு, காமம மறறும காமததை நீககி வாழும் புணணிய ஜீவனகள் இருககுமிடததிறகுப பாறகடலில வசிககும விஷ்ணு பகவான, பிரமமா மறறும சிவபெருமான மூவரும தாமே வநதுசோநதுவிடுவா. வேதமெனும பாற்கடலை முனிவாகளின விளககவுரையெனனும மததினைக்கொணடு கடைநதால, சதசங்கமென்னும் அமுதம் தோனறுமெனற

---

* ஆயிரம் கைகளைக கொணட சிவபக்தனான பாணாசுரன பலியென்னும் அரசனின் புதல்வன. அவனுடைய புதலவியான உஷாயென்பவள் ஸ்ரீகிருஷ்ணனின் பேரனான அனிருத்தனைக் கனவில் கண்டு மோகங கொண்டாள்; தன தோழியான சித்ரலேகாவினமூலம் அனிருததனைப் பற்றி அறிந்து, அவனை அழைத்துக்கொண்டாள். இதையறிந்த பாணாசுரன் கோபங்கொணடு ஸ்ரீகிருஷ்ணனை எதிர்த்தான் அப் போரில் சிவபெருமானும் பாணாசுரனின பக்கமிருந்து போரிட்டார். நானகு கைகளைத தவிர மற்ற கைகளை இழந்த பாணாசுரன பகவானின பக்தனானான. எனவே சிவபெருமானின கோரிக்கையினால பகவான அவனுக்கு அபயமளித்துவிட்டார்.

* அஜாமிளனெனனும பிராமணன பல பாபச செயலகளைச செய்து வந்தான மரண வாயிலில் நுழையும நேரத்தில் பயத்தினால இளைய மகனான நாராயணனை அழைததான். நாராயணனெனனும நாமத்தைக் கூறியதாலேயே அவனுககு மோக்ஷம் கிடைத்தது

சிததாநததததை ருகமணிதேவியின துணைவரான பகவான ஸ்ரீகிருஷ்ணன கீதையில கூறுகிறார். ராடசத சேனை களை அழிபபதில ஸ்ரீரகுநாதனின அமபுகளின் வேகத தைப் போனறு, சாதுகள் துயரம், சநதேகம், பயம, சநதோஷம, அஞ்ஞானம, சிற்றின்ப வேடகை ஆகிய வறறைத தமது உபதேசஙகளால் நீக்கிவிடுகிறார்கள்.

ஹே ஸ்ரீராமா! எனது காம வினையினால மீணடும நான் எஙகு பிறநதாலும, அஙகும் உனனிடத்தில பக்தி யும, சாதுககளின துணையும இருக்க வேணடுமெனபதே எனது பிரார்த்தனையாகும்.

இவ வுலகிலுள்ள காமம், கோபம், பேராசை யென்னும் கொடிய நோய்களுக்கு பக்தியே சிறநத மருநதாகும். இறைவனைத தவிர வேறு யாரையும வணஙகாத சாதுக்களே வைத்தியாகள்; ஈசனடியார், ஈசன இவர்களில் பேதமென்பதே சிறிதளவுமில்லை.

## 58

ஹே லக்ஷ்மிகாநதனே! துககததைப போககி, துனபததை நீககககூடிய உனது மலர்ககரஙகளின உதவியை அளிக்க வேணடுகிறேன். நீ அறியாமை யென்னும் சநதிரனை விழுங்கும் ராகுவைப் போன்றவன, காமம் மறறும் காமமென்னும் மதம் நிறைநத யானை களுக்குச் சிஙகததைப போனறவன், தூஷணனென்ற அசுரனின பகைவன்.

சரீரமெனனும் பூமண்டலத்தில உலக விஷய ஞானமே இலஙகைக கோட்டையாகும். மனமெனும் இம் மாளிகையை உருவாக்கியவன் மயனெனனும

அரக்கன். அதிலிருக்கும்; பொருக்கிஷமே அழகிய கோவில களாகும், முசகுணங்களும் அதன சேனாதிபதிகளாவா. தேகத்திலுள்ள கர்வமென்னும் கடலானது மிக ஆழமான தாகவும், எளிதில் கடகக முடியாததாகவும் இருக்கிறது. அதில் விருப்பு, வெறுப்பு ஆகியவற்றால நிலைநதிருக்கும மனோரதமெலலாம் நீர நிறைந்திருக்கும குடததைப போன்றிருக்கிறது அதில காணப்படும் காரிய சிததியும ஏமாற்றங்களுமே மன அலைகளாகும இந்தப பயங்கர மான லங்காபுரியில மோக ரூப ராவணனும அவனுடைய தம்பி அகங்கார ரூப கும்பகர்ணனும காமரூப இநதிர ஜித்தும சாந்தததை அழிப்பவர்களாக இருக்கிறாாகள், பேராசையே இரக்காகள்; பொறாமையே துஷ்டாகள், கோபமே மகா பாவிகளுடைய தர்பாராகும்; பகை போலி ஆடம்பரம், கபடம், கர்வம மறறும் மதம ஆகிய அறுவகை அரககர்களும ஐமபுலனகளெனனும ராடசசுி களோடு சரீரமென்னும கோட்டையில வாசம செய கின்றன.

ஹே தலைவா! உனது திருவடிகளில சேவகனாக இருக்கின்ற இநத ஜீவனானது, துஷ்டர்களென்னும காட்டினில மனக்குழப்பத்துடன சுற்றிக்கொணடிருக கிறது. நியமமென்னும தேவலோகமும, புலனடகக மென்னும் பூலோகமும ராவணனிடத்தில அகப்பட்டு மிகவும் கலக்கமடைநதிருக்கின்றன. ஞானரூபத தசரதருடைய வீட்டில பகதிரூபக கௌசல்யாவின கர்ப்பத்தில பிறநது பூபாரத்தைக குறைத்தவனே! ஹே ஞானகிவல்லப! பகதாகளின கஷ்டங்களை அறிந்து தநதையின் ஆகனையினால வனத்தில் நுழைநதவனே! அதேபோன்று இப்பொழுது எனது மனமென்னும வனததில் நுழைவாயாக! மோட்சத்தின சம்பூரண

சாதனங்களையே காடி. மற்றும் குரங்குகள் ரூபமாக்கி ஞானரூபச் சுக்ரீவனின் உதவியோடு கடலினில் பாலத்தைக் கட்டிவிட்டாய். வைராக்கிய ரூபனும் பராக்கிரமசாலியும் வாயு குமாரனுமான ஹனுமான சிறந்தவ மெனனும் வனம் மற்றும் மாளிகைகளை எரிக்கும் நெருப்பினை ஒத்திருக்கிறார்.

அறிவாற்றலின் குவியலான ஹே ஸ்ரீராமச்சந்திரா! உலகத் துக்கத்தைப் போக்குபவனே! ஹே பிரபோ! அரக்கர்களை நசிக்கச் செய்து உனது தம்பி மற்றும் மனைவி ஜானகியுடன் துளசிதாசனாகிய எனது இதயக் கமலத்தில வாசம் செய்ய வேண்டுகிறேன்.

## 59

ஹே ரகுநாதா! நீ ஏழைகளைக் காத்து, துக்கங்களை நசிக்கச் செய்யும் கருணைக்கடல, ரகுகுல திலகம், அரசர்களில் சிறந்தவன, நிர்மலமான விஞ்ஞான சரீரமுடையவன், கருணையே உருவானவன், தேவர்களுக்குச் சுகமளிப்பவனாகவும் கரண எனனும் அரக்கனின் பகைவனாகவும இருப்பவன.

ஹே முராரி! இவ்வுலகமெனனும் அடர்ந்த காட்டில காமமெனனும் மரங்கள் எங்கும் வியாபித்திருக்கின்றன. அதில் ஆசைகள் கொடிகளாகவும் ஏமாற்றங்கள முட்களாகவும் வியாபித்திருக்கின்றன. மனக்குழப்பத்தில தோன்றுகின்ற ராஜாளி, ஆந்தை, காகம், கொக்கு போன்ற துஷ்ட ராஜதந்திர மாமிச பட்சிகள ஜீவனென்னும் வழிப்போக்கனின் மனத்தினில் துக்கத்தை ஏற்படுத்துபவனவாக இருக்கின்றன. இக்காட்டில குரோத ரூப மதம் நிறைந்த யானைகளும் காமரூப சிங்கங்களும,

திமிர் ரூப ஓநாய்களும் காவரூப காடிகளுமே கர்மமாக நிறைந்திருக்கின்றன. அதோடு பொறாமை ரூப எருமை களும் பேராசை ரூபப பன்றிகளும் வஞ்சகரூப நரிகளும் காவரூபப பூனைகளும் நிறைநதுள்ளன. கபடரூப பயஙகர குரங்குகளும, வஞசகப புலிகளும் மறற மிருகங் களுககு உபததிரவமாக இருபபதுடன துன்பத்தை அளிபபனவாகவும் இருக்கின்றன. ஹே பிரபோ இநதக கஷ்டங்களை மனதில் நினைத்தே உன்னிடம் சரண் அடைநதிருககிறேன். என்னைக காப்பாறறுவாயாக!

இவ்வுலகிலுள்ள அகங்காரமென்னும் கடத்தறகரிய மலையில் மகாமோக ரூபமான அடர்ந்த இருள சூழ்ந்த குகை இருககிறது அஙகு மனமென்னும் அரக்கனும் நேரய நெரிடிகள நிறைநத பிரேத கணஙகளும் சுகபோக மெனனும் தேளின் விஷமும் நிறைநதிருக்கின்றன. சிறறின்பத்தில ஈடுபடவேணடுமென்ற பேராசையானது விஷப்பூச்சி மறறும் கொசுககடிக்கு ஒபபாக இருககிறது. துஷ்ட பாசசை மறறுந் பஞ்சஞானேந்திரியங்களென்னும் சிற்றினப ரூபஙகளே மலைப்பாம்பாக இருக்கின்றன.

கருடவாகனனே! புத்தியறற குருடனான எனனை, உனது மாயையானது இந்தப பயஙகர வனத்தில தள்ளிவிட்டிருககிறது. இநத உலகில் பாபமென்னும் நீர நிறைநத நதி, எல்லையறறு விரிநது கடபபதறகு அரிதானதாகவும் பயங்கரமாகவும் காட்சிபளிககிறது. இதில காம குரோதமென்னும் முதலைகளோடு சுழல களும நிறைநதிருக்கினறன சுப, அசுப கர்மங்களே இதன் இரு கரைகளாக இருக்கினறன. அதோடு துக்கமென்னும் பயஙகர நீரோட்டம் காணப்படுகிறது மேறகூரிய தொடிய வனத்தில வசிககின்ற துளசிதாசனாகிய நான்,

மேலே கூறியவற்றால் மிக்க துக்கத்துடன் இருக்கிறேன். கருணைக்கடலான ரகுகுல திலகமே! கலியினால் பீடிக்கப்பட்டு இருக்கும் இந்தக் கடினமான நேரத்தில் என்னைக் காப்பாற்ற வேண்டுகிறேன்.

## 60

ஹே தேவா! ஹே நாராயணா! ஞானத்தின் மூலமாகவும் தியானம் செய்யத் தகுந்த இருப்பிடமாகவும் இருக்கும் உன்னை வணங்குகிறேன். அகில லோகங்களையும் காத்துக் கருணை உள்ளங்கொண்ட பக்தர்களை ரட்சிக்கும் தவத்தில் ஈடுபட்டிருப்பவனே! உனது சரீரமானது கோடிக்கணக்கான காமதேவனின் அழகும் எண்ணற்ற சூரியஒளியும் பொருந்தியதாக இருக்கிறது. கண்கள் முழுமையாக மலர்ந்துள்ள தாமரை மலரினை ஒத்திருக்கின்றன, அழகிய முகத்தில் தோன்றும் சிரிப்போ சந்திரகிரணத்தை ஒத்திருக்கிறது. நீ எல்லாவகையான அழகிற்கும் இருப்பிடம்; அளவற்ற குணநலம் பொருந்தியவன், பிரம்மா, வேதம், பண்டிதர்கள், சிவபெருமான் ஆகியோரால் வணங்கப்படும் காவமற்றவனாக இருப்பவன், செந்தாமரை மலரை ஒத்த உனது திருவடிகளிலிருக்கும் அன்பெனும் மகரந்தத்தை பருகும் முனியாகிய வண்டானது பருகிகொண்டிருக்கிறது. நீ இந்திரனால் அனுப்பப்பட்ட காமதேவனின் கர்வத்தை அழித்தவன்; குரோதமற்றவன்; ஞானரகம் போன்றவன்; மற்றும் பிரம்மசாரியாக இருப்பவன்.

ஹே பிரபோ! நீ மார்க்கண்டேய முனிவரின் வேண்டுகோளுக்கிணங்க பிரளயமின்றியே பிரளய லீலைகளைச் செய்து காண்பித்தவன். பவித்ரமான வனம், மலை மற்றும் நதியினைக் கொண்ட பதரிகாசிரமத்தில் நீ பத்மாசனத்

தில் அமாநதிருககும் காணறகரிய காட்சி சித்தா, யோகிகள மறறும் தேவர்களுக்கு ஆனநதத்தையும் மங்களத்தையும் அளிககவல்லது

பதரிகாசிரமத்திறகுச் செலலும வழியில மிக்க பலம பொருந்தியவர்களும் கணடு மலைத்துப போகுமளவுக் கான மன அழறசி மறறும் உடலழறசி ஆகிய இருமலைகள் இருக்கினறன. மன அழறசி ஏற்படும்போது, சநதோஷம் தானே மறைநது உடலழற்சி ஏறபடடுவிடும்!

ஹே புவனேச்வரனே! இங்கு அகம்பாவமானது மன அழறசியையும் கர்வம், குரோதம், பேராசை ஆகியவை உடலழறசியையும ஏற்படுத்திவிடுகினறன. பகை, பொறாமை, மோகம் ஆகிய வழித் தடஙகளானது, கருணையினறிக் கொடிய செயலகளையும் செய்ய வைதது விடுகினறன. அஙகு வீர, தீர புருஷாகளையே மயக்கிக் கஷ்டத்திலாழ்த்தக் கூடிய, பயஙகர கததிமுனைக்கு ஒப்பாக இருக்கும கடைக்கண பாாவையுடைய பெண் களுக்கு முன்பாகக் கதியறற ஏழைகளான நாங்கள எம்மாத்திரம்?

ஹே தலைவனே! உன்னைத் தரிசிகக வரவேணடிய மார்க்கம் புலப்படாமலிருப்பதோடு, துஷ்டாகளுடைய சகவாசம் வேறு எனக்கு ஏறபடடுவிட்டிருக்கிறது. என கையில் வைராக்கியமென்னும் ஊன்றுகோல்கூட இல்லை. உன்னைத் தரிசிகக வேணடுமென்ற ஆசையில் துடிததுக் கொணடிருக்கும நான மாயாவலையில வீழநது துன்பத திலிருக்கிறேன். கஷ்டத்திலிருக்கும் இநத சேவகனைக் காப்பாறறுவாயாக! ஹே பிரபோ! ரட்சித்தருளவாயாக!

ஹே தலைவா! ஏழை துளசிதாசனாகிய என்னிடம் தாமம் என்ற பாதேயம் (காலை உணவு)கூட இல்லை,

களைப்பினால் மிகவும் துக்கப்பட்டிருக்கிறேன். துன்பமோ அதிகமாக இருக்கிறது. மோகமானது எனது புத்தியைக் கூட பேதலிக்கச் செய்துவிட்டிருக்கிறது. ஹே சக்ரபாணியே! வீரமும் பலமும் கொண்டுள்ள ஆனந்தந் தின் இருப்பிடமே! தாமதமின்றி உனது தாமரைக் கரங்களை நீட்டி எனக்கு அபயமளிப்பாயாக!

## 61

ஹே விந்துமாதவ! தேவா! நீ எல்லாச் சுகங்களையும் பொழியவைக்கும் மேகம்; ஆனந்தவனமான காசியைத் தூய்மைப்படுத்தி ராகத்வேஷங்களால் ஏற்படும் ஆபத்துக்களை நீக்குபவன், பிரம்மா, சிவன, சனகாதி முனிவர்கள், சுகதேவர், ஆதிசேஷன், முனிவர்களாகிய வண்டுகள் உனது திருவடிகளில் வாசம் செய்து கொண் டிருக்கிறார்கள்.

நிர்மலமான நீலகல்லை ஒத்த உனது சரீரம் கோடிக் கணக்கான காமதேவனின் ஒளியை ஒத்ததாக இருக்கிறது. உனது பீதாம்பரம் நீலவானத்தில் தோன்றும் மின்னலைப் போன்று பிரகாசிக்கிறது, செங்கமலங்களை ஒத்த உனது அழகிய கண்கள் பக்தர்களுக்குச் சுகமளிக்க வல்ல கருணை மிகுந்தவை.

நீ காலதேவனுக்குச் சிங்கத்தைப் போன்றவன், ராட்சதருபக் காட்டினை அழிக்கவல்ல அக்னி போன்றவன் மோகமென்னும் இருளைப் போக்குவதற்குச் சூரியனைப் போன்றவன், உனது நான்கு கரங்களிலும் சங்கு, சக்கரம், கதை, தாமரை முதலானவை இருக்கின்றன, தாமரை மலர்மீது அன்னப்பறவை அமர்ந்திருக்கிறதோ என்று

நினைக்கும்படியாக உனது கரத்தில் சங்கு விளங்குகிறது. உனது சிரசிலுள்ள கிரீடமும் காதிலுள்ள குண்டலங்களும் நெற்றியிலுள்ள திலகமும் வண்டுகள் கூட்டத்தைப் போன்ற கேசமும் புருவங்களும் பற்களும் உதடுகளும் மூக்கும் மிக அழகானவை, உனது அழகிய கன்னங்களும் சங்கினை ஒத்த கழுத்தும் இன்பத்தின் எல்லையாகும்.

பகவானே! உனது இனிய சிரிப்புச் சந்திர கிரணத்தை யும் முல்லைப்பூவையும் ஒத்திருக்கிறது, உனது இதயத்தில் நவீன மலர்களைக் கொண்ட விசாலமான பூந்தோட்டம் இருக்கிறது, அதில் ஸ்ரீவத்ஸத்தின் அழகிய தோற்றமும் காணப்படுகிறது. நீ பிராம்மணர்களை ரட்சிப்பவன், அளவற்ற புகழுடையவன், குரோதமற்றவன், பிறப்பற்றவன், எல்லையற்ற பலசாலி மற்ற எல்லா அபார மகிமைகளையும் உடையவன். உனது மார்பினில் ஆபரணங்களும் புஜங்களில் கவசங்களும் கைகளில் ரதனங்கள் பதித்த பொற்காப்புகளும் இடையில் மணிகளாலான ஒட்டியாணமும் இரு கால்களிலும் அழகிய அன்னப்பறவையைப் போன்ற, ஒளி வீசும் சலங்கைகளும் இருக்கின்றன. உனது ஒவ்வொரு அங்கமும் மனதைக் கவரக் கூடியது, மொத்த உருவமும் அழகுமயமானது. எல்லாச் சௌபாக்கியங்களைக் கொண்டவளும் மூவுலகிலும் அழகானவளுமான லட்சுமிதேவி உனது இடதுபுறத்தை அலங்கரித்துக் கொண்டிருக்கிறார்.

கங்காதேவியின் கரையிலே அழகிய கோயிலில் வாசம் செய்து கொண்டிருப்பவனே! உன்னைத் தரிசிப்பவர்கள் மிக்க பாக்யவான்களாவர். நீ எல்லா மங்களங்களுக்கும் இருப்பிடமானவன், கடினமான சந்தேகத்தைப் போக்கி, பாபமென்னும் வனத்தை அழித்து, துன்பத்தைப் போக்குபவன்; பூபாரத்தைத் தாங்கி உலகைப் படைத்து,

காதது, அழிக்கக்கூடியவன், மற்றவர்களால் ஜெயிக்க முடியாத கருணாமூர்த்தியாக இருப்பவன். ஞானம், விஞ்ஞானம், வைராக்கியம், செல்வம் ஆகியவற்றின் பொக்கிஷமான நீ அஷ்டசித்திகளையும் அளிக்க வல்லவன். கருடவாகனனான ஹே ஸ்ரீராமா! துளசிதாசனாகிய என்னை உலகப் பந்தமெனும் பாம்பு பிடித்துக் கொண்டிருப்பதால் மிகவும் பயமாக இருக்கிறது. என்னைக் காப்பாற்ற வேண்டுகிறேன்.

## 62

மனமே! பகவான் விந்துமாதவருடைய அழகினை முடிமுதல் அடிவரை இக் கண்களால் பருகுவதே இப் பிறவியினால் ஏற்படக்கூடிய பெரும் பலனாகும்; பெருமையுமாகும். அவர் நிர்மலமான, இளமையான மற்றும் புஷ்டியான அழகிய சரீரத்தைக் கொண்டவர். குளிர்ந்த தன்மையினால் அவருடைய அழகு மேலும் அதிகமாகியுள்ளது. நீலத் தாமரை, நீல மேகம் தமாலமரம், மரகதம் யாவும் இவரது சரீரத்திலிருந்து தான் ஒளியைப் பெற்றுள்ளதுபோல் தோன்றுகிறது. இவருடைய அழகிய பாதங்களில் சுபத்தின் சின்னமிருக்கிறது. சிகப்பு மற்றும் நீல நிறத் தாமரைகள் ரத்தினத் தோடு கூடிய இலைகளிலிருந்து தோன்றுகின்றனவோ என்று கருதும்படியாக இவரது விரல்களும் நகங்களும் காட்சி அளிக்கின்றன. ரத்தினங்கள் இவரது பொற்சிலம்புகள் பக்தர்களுக்கு ஆனந்தத்தை அளிக்க வல்லன, சிவபெருமானின் இதயத்தில் அழகிய கோயிலை ஏற்படுத்தி அதில் விஷ்ணுபகவான் அநேக ரூபங்களில் வாசம் செய்கிறாரோ என்று நினைக்கும்படியாக இருக்கிறது. இவரது இடையிலுள்ள ஒட்டியாணத்தின் ஓசையை ஒப்பிடவோ, வாணிக்கவோ இயலாது,

பொற்றாமரையினிடையே வண்டுகள் ரீங்காரமிடுகின்ற னவோ என்று நினைக்கத் தோன்றும். இவரது விசாலமான மார்பகத்தில் தோன்றும் ப்ருகு முனிவருடைய பாதங்களின் அடையாளம் இவரது உள்ளத்தின் பெருந்தன்மையை எடுத்துக் காட்டுவதாக இருக்கின்றது. இவரணிந்திருக்கும் காப்பு முதலிய அநேக ஆபரணங்கள் யாவும் பிரம்மனால் மனமுவந்து தன் கைகளால் செய்யப்பட்டனவோ என்று நினைக்கும்படி காட்சி அளிக்கின்றன. தங்கத்தினாலான மாலையின் நடுவே தொங்கும் ரதன பதக்கத்தினுடைய அழகை வர்ணிக்க இயலாது. அக் காட்சி மேகக் கூட்டத்தினிடையே நட்சத்திர மண்டலத்தில் நவக்கிரகங் களின் கூட்டம் நடைபெறுகிறதோ என்று நினைக்கும்படி யாக இருக்கிறது. (அவருடைய சரீரம் மேகங்களுக்கும், மார்பினில் தொங்கும் தங்கமாலை நட்சத்திரங்களுக்கும், அம் மாலையின் நடுவே இருக்கும் ரத்னங்கள் நவக்கிரகங் களுக்கும் ஒப்பிடப்பட்டுள்ளன) சாப்ப உடலினை ஒத்த இவரது புஜங்களில் தாமரை சங்கு, சக்கரம், கதை ஆகியவை சோபித்துக் கொண்டிருக்கின்றன, கழுத்தின் அழகில் எழில் மிகுந்திருக்கிறது. முகவாய்க்கட்டை, உதடு மற்றும் முகத்தின் மீதும் அழகின் ஒளி படர்ந்திருக்கிறது. இவரது பற்கள் மாணிக்கம், முல்லைப்பூ, மின்னல் இவை யாவும் வெட்கும்படியாக இருக்கின்றன. மூக்கு கண்கள், கன்னம், காதின் குண்டலங்கள், புருவங்கள் இவையாவும் என்னை மிகவும் கவர்ந்துவிட்டன. சுருட்டையான கேசத்தைக்கொண்ட இவரது சிரசில் அழகிய மகுடமிருக் கிறது. நெற்றியில் மிளிரும் திலகம் சந்திரமண்டலத்தின் மீது படர்ந்த மின்னலின் ஒளி அப்படியே நிலைத்து நின்று விட்டதோ என்று வாணிக்கும்படியாக இருக்கிறது. ஒப்பு மையற்ற பீதாம்பரத்திற்கு ஒப்புமை கூற மனதினால் இயலவில்லை, அக் காட்சி அதிக அளவிலான மாணிக்கம

நிறைந்த நீல மேனியின் உச்சியில் பொன்னாலான ஆடை ஒளிவீசிக் கொண்டிருப்பது போல் தெரிகிறது. தமால மரத்தினருகில், நீல நிற ஆடை அணிந்த பொற்கொடி போல், அவருடன் இடதுபுறத்தில் அமர்ந்திருக்கும் லக்ஷ்மிதேவியினால் மேலும் அழகு சேர்ந்திருக்கிறது. நூற்றுக்கணக்கான சரஸ்வதிகள், ஆதிசேஷன் ஆகியோரும் வேதங்கள் யாவும் சேர்ந்தும் இவ்வழகை முழுமையாக வாணிக்க இயலாதபோது, மந்தபுத்தி கொண்ட துளசிதாசனாகிய என்னால் இந்த திவ்ய அழகை எவ்வாறு வாணிக்க இயலும்?

## 63

மனமே! இப் பிறவியின் பயன் என்னவெனில், ஒரு கணம இமைப்பதையும் மறந்து அழகிய உருவம் கொண்ட பகவான் விந்துமாதவனைக் கண்டு களிப்பதே ஆகும்.

அவருடைய மென்மையான பாதங்கள் பூரணமாக மலர்ந்த செந்தாமரையினை ஒததிருக்கின்றன; நகங்களின் ஒளி இருளினைப் போக்கவல்லதாக இருக்கின்றது. பாதங்களில் வஜ்ராயுதம், கொடி, பாசி, தாமரை ஆகியவற்றின் சிறந்த ரேகைகள் இருக்கின்றன, அங்குசத்தின் சின்னம் மனம் என்னும் யானையை அடக்கவல்லது ஆகும். கால்களில் மணிகள் நிறைந்த பொற்சிலம்பும், இடையில் ஒட்டியாணமும் மதுரமாக ஒலித்துக் கொண்டிருக்கின்றன; வயிற்றினமீது மூன்று ரேகைகள் இருக்கின்றன. பொய்கையை போன்று ஆழமான நாபியில் ஞானியான பிரமமா தோன்றி இருக்கிறார்; மார்பினில் துலங்கும் வனமாலையும் அதன் நடுவே இருக்கும் ரத்தினப் பதக்கமும் மிக அழகாக

சாட்சி அளிக்கின்றன, அங்கிருக்கும் பிருகு முனிவரின் பாதச் சின்னங்கள் மனதைத் தன்வயப்படுத்துகின்றன.

நீலத் தாமரைக் கொத்தின் நிறத்தினை ஒத்த அவருடைய சரீரத்தின் மீதிருக்கும் பீதாம்பரம், அழகினைப் பொழிவது போன்றிருக்கிறது, கைகளில் அழகிய காப்பும் கைக்கவசமும் மோதிரமும் தனி ஆனந்தத்தையே கொடுக்கின்றன, யானையின் துதிக்கையை ஒத்த நான்கு கைகளிலும் சங்கு, சக்கரம், தண்டாயுதம், தாமரை மலர் ஆகியவற்றை வைத்துக் கொண்டிருக்கிறார், கழுத்து சங்கினை ஒத்திருக்கிறது. முகவாய்க்கட்டை மற்றும் புருவங்களின் அழகு எல்லை மீறியதாக இருக்கிறது. செவ்விதழ்களும் எடுப்பான மூக்கும் அமைந்திருக்கின்றன. அன்றலர்ந்த தாமரை போன்ற கண்களும் சந்திரனை ஒத்த முகமும் புன்சிரிப்பும் பக்தர்களுக்குச் சுகம் அளிக்கவல்லது ஆகும். அழகிய கன்னங்களும் காதில் குண்டலமும் சிரசில் மகுடமும் நெற்றியில் அழகிய திலகமும் ஒளிவீசிக்கொண்டிருக்கின்றன. குவிந்த புருவங்களும் கரிய விழிகளும் அழகாக இருக்கின்றன. அவரது கரிய கூந்தலைக் கண்டு கரிய வண்டும் வெட்கமடைந்து விடுகின்றது.

அழகு, நல்லொழுக்கம், நற்குணம் ஆகியவற்றின் இருப்பிடமான லக்ஷ்மிதேவி இப்பகவான் விஷ்ணுமாதவரின் இடது பக்கத்தில் அமர்ந்து அவருடைய பாதசேவையில் ஈடுபட்டிருக்கிறார்கள். இவருடைய தயவை சிவன், பிரம்மா, முனிவர், மானிடர், தைத்யர், தேவர் யாவரும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த அழகிய ஸ்வரூபத்தில் முழுமையாக மனம் லயிக்கும்போதுதான் துளஸிதாஸனாகிய எனது சம்சார பயம் தெளியும். இல்லையெனில் ஒவ்வொரு மானிடரும் கதியற்று,

சுகமற்றுக் கோடிக்கணக்கான ஜனமம் எடுத்து அலைய வேண்டியிருக்கும்.

## 64

உலகப் பேதங்களிலிருந்து விலக்கக்கூடிய கருணையின் இருப்பிடமான ஸ்ரீ ரகுநாதரே! துளசிதாசனாகிய நான் உன்னை வணங்குகிறேன். நீ ரகுவம்சம் என்னும் அல்லி மலருக்குச் சந்திரனைப் போன்றவன். பிரம்மாவும் சிவனும் உன்னுடைய பாதக்கமலங்களின் சேவைசெய்து கொண்டிருக்கிறார்கள்.

நீ உனது பக்தர்களின் இதயக்கமலங்களில் உலாவும் வண்டைப்போன்று இருக்கிறாய். உனது சரீரத்தின் அழகு எண்ணற்ற காமதேவர்களுக்குச் சமமானது ஆகும். பிரபலமான மோகம் என்னும் இருளைப்போக்க வல்ல சூரியனைப் போன்றவனே! நீ அறியாமை என்னும் வனத்தினை அழிக்கும் பலம் பொருந்திய அக்னியைப் போன்றவன்; காவம் என்னும் சமுத்திரத்தை வற்றச் செய்யும் அகத்திய முனியைப் போன்றவன்.

நீ தேவர்களை மகிழவிக்கப் பூபாரத்தைக் குறைத்தவன். ஆசை, பகை முதலிய பாம்புகளுக்குக் கருடனைப் போன்றவன், காமரூப யானைகளுக்குச் சிங்கம் போன்றவன்; முரன் என்னும் அசுரனின் பகைவன்.

உனது திருவடித்தாமரைகள் பிறவிப் பெருங்கடலைக் கடக்க உதவும் ஓடம் ஆகும். ஆனந்த மழையைப் பொழியச் செய்யும் ஜானகி வல்லபரே! ஆஞ்சநேயரின் அன்பு என்னும் ஏரியில் இருக்கும் அன்னமே! பக்தர்களின்

ஆசைகளை நிறைவேறுமபோது பலனை எதிர் பார்க்காத காமதேனுவைப போன்றவனே! தயாள மானவனே! நீயே மூவுலகங்களின் சிரோரனமணி, குணங்களின் வனம மறறும சாந்தியின் இருப்பிடம ஆவாய.

## 65

ஏ நாவே! நீ 'ராம் ராம' என்று ராமநாமத்தை உரக்க கூறிக் கொண்டும 'ராம ராம' என்று ஜபித்துக கொண்டும ராமநாமத்தில லயித்து விடுவாயாக!

ஏ மனமே! ராமநாமம என்ற மேகத்திற்குச சாதகப பறவையாகி அன்பு என்னும அமுத மழைத்துளி வேண்டி அன்புத்தாகம கொளவாயாக! மற்ற வகைகளில உறபத்தி யான நதி, ஏரி மறறும சமுத்திரத்திலுள்ள நீரின்மீது ஆசை வைக்காமல ராமநாம பக்தியில திளைத்து விடுவாயாக!

சாதகப்பறவையின நண்பனான மேகம, சாதகப் பறவையின அன்பைச் சோதிக்க எண்ணிக் கர்ஜித்து, இடி இடித்து ஆலங்கட்டி மழையைப் பொழியச் செய்கிறது. இறுதியில சாதகப்பறவையின் அன்பும உறசாகமும் மேலும் மேலும் அதிகரிப்பதை அறிந்து மகிழ்ச்சியுடன மழையைப பொழியச செய்து, சாதகப்பறவையைத் திருப்தி அடையச் செய்துவிடுகிறது. எனவே நீயும கஷ்டங்களில மனதைப் பறிகொடுக்காமல ராமநாமமே கதியென்று ராமநாமத்திலேயே புத்தியைச செலுத்தி ராமநாமத்தின பக்தனாக மாறிவிடுவாயாக!

இத்தகைய பக்தர்களாக யார யாரெல்லாம இருக்கிறார்களோ, வருங்காலத்தில யாரெல்லாம

இத்தகைய பகதர்களாக மாறுகிறார்களோ, அவர்களோ இம மூவுலகிலும் பாககியவான்களாவர். இந்த ஒரு வழிப் பாதை மிகவும் கடினமானது. இதில் நடக்கும்போது ஆங்காங்கே காணும் நிழலகளைக் கணடு சுவ நேரம் ஓதுங்கி உன வழியை மறநது விடாதே! துளசிதாசனாகிய எனது வெற்றி எலலாம் சுயநலமின்றி இதைக் கடைப பிடிபபதிலேயே இருக்கிறது.

(இங்கு மனைவி, புதல்வர்கள், செலவம, சுகபோகம ஆகியவையே நிழல்களாகக் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.)

## 66

ஏ பைததியமே! ராம், ராம எனறு சதா ஜபிததுக கொணடிருப்பாயாக! கடப்பதற்கு அரிதான இப்பிறவி யெனனும் பெருங்கடலைக கடப்பதறகு ராமநாமமே தோணியாகும். ராமநாமஜபம என்ற இச சாதனை யினாலதான நீ சகல சௌபாககியங்களையும் அடைய முடியும. ஏனெனில் யோகம, புலனடக்கம், ஆகிய எலலா நல்வழிகளையும் கலி எனனும வியாதி பிடிததுள்ளது. இவைகளால ஒரு நலல பயனும ஏறபட முடியாது.

நலலவரானாலும கெடடவரானாலும குடிசையிலிருந தாலும் மாடியில் இருந்தாலும் இறுதியில ராமநாமத தினால மட்டுமே எல்லோருக்கும் காரியம கைகூடும். இநதப பிறவி எனற ஆகாசத தோடடததில பூவும் பழஙகளும தெரியும். அங்கிருக்கும் புகைக கோபுரததைக கண்டு நீ மயங்கிப்போய் விடாதே. ராமநாமததை விடுதது வேறிடத்தில நம்பிக்கை வைததிருப்பவன், ஏ துளசிதாஸ! எதிரில் பரிமாறப்பட்டிருக்கும் உணவினை

விட்டு விட்டு வேறுக் கவள அன்னத்தை எதிர்பார்க்கும் மூடனைப் போன்றவன் ஆவான்.

(ஆகாயத்தில் உண்மையிலேயே தோட்டம் கிடையாது. எனினும் மேகங்கள் தோட்டம் போன்ற ஒரு பொய்யான தோற்றத்தைத் தரக்கூடும். அது போன்று இந்த உலகம் நம்பிக்கைக்கு உரியதல்ல. மேகங்களைப் போன்ற இந்த உலகின் பொய்த் தோற்றங்களைக் கண்டு இதன் மீது நம்பிக்கை கொள்ளலாகாது!)

## 67

மனமே! அன்புடன் ராம் ராம் என்று ஜபித்துக் கொண்டிருப்பாயாக! கலியுகத்தில் வைராக்கியமோ, யோகமோ, யக்ஞமோ, தியாகமோ எதுவுமே இல்லை. ராமநாமத்தை நினைத்துக் கொண்டிருத்தலே எல்லா நியமங்களையும்விடச் சிறந்ததாகும். அதை மறத்தல் என்பது அசட்டையின் மகுடமாகும். ராமநாமம் பெரிய மாணிக்கமாகும். உலகிலுள்ள ஆடம்பரப் பாம்பு போன்றதாகும்.

பாம்பின் மாணிக்கத்தை எடுத்துவிட்டால் குழப்பமடைந்த அப்பாம்பு உயிர்வாழ முடியுமோ? முடியாது. அவ்வாறே ராமநாமமென்னும் மாணிக்கத்தை நமதாக்கிக் கொண்டால் உலகத் துன்பமென்னும் பாம்பு மடிந்துவிடும் அல்லவா?

ராமநாமம் அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கு பலன்களையும் தரக்கூடிய கற்பகவிருட்சமாகும் என்று வேதங்களும் புராணங்களும் கூறுகின்றன; பண்டிதர்களும் கூறுகின்றனர்; சிவபெருமானும் கூறி

யிருக்கிறார். ராமநாமமே பக்தியின் சாரமாகும். ராமநாமமே துளசிதாசனாகிய எனது வாழ்க்கையின் ஆதாரமாகும்.

## 68

மனமே! என்றுவரை நீ நாவினால் "ராம் ராம்" என்று ஜபிக்கவில்லையோ அன்றுவரை நீ எங்கே சென்றா லும் மூன்று தாபங்களிலும் எரிந்து கொண்டுதான் இருப்பாய். அதுவரை, நீ கங்கைக்கரையிலிருந்தாலும் நீரின் சுகத்தை அடையமாட்டாய்; கற்பக விருட்சத்தின் அடியிலேயே நின்றாலும் தரித்திரம் சதா உன்னிடம் நிலைத்து நிற்கும், விழித்திருக்கும்போதும், நடக்கும் போதும், தூங்கும்போதும், ஏன், கனவிலும்கூட உனக்குச் சுகம் கிடைக்காது, ஜன்ம ஜன்மங்களுக்கும் எல்லா யுகங்களிலும் இவ்வுலகில் அழுதுகொண்டே இருப்பாய்; எந்த அளவுக்கு உன்னை விடுவித்துக்கொள்ள முயற்சி செய்கிறாயோ அந்த அளவுக்கு மேலும் பிணைக்கப் படுவாய். இந்த நிலையில் நீ உண்ணும் உணவு அமுதத் தில் ஊறியதாக இருந்தாலும்கூட அது உனக்கு விஷமாகி விடும். மூவுலகிலும் துளசிதாசனாகிய என்னைப் போன்று கதியற்று ஆனது யார், கதியற்று யார்தான் இருக்கிறார்கள், அல்லது யாராதான் ஆவார்கள்? போதும். மீனுக்கு எவ்வாறு நீர்தான் நம்பிக்கையானதோ அதேபோல எனக்கு ராமநாமமே நம்பிக்கையானது!

## 69

மனமே நீ அன்புடன் மகாராஜா ஸ்ரீராமச்சந்திரரின் நாமத்தை நினைப்பாயாக! அவருடைய நாமம்—பக்தி மார்க்கத்தில் செல்பவர்களுக்கு—வழிச் செலவுக்குப் பணம

இல்லாதவர்களுக்குப் பணமாகவும் ஆதரவற்றவர்களுக்கு ஆதரவாகவும் இருக்கக் கூடியது ஆகும்.

ராமநாமம் அபாக்கியவான்களுக்குப் பாக்யமாகவும் குணமில்லாதவர்களுக்குக் குணமாகவும் இருப்பதாகும் என்றும் எளியவர்களுக்குத் துணையாகவும் ஏழைகளுக்குத் தயாளமானதாகவும் உபாயமற்றவர்களுக்கு உபாயமாகவும் இருக்கிறது என்றும் பிறர் கூறக் கேட்டிருக்கிறேன். வேதங்களும் இதற்குச் சாட்சியாகும்.

ராமநாமம் நொண்டி முடவர்களுக்குக் கால் கைகளாகவும் குருடர்களுக்குக் கண்களாகவும் பசித்தவனுக்குத் தாய் தந்தையரைப் போன்றும் ஆதரவற்றவர்களுக்கு ஆதரவாகவும் இருப்பதாகும்; பிறவிப் பெருங்கடலைக் கடக்க உதவும் பாலமாகும், பிரம்மானந்தத்தின் மூலாதாரமாகும். அற்பமானவர்களைத் தூய்மைப் படுத்துவதற்கு ராமநாமத்தைப் போன்று சிறந்தது வேறொன்றும் இல்லை ராமநாமத்தை நினைத்த தாலேயே துளசிதாஸனைப் போன்ற தரிசுநிலமகூட மிக்க வளமுடையதாக ஆயிற்று.

## 70

மனமே! நீ நான் சொன்னபடி நடந்து ராமநாமத் திடம் அன்பு செலுத்தினால் உனக்கு எல்லா நலன்களும் உண்டாகும்.

ராமநாமம் குளிர்சுரத்தைப் போக்குவதற்கு அக்னி போன்றதாகும். ராமநாமத்தின் மகிமையினால் கலி காலம் தன் காமம், குரோதம் போன்ற நண்பர்களுடன் பயந்து ஓடிவிடும்.

ராமநாமத்தின் மகிமையினால் வைராக்யம், யோகம் ஆகியவை உயிர்பெற்றிருக்கின்றன; பிரம்மாவேகூட விரோதமாக இருந்து காமமென்னும் பெயரால் பிரதிகூலமான தலைவிதியை எழுத முடியாது.

நீ ராமநாமம் என்னும் மோதகத்தை அன்பு என்னும் அமுதினில் தோயத்தெடுத்தாயானால் நிரந்தரமாகச் சுகமடைந்து, வீடு வீடாக அலைய நேராது. ராமநாமம் ஒரு கற்பக விருட்சமாகும். அதனிடம் நீ என்னென்ன கேட்கிறாயோ அவை யாவற்றையும் அடைவாய்!

எனவே துளசிதாசனாகிய எனக்கு இம்மையிலும் மறுமையிலும் ஒரு குறைவும் ஏற்படாது என நம்புகிறேன்.

## 71

மனமே! நீ இப்படிப்பட்ட சிறந்த எஜமானனிடத்தில் தொண்டு செய்யும்போதும் கள்ளத்தனம் செய்கிறாய். நீ உன்னையே அறிந்து கொள்ளவுமில்லை; மற்றவர்கள் கூறுவதைப் பற்றி உணரவுமில்லை. எதற்கும் உபயோகமற்ற இயந்திரக்கல்லைப் போல் இருக்கிறாய்.

ஸ்ரீராமர் முனிவர்களின் மனதிற்குக்கூட எட்டாதவர். அதே சமயம் பக்தர்களுக்குத் தாய் — தந்தையைப் போன்று எளிதானவர். அவர் கருணைக்கடல், இயல்பாகவே நட்பு கொள்பவர்.

லோகத்திலும் வேதத்திலும் ரகுநாதரைவிட உயர்ந்தவர் யாருமிலை என்பது மிகப் பிரசித்தமான விஷயமாகும். அவர் எல்லாக் காலங்களிலும், எல்லா இடத்திலும் எல்லோருடனும் இருக்கிறார்!

எல்லாமறிந்த சுவாமியிடம் தொண்டனின் கள்ளத் தனம் பலிக்காது என்பதை அறிந்துகொள். அன்பை மட்டும் ஏற்றுக்கொள்வதே ஸ்ரீராம தர்பாரின் நியம மாகும்.

அவருக்குச் சேவை செய்தால் அதனால் உடலுக்குத் துளிகூட வேதனை ஏற்படாது. மனத்தினால் செய்யும் சேவையைக்கூட அவர் ஏற்றுக்கொள்கிறார். பக்தர்கள் அவரை நினைத்தமாத்திரத்திலேயே அவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றி வைக்கிறார். பக்தர்களின் பெரிய பெரிய விருப்பங்களைப் பூர்த்தி செய்த பின்பும் அவர்களுக்கு ஒன்றும் அளிக்கவில்லையே என்று தயக்க மடைகிறார்.

அவர் யார் மீது மகிழ்ச்சி அடைகிறாரோ அவர் களிடம் ஜபப்படுகிறார். (ஆஞ்சநேயர் மீது சந்தோஷ மடைந்து அவர் வசமாகிவிட்டார்.) கோபமடையும் போது அவரவரது (ராவணன், பலி) கர்மத்தின் காரியப் பலாபலன்களை அளித்துவிடுகிறார்.

ராமநாமமென்னும் கற்பகவிருட்சம் எல்லாவிதப் பழங்களையும் அளிக்கவல்லது. தன்னிடம் வைத்திருப்ப தால் ஒரு பலனும் பெற இயலாத, விற்றால் ஒரு சல்லிக் காசுக்குக்கூட விலை போகாத துளசிதாசனான என்னைக்கூட மகிமைக்கச் செய்தவர் இந்தச் சக்ரவர்த்தி யான ஸ்ரீராமச்சந்திரர்!

## 72

ஸ்ரீராமர் தனது உபகார குணத்தினால் எனக்கும் உபகாரம் செய்திருக்கிறார். ஆனால் நானோ சுவாமியின்

பகைவனாக இருக்கிறேன். ஆயினும் அவர் இச் சேவக னின் நன்மையை விரும்புவராக இருக்கிறார்.

ஸ்ரீ ராமரைவிட உயர்ந்தவராக இருப்பவர் யார்? என்னைவிடச் சிறியவராக யார்தான் இருக்கிறார்கள்? ஸ்ரீராமரைப் போன்ற நல்லவரும் என்னைப் போன்ற கெட்டவரும் இவ் வுலகில் யார் உளர்?

உலகம் என்னை அவருடைய அடிமை என்று கூறுகிறது. ஆனால் நானோ (காம, குரோத, லோபத்தின அடிமையாக இருந்த போதிலும்) பிறர் அவ்வாறு கூற அனுமதித்திருக்கிறேன். இப்படிப்பட்ட பெரிய தவறுறை நான் செய்து கொண்டிருக்கிறபோதிலும் ஸ்ரீராமருடைய மனம் என்னைவிட்டுப் பிரியவில்லை. துரும்பு நீரினுள் வீழ்ந்தபோதும், நீரானது எவ்வாறு அதை அமிழ்த்துவ தில்லையோ (மேலே கொண்டு வருகிறதோ) அதே நிலைமையில்தான் துளசிதாஸனாகிய நானும் துரும்பை ஒத்திருக்கிறேன்.

## 73

உணர்வற்ற ஆன்மாவே! இவ்வாழ்க்கையென்னும் இருளிலிருந்து விழித்தெழுவாயாக! உடலும் வீட்டின்ப மும் சிற்றின்பமும் வானத்தில் தோன்றி மறையும் மின்னலைப் போன்றதே என்பதைத் தெரிந்துகொள்.

கானல் நீரில் மூழ்குவது, பாம்பு போன்ற கயிற்றி னால் விழுங்கப்படுவது போன்ற கஷ்டங்களை கனவில் தான் அனுபவிக்கமுடியும். நான்கு வேதங்களாலும் பண்டிதர்களாலும் கூறப்படுவதும், நீ அறிந்துகொள்ள வேண்டியதும் யாதெனில் தூக்கத்திலிருந்து விழித்தால

தான் கனவில் ஏற்பட்ட துன்பம் நீங்கும். நீ விழித்தெழுந்தால்தான் உடல் சம்பந்தமான தெய்வீகமான, உலகியல் சம்பந்தமான மூவகை தாபங்களும் நீங்கும். அப்போதுதான் இயல்பாகவே ராமநாமத்தில் பவித்ரமான அன்பு தோன்றும்.

## 74

மனமே! அறிவாளிகளை ஞானகிநாதரின் கருணை எழுப்பிவிடுகிறது. நீ எழுந்து மூர்க்கத்தனத்தை விட்டுப் பரமாத்மாவிடம் அன்பு செலுத்துவாயாக!

(உண்மை எது பொய் எது என்பதை) விசாரித்தறிந்து (காம குரோதம் போன்ற) குற்றங்களை நீக்கித் தாராள குணமுள்ள ஸ்ரீராமரின் துதிபாடுவாயாக! ஏனெனில் நான்கு வேதங்களும் அவரைக் கருணைக் கடலென்றும் ஏழைகளின் பங்காளன் என்றும் கூறுகின்றன.

நீ மோகமென்னும் அமாவாசை இருட்டில் வெகு நேரம் தூங்கி விட்டிருக்கிறாய். யார் கனவென்னும் மாயையில் மூழ்கிவிடுகிறார்களோ, அவர்கள் ஆத்ம ஞானத்தை அறிவதில்லை. இப்பொழுது பொழுது விடிந்துவிட்டது. ஞானமென்னும் சூரிய உதயமே பயம், நோய், மோகம் பகை முதலான அடர்ந்த இருளை விலக்கி விடும். பொழுது விடிந்ததை அறிந்து மோகம், போதை, கர்வம் முதலான திருடர்கள் ஓடிவிட்டார்கள். காமம், குரோதம், பேராசை, சஞ்சலம் ஆகிய ராட்சதர்கள் பயந்துவிட்டிருக்கிறார்கள்.

ரகுநாதரின் பெருமைகளை அறிந்த உடனேயே துக்கம், பாபம், மூன்று தாபங்கள் யாவும் தூர விலகி

விட்டன. இந்த கம்பீரக் குரலைத் தம் காதினால் கேட்ட வீரதீர முனிவர்கள் மோக நித்திரையிலிருந்து விடுபட்டு வைராக்கியம் ஆனந்தம் ஆகியவற்றை மதிக்க ஆரம்பித்திருக்கிறார்கள்.

துளசிதாசா! தயாளுவான பிரபு ஸ்ரீராமர் எல்லா உயிர்களும் குழப்பமடைந்திருப்பதை அறிந்தவுடன மறுபிறவியென்னும் வலையினை அறுத்து பரமானந்தத்தை அளிக்க ஆரம்பித்துவிடுகிறார்.

## 75

கெட்டவன் என்றாலும், நல்லவன் என்றாலும் நான் உன்னுடையவனே! எல்லோருடைய மனதில் இருப்பதையும் அறிந்திருக்கும் உன்னிடம் நான் பொய் கூறுவேனா? பரிசுத்தமான செயலால் மனதோடு கூறுகிறேன், நான் உன்னுடையவன். இதில் கபடம் ஏதும் இல்லை. கயிற்றின் முடி மீது தண்ணீர் வீழ்ந்ததால் எந்த அளவுக்கு இறுகுமோ அதேபோன்று பிடிவாதமும் உறுதியானதாகும்.

என்னை ஆதரிப்பார் யாருமில்லை. எனினும் இந்திரன், பிரம்மா, தேவர், மானிடன் யாரையும் ஆராதனை செய்யும் உத்தேசமும் எனக்கில்லை. யானையைப் போன்று இவர்களுக்குச் சேவை செய்தாலும் நாயைப் போன்று துச்சமான பலனைக் கொடுக்கும் சுயநல வியாபாரிகள் இவர்கள்! உன்னைப்போல துன்புற்ற ஏழைகளை இவர்கள் ஆதரிப்பதில்லை.

தேவ தேவா! 'நான் உனது அடிமை' என்னும் எனது வாக்குப் பொய்யாக இருக்குமேயானால் அது பாம்பினை

வசபபடுததும வித்தையை அறியாதவன் பாம்புக் கூட்டுக் குள நுழைநததுபோல ஆகும். அவனைப் பாம்பு நிச்சயம கடிநதுவிடும். அது போனற எநதக் கடுமை யான தணடனையை நீ எனக்கு அளித்தாலும் சரி, ஏற்றுககொள்கிறேன. ஆனால் நான் உனது அடிமை, எனறு கூறுவது உணமையே எனறு நிரூபணமானால, இவ விஷயத்தை உறுதிப்படுத்தும் வகையில பொது மககளிடையே அததாட்சி பத்திரமாக எனககு நீ தாம்பூலத்தை அளிப்பாயாக! துளசிதாசன் என்ற சாதகப பறவை ஸ்ரீராமரூபக் கருமேகத்தின் மீதுதான் ஆசைக் கொளகிறது.

## 76

துளசிதாசனாகிய நான் ஸ்ரீ ராமருடைய அடிமை. அவா எனக்கு 'ராம்போலா' (ராம் என்று சொல்லுபவன்) என்று பெயா சூட்டி இருககிறார். அவவபபோது ஒரு முறை ராம் எனனும இரணடெழுத்துக்களை உச்சரிப்பதே என்னுடைய வேலையாகும். இதனால் ஸ்ரீராமர் எனக்கு உணவு, உடை யாவற்றையும் அளித்து சநதோஷமாக வைததிருககிறாா. வீடுபேற்றையும் அடைவேனென்று வேதங்கள கூறுகினறன. இதனால் நான் எப்போதும் சந்தோஷமாகவே இருககிறேன.

ஸ்ரீ ராமரின் அடிமையாவதறகு முன், நான் கர்ம வினையின் கர்வம் என்னும் விலஙகினால பூட்டப்பட்டிருநதேன். கேட்பதறகே கஷ்டமான அத துனபஙகளை நான சகித்துக கொண்டிருநதேன். கஷ்டப்படுபவர்கள் மறறும் அநாதைகளின தலைவனான தயாளா ஸ்ரீ ரகுநாதா். நான் ஏழையாக பாபஜ்வாலையில

துன்பப்படுவதைக் கண்டு என்னைக் கர்மவினைகளி லிருந்து விடுவித்தார்.

அவர் விருப்பியபடியே நானும் "நான் உங்களுடைய அடிமையாக இருக்க விரும்புகிறேன். எனக்கு என்று யாரும் கிடையாது. நான் உங்களிடம் சரணடைகிறேன்" என்று அவரிடம் கூறினேன். அதன் பிறகு குருவான ஸ்ரீராமர் என் முதுகைத் தட்டிக்கொடுத்து என் கரங் களைப் பற்றி என்னைத் தனதாக்கிக் கொண்டு "நான் பக்தர்களுக்கு எப்பொழுதும் சுகமளித்துப் பரிபாலித்து வருகிறேன்" என்றார்.

ஸ்ரீ ராமருக்கு அடிமையானதைப் பார்த்து ஜனங்கள் என்னைத் தாழ்ந்தவன் என்று கூறுகிறார்கள். ஆனால் இதைப் பற்றிய கவலையோ, தயக்கமோ எனக்குச் சிறிதும் இல்லை. ஏனெனில் நான் யாரிடமும் கொடுக்கல் வாங்கல் செய்ய வேண்டியதில்லை. ஜாதிஜனத்தில் சேரவும் எனக்கு விருப்பமில்லை.

ஸ்ரீ ராமரின் சந்தோஷத்திலும் போபத்திலும் தான் துளசிதாசனாகிய எனக்கு லாபநஷ்டங்கள் அடங்கி இருக்கின்றன. அவரது அன்பின் மீது எனக்கு நம்பிக்கை இருப்பதால் மன சந்தோஷத்துடன் இருக்கிறேன்.

## 77

ஸ்ரீராமா! ஜானகிதேவி மற்றும் உலகத்தின் உயிர் மூச்சு போன்றவனே! உலகத்தைக் காப்பவனே! ஜகதீசா! ரகுகுலத்தின் தலைவனே! கமலக்கண்ணனே! உனது முகம் சந்திரனைப் போன்று குளுமையானது. நீயே சுகமளிப் பவன்; லட்சுமியின் இருப்பிடம். இயற்கையாகவே உனது

சரீரத்தின அழகு எண்ணற்ற காமதேவனகளை ஒத்திருக் கின்றது.

உலகிலுள்ள அனைத்துத் தாய், தந்தை, குரு, நண்பர், உறவினர் யாவருக்கும் நன்மையைச் செய்பவனே! நீ யாரிடமும் விரோதம் கொள்ளாதவன், துக்கத்தை நசிக்கச் செய்பவன், சரணடைந்தவர்களுக்கு அபயமளிப் பவன், வரம் வழங்கும் வள்ளல்; பக்தர்களை வாழ்விப் பவன; மிக்க தயாள குணமுடையவன்; உனது நாமம் பாபிகளையும் புனிதமாக்கும் சிறப்புடையதாகும்.

அகில உலகத்தாலும் வணங்கப்படுபவனே! எல்லா தேவர்களும் உனக்குச் சேவை செய்துகொண்டிருக்கிறார் கள். வேதங்களும் சாஸ்திரங்களும் உனது புகழைப் பாடிக் கொண்டிருக்கின்றன. இதையெல்லாம் அறிந்த தனாலதான் துளசிதாசனாகிய நான் உனது சேவகனாகி இருக்கிறேன். நீ என்னை மற்ற ஏழை, அடிமைக் கூட்டத்திலிருந்து தனியே வைத்திருப்பாயாக!

## 78

ஹே தேவா! உன்னைப்போல் ஏழைகளிடம் தயை காட்டுபவர் வேறு யாரும் இல்லை. வேறு யாரிடத்தில் சென்று என் ஏழ்மையை பற்றிக் கூறினாலும் அவர்களே ஏழைகளாகத் தோன்றுகிறார்கள். உனது தயவில்லை யென்றால் தேவர்கள், மானிடர்கள், முனிவர்கள், நாகர் கள் இவர்களிடையே தலைவர்களிருந்தாலும் அவர்களால ஒரு காரியத்தையும் செய்ய இயலாது.

ஸ்ரீராமா! ஆதியிலும் இடையிலும் முடிவிலும் நீயே தலைவனென்ற உண்மை. மூவுலகத்திலும் முக்காலத்தி

லும் பிரசித்தமாக இருக்கிறது. இதையே நான்கு வேதங்களும் ஆதரிக்கின்றன.

உன்னிடம் தானம் கேட்டவர்கள் யாரும் பிச்சைக்காரரென்று அழைக்கப்படவில்லை. துளசிதாசனாகிய நானும் உனது நற்பெயர், நற்குணம், நற்புகழ் ஆகிய வற்றைக் கேள்விப்பட்டு உன்னிடம் யாசகம் கேட்க வந்திருக்கிறேன்.

கல் (அகலிகை) மிருகம் (யானை) மரம் (யமலார்ஜுனர்)* பறவை (ஜடாயு) ஆகியவற்றைத் தனதாக்கிக் கொண்டவனே! தசரதச் சக்கரவர்த்தியின் புத்திரனே! நீ தரித்திரர்களை அரசனாக்கி இருக்கிறாய்.

ஏழைகளைக் காப்பவனே! உனது ஏழைச் சேவகன் நான். தயாளனே, ஒரே ஒரு முறை "இந்தத் துளசிதாசன் என்னுடையவன்" என்று பிறரிடம் கூறிவிடுவாயாக!

## 79

ஹே தேவா! நீ தயாளன்! நானோ ஒரு ஏழை. நீ வாரி வழங்கும் வள்ளல்! நான் பிச்சைக்காரன். நான

---

* குபேரருடைய இரு புத்திரர்களான நலகூபரனும் மணிகிரீவனும் நாரதரைக் கேலி செய்ததால் அவர்களை மரமாகும்படி சபித்துவிட்டார். அவர்கள் தங்கள் குற்றத்தை உணர்ந்து மன்னிக்கும்படி நாரதரை வேண்டினர். அப்போது பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் திருவடிகளால் தீண்டப்படும்போது சாபவிமோசனம் கிடைக்குமென்று நாரதர் கூறினார். நாரதருடைய சாபத்தினால் இருவரும் கோகுலத்தில் மருதமரங்களானார்கள். ஒரு நாள் யசோதை கிருஷ்ணரின் மேல் கோபங்கொண்டு அவரை உரலோடு சேர்த்துக் கட்டிவிட்டார். ஸ்ரீகிருஷ்ணரோ உரலையே இழுத்துக்கொண்டு சென்று அங்கிருந்த மரங்களிடையே நுழைந்து அம்மரங்களை வேரோடு விழும்படி செய்தார். அதனால் சாபவிமோசனமடைந்த அவ்விருவரும் பகவானுடைய புகழ்பாடி மூக்தியடைந்தனர்.

பெருமபாவி, நீயோ அப பாபஙகளை அழிபபவன்! நீ அநாதைகளின தலைவன! என்னைப போன்ற அநாதை இவ்வுலகில வேறுயாருமிலலை. என்னைப போன்று இவ்வுலகில துன்பப்படுபவருமிலலை. அதே சமயம் உன்னைப போன்று துன்பங்களைப் போக்குவாருமில்லை.

நீயே பரம்பொருளாக இருககிறாய்! நான் ஜீவனாக இருக்கிறேன. நீ எஜமானன! நான சேவகன. எனது தாய தந்தை, குரு, நணபன மறறும எலலாவகையிலும் எனது நலனை விரும்புவனும நீயே! உனககும் எனககுமிடையே இருக்கும் பல உறவுகளில எதை விரும்புகிறாயோ அநத உறவையே வைததுக்கொளவாயாக.

தீனதயாளா! எவவகையிலாவது இநதத் துளசிதாச னாகிய என்னை உனது திருவடிகளில் சரணடையச் செய்வாயாக!

## 80

தேவா! வேறு யாரிடததில நான யாசகம் கேடக முடியும்? அலலது நான் யாசகம கேட்பதை வேறு யாரால் தான் கொடுக்க முடியும்? எனது தரித்திரம் நீங்கும் வகை யில நான விரும்பிய பலனை அளிக்க வலலவர் யார்?

ஸ்ரீராமா! நீ தாமத்தின இருபபிடம், கோடிககணக கான காமதேவன்களைவிட வெகு அழகாக இருககிறாய். எல்லாவகையிலும் சிறநத அறிவாளியான நீ தானமென னும் கத்தியை செலுத்துவதில வல்லவன்.

மறறவாகள் சுகமாக இருககும்போது, அவாகளது வாசலிலும் (சிறிது தானம் வழஙக) நல்ல காலத்தில இரண்டு நாட்களுக்குப் பறை முழஙகும. ஆனால் தசரத

நநதனே! நீ, உனது (வனவாச நேரததிலும்) கஷ்ட காலத்திலும் (ஜடாயு, சுகரீவன, விபீடணன் ஆகிய) ஏழைகளை காப்பாற்றியிருக்கிறாய. உனக்கென்று சேவை ஏதும் செய்யாதவர்களுக்கும், (அகலிகை, சபரி) நற்குணமற்ற வற்றுக்கும் (குரங்கு, கரடி) அபயக்குரலைக் கேட்டவுடனேயே அவர்களது குறைகளைத தீர்த்து வைத்தவன். அச் சந்தோஷத்தில் அவர்கள் உன்னைச் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

இப்பொழுது பிச்சைக்காரத துளசிதாசனான எனது விருப்பத்தையும் அறிந்து அவ்விருப்பம் நிறைவேறும்படியான வரத்தை அளிப்பாயாக! ஸ்ரீராமசந்திரா! நீ நிலவை ஒத்தவன் நான (உனது அன்பை எதிர்பார்க்கும்) சாதகப பறவையாகும்படியான வரமளிப்பாயாக!

## 81

தீனபந்துவே! ஆனந்தக்கடலே! கருணையின் இருப்பிடமே! இரக்கமுள்ள ஸ்ரீராமனே! தலைவனே! நான் கூறுவதைச் சிறிது செவி மடுப்பாயாக! எனது மனம் மூன்று தாபங்களால் எரிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது. அதன் காரணமாக அது பைத்தியமாகப் பிதற்றிக் கொண்டிருக்கிறது. சில சமயம் தீய பிடிவாதத்தால பிரிவினை காரணமாகிறது. சில சமயம் மோகத்தில வீழ்ந்து பலவிதமான தீய காரியங்களைச் செய்கிறது. சில சமயம பெரிய தயாளனாகிவிடுகிறது. சில நேரத்தில திக்கற்று, அறிவற்று, தரித்திரனாகி விடுகிறது. சில நேரத்தில கர்வம் பிடித்த அரசனாகிவிடுகிறது. சில நேரத்தில மூடனாக, நயவஞ்சகனாக ஆகிவிடுகிறது. சில சமயம தாமரைத்தில் செல்லும் ஞானியாகிவிடுகிறது.

தேவா! சிவ சமயம இவ்வுலகம் செல்வம் நிறைந்ததாகக் காணப்படுகிறது. சிவ சமயம் பகைவர்களும் பெண்களும் நிறைந்ததாகக் காணப்படுகிறது. பிறவியென்னும் சித்தப் பிரமையினால் ஏற்படும் துன்பம் ஈசுவரக் கிருபையின்றி விலகாது.

புலனடக்கம், ஜபம், தவம், கட்டுப்பாடு, தாமம் விரதம் போன்ற அநேக மருந்துகள் இருந்த போதிலும், ஸ்ரீராமா! உனது அன்பைப் பெறவில்லையென்றால் இப் பிறவியென்னும் நோய் நீங்காது.

## 82

மோகத்தினால் ஏற்படும் பலவித பாபங்களைக் கோடி முயற்சிகள் செய்தாலும் நீக்க இயலாது. ஜன்ம, ஜன்மங்களாகப் பழக்கப்பட்டுவிட்ட மனம மோகத்திலேயே அதிகமாக ஒட்டிக் கொண்டிருக்கிறது.

வேற்றுப் பெண்களைக் கண்டதால் கண்களும் சிற்றின்பத்தில் ஈடுபட்டுள்ளதால் மனமும் புகழ், கர்வம் ஆகியவற்றால் உள்ளமும் கறை படிந்துவிட்டிருக்கின்றன. இதனால் இயல்பான ஆனந்தத்தை உயிர், தியாகம் செய்து விட்டிருக்கிறது. மற்றவர்களின் நிந்தனைகளைக் கேட்டதால் காது தூய்மையற்றதாகி விட்டது. மற்றவர்களுடைய குற்றங்களைச் சொல்லிச் சொல்லி நாவும் கறை படிந்துவிட்டது.

சுவாமி! உனது திருவருளை மறந்ததினால் எல்லாப் பாபங்களும் பாரமும் துளசிதாசனாகிய என்மீது விழுந்து விட்டிருக்கின்றன. இப் பாவங்களைத் தீர்க்க விரதம், தானம், ஞானம், தவம் முதலியவை அசிபவானவை

என்று வேதங்கள் கூறுகின்றன. ஆனால ஸ்ரீராமா! உனது சரணங்களின் அன்பு என்னும நீரின்றி அப் பாவங்களை நசிக்கச் செய்ய முடியாது.

## 83

ஒரு பயனுமின்றியே துளசிதாசனாகிய எனது வாழ்க்கை வீணாகக் கழிந்துவிட்டது. அதி துர்லபமான சரீரத்தைப் பெற்றிருந்தும், நான் கபடமற்ற மனநிலையுடன் மனம், வாக்கு மற்றும் செயலால் ராமபஜனையைச் செய்யவில்லை.

இளமைப் பருவமோ அஞ்ஞானத்தில், நிலையற்ற ஆசைகளில் நான்குமடங்கு மூழ்கிக் கழிந்துவிட்டது. இளம்பிராயமென்னும் ஜ்ூரத்தில் யுவதியென்னும் பத்தியமற்ற சாப்பாடு சாப்பிட்டதால் ஜனனி ஏற்பட்டு காமதேவ ரூப வாயு நிறைந்துவிட்டது. பிறகு வாழ்க்கையின் நடுப்பகுதியை விவசாயம், வியாபாரம் போன்ற வற்றிலும் பணம் சம்பாதிப்பதிலும் செலவழித்து விட்டேன்.

ஆனால ஸ்ரீராமருடன் விரோதித்துக் கொண்டதால் கனவில்கூட சுகம் கிடைக்காமல், இரவும் பகலும் மூன்று தாபங்களால எரிந்து கொண்டிருக்கிறேன். ஸ்ரீராமருடைய பக்தர்களுக்கோ, ஞானிகளுக்கோ, முனிவர்களுக்கோ பக்தியுடன் நான் ஒருபோதும் சேவை செய்தவனில்லை; ஸ்ரீரகுநாதரின் சரித்திரத்தைப் புளகாங்கிதத்துடன் கூறியதுமில்லை, சந்தோஷ மனத்துடன் கேட்டது மில்லை. வயது முதிர்ந்து உடல் தளர்ந்துவிட்ட பின்பு தான் மாணிக்கத்தை இழந்த பாம்பினைப் போன்று இப்பொழுது தலையிலடித்துக்கொண்டு தவித்துக்

கொண்டிருக்கிறேன். ஆனால் துக்கத்தைப் போக்கும் நண்பர்களோ, உறவினர்களோ யாருமில்லை. யாருக்காகத் தெய்வயோகத்தை விட்டுக் கொடுத்தேனோ அவர்களே என்னருகில் நிற்க வெட்கப்படுகிறார்கள். மனமே! இப்போதாவது ஒரு க்ஷணமாவது கஜேந்திரனைக் காப்பாற்றிய ஸ்ரீராமரை நினைப்பாயாக.

## 84

மனமே! பின்னால் நீயே கையைப் பிசைந்துகொண்டு உன்மீது பச்சாதாபப்படுவாய். உனக்கும் தேவர்களுக்கும் அரிதான (மானிட) சரீரம் ஜனமின்றிக் கிடைத்திருக்கிறது. இதை அறிந்திருந்தும் நீ ஏன் வீணாகக் காலத்தைக் கழித்துக் கொண்டிருக்கிறாய் என்பது தெரியவில்லை. பகவானிடம் விரோதித்துக் கொண்டு சுகத்தை அனுபவிக்க முயற்சி செய்வது நெய்க்காகத் தண்ணீரைக் கடைவது போலாகும். இதைச் சிந்தித்துத் தீய வழியையும் தீயவர்களோடு சேர்வதையும் விடுத்து நல்லவர்களோடு சேர்ந்து நல்வழியில் நடப்பாயாக! ராமபக்தர்களைத் தரிசித்து அவர்களிடம் பகவானுடைய புகழைக் கேட்பாயாக! கைகளில் வில்லும் அம்பும் ஏந்தி முனிவர்களின் உடையை இடையில் தரித்த பிரபுவை மனதில் நினைப்பாயாக!

துளசிதாசா! நீ எல்லா பிரபஞ்சத்தையும் விட்டு ஸ்ரீராமரின் திருவடிகளின்முன் தலைவணங்குவாயாக! நீ பயப்படவேண்டாம். உன்னைப் போன்ற பல நீசர்களை ஜானகி வல்லபரான ஸ்ரீ ரகுநாதர் தனதாக்கிக்கொண்டிருக்கிறார்.

## 85

மனமே! பகவான் மாதவரின் பக்கம் சிறிது பாரப் பாயாக! மூடனே! கேள், ஏழை எப்படித் தன்னிடமிருக்கும் செல்வத்தைப் பாதுகாத்துக் கொண்டிருக் கிறானோ, அதுபோலவே நீயும் மிகவும் தயாளகுணம் கொண்ட ரமாரமணரையே நினைத்துக் கொண்டிருப் பாயாக. அவர் அழகு, நல்லொழுக்கம், ஞானம், நற்குணம், ஆகியவற்றின் இருப்பிடம், பக்தர்களை மகிழ்விப்பவர்; எல்லாப் பாவங்களையும் நசிக்கச் செய்பவர்; சிற்றின்பக் குற்றங்களைப் போக்குபவர்.

துளசிதாசா! நீ யோகம், யக்ஞம், விரதம், புலனடக்கம் இவை யாவும் இன்றியே இப் பிறவிப் பெருங் கடலைக் கடக்க விரும்புவாயானால் மறவாமல் இரவும் பகலும் பகவானின் திருவடி நிழலை நினைப்பாயாக!

## 86

மகனே! யாருடைய திருவடிகளுக்குச் சேவை செய்து பிரம்மாவும் சிவனும் சித்தி அடைந்தார்களோ, சுக தேவரும் சனகாதி முனிவரும் ஜீவன்முக்தி அடைந்து உலவிக் கொண்டிருக்கிறார்களோ, இப்போதும் யாருடைய புகழைப் பாடிக் கொண்டிருக்கிறார்களோ, அப்படிப்பட்ட ஸ்ரீராமரின் திருவடிகளைத் தியானம் செய்யாதவருக்கு வேறு புகலிடம் கிடையாதென்பதையே நான்கு வேதங்களும் கூறுகின்றன. மேலும் லட்சுமி தேவி சஞ்சல மனமுடையவர். எங்கும் நிலைத்து நிற்பவரில்லை. ஆயினும் பகவானின் திருவடி நிழலை அடைந்து மனம், வாக்கு, செயலால் அங்கு நிலைத்துவிட்டார். பக்தர்களுக்கு சிந்தாமணி போன்ற கருணைக் கடலான ஸ்ரீராம சந்திரரின் சேவை செய்வதே சிறப்புடையதாகும்.

மற்ற தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் தலைவர்கள் என்று கூறும் அனைவரையும் காமம், மோகம், பசி, பேராசை, மூப்பு, மரணம் ஆகிய ஆறு பாம்புகளும் கடித்துக்கொண்டிருக்கின்றன.

மகனே! உன் மாற்றாந்தாய் (சுருசி)* உன்னிடம் கூறியவை யாவும் கொடுமையானவையே, என்றாலும் அவை உண்மையேயாகும்.

துளசிதாசா! ஸ்ரீரகுநாதரிடம் விரோதித்துக் கொண்டு இருக்கும் வரையிலும் ஆபத்துக்கள் நீங்காது.

## 87

மூடமனமே! எனது உபதேசத்தைக் கேட்பாயாக! பகவானின் திருவடிகளிடம் விரோதித்துக் கொண்ட யாருக்கும் ஒரு நற்பலனும் கிட்டியதில்லை. துஷ்டனே! இவ் வுண்மையை ஆரம்பத்திலேயே உணர்ந்து கொள்வாயாக. பகவானின் மனதிலிருந்து சந்திரனும் கண்களிலிருந்து சூரியனும் பிரிந்து தனியாக வந்ததால் தான் அவ்விருவரும் பெருந்துன்பத்தை அனுபவித்துவருகிறார்கள். இரவும் பகலும் ஆகாயத்தில் களைப்புடன் சுற்றி

---

* உத்தானபாதா என்ற அரசருக்கு சுநீதி, சுருசி என்று இரு மனைவியர் இருந்தனர். இருவருக்கும் முறையே துருவன், உத்தமன் என்ற புதல்வர்கள் இருந்தனர். அரசன் தன இளைய மனைவி சுருசியிடம் அதிக அன்பு கொண்டிருந்தான். ஒரு நாள அரசன் தன மடியில் உத்தமனை வைத்துக் கொண்டிருக்கும்போது துருவனும் அதே மடியில் உட்கார முயற்சித்தான். அப்போது, அவனது மாற்றாந்தாயான சுருசி, முதலில் தவம் செய்து அரசர் மடியில் உட்காரும் தகுதியைப் பெற்ற பின்பு மடியில் உட்கார முயற்சி செய்யும்படி கடுஞ்சொற்களைக் கூறினாள். அதைக் கேட்ட துருவன் அழுதுக் கொண்டே தன் தாயிடம் நடந்ததைக் கூறினான். அவனது தாயும் நடந்ததை அறிந்து அவனுக்கு உபதேசமாக மேற் கூறியதைக் கூறினாள், அதுவே இங்கு கூறப்பட்டுள்ளது

*வருகிறார்கள். அங்கு அவர்களது பகைவனான ராகு* வாசம் செய்துக்கொண்டிருக்கிறான். மூவுலகிலும் புகழ் பரவிய நிலையில கங்காதேவி மிகப புனிதமாகக் கருதப் படுகின்ற போதிலும் பகவானின் திருவடிகளிலிருந்து விலகி இருப்பதால இன்று வரை அதன ஓட்டம் நிற்கவில்லை.*

*ஸ்ரீராமருடைய புகழைப் பாடாமல் ஆபத்துக்கள் நீங்குவதில்லை என்ற உண்மையை வேதங்கள் சந்தேகமறக் கூறியிருக்கின்றன. துளசிதாச! இப்பொழு தாவது எல்லா ஆசைகளையும் விடுத்து ஸ்ரீராமருடைய சேவகனாக மாறிவிடுவாயாக!*

## 88

*மனமே! நீ எப்போதும் ஓய்வதில்லை. ஆத்மானந் தத்தை மறந்து இரவும் பகலும் சுற்றிக் கொண்டிருக் கிறாய. புலன்கள உன்னை இங்குமங்கும் இழுத்தடிக்*

* பாற்கடலைக கடைந்தபொழுது உண்டான அமுதத்தைப் பெற, தேவர் களும் அசுரர்களும் சண்டையிட ஆரம்பித்தனர். அப்போது பகவான் மோகினி ரூபத்தில அமுதத்தை ஒரு குடத்திலெடுத்துக் கொண்டு தேவர்களை ஒரு புறமும் அசுரர்களை மறுபுறமும் அமர வைத்துத் தேவர் களுக்கு மட்டும் பரிமாறிக் கொண்டிருந்தார் அசுரர்கள பகவானின் மோகினி ரூபத்தில மயங்கி இருந்ததால் அதை கவனிக்கவில்லை. ஆனால ராகு என்னும் அசுரன் மட்டும் பகவானின கபடநாடகத்தை அறிந்து சூரியனுக்கும சந்திரனுக்கும் இடையில் சென்று அமர்ந்தான். இதனால் ராகுவுக்கும் அமுதம் கிடைத்துவிட்டது. சூரிய சந்திரனுடைய சைகை யினால் இதை அறிந்த பகவான் சக்கரத்தால் ராகுவின் தலையைத் துண்டித்துவிட்டார் ஆனால அமுதத்தை உண்டிருந்ததால ராகுவின உயிர் போகவில்லை தலை ராகுவாகவும் உடல கேதுவாகவும் ஆயின இப் பகையினால கிரகணத்தின்போது ராகு சூரியனுக்கும் சந்திரனுக்கும் துன்பமளிக்கிறான

கின்றன. சிற்றின்பத்தால் அநேக துன்பங்களை யடைந்து கடும் வலையில் வீழ்ந்துவிட்டாய். ஆயினும் மூடனே, அதனால் உயிர் போகுமென்பதை நீ அறிந்திருந்தும் மோகத்தின் காரணமாக நீ அதை விடவில்லை. பல பிறவிகளிலும் பல பாவங்களைச் செய்து அப் பாவமென்னும் சேற்றினையே உனது மனத்திற்குப் பூசி இருக்கிறாய். வேதங்களும் புராணங்களும் விவேகமென்னும் நீரின்றி நீ புனிதமாக முடியாது என்று கூறுகின்றன.

தலைவனாகவும் பிதாவாகவும் குருவாகவும் இருக்கும் பிரபுவினாலேயே உனக்கு நன்மைகிட்டும். ஆனால் சந்தோஷத்துடன் பிரபுவை உனது இதயத்தில் நீ ஏற்க வில்லை.

துளசிதாசா! குளத்தை வெட்டுவதிலேயே உனது காலத்தைக் கழித்துவிட்டால் அக் குளத்தின் நீரால் எப்போதுதான் உன் தாகத்தைத் தீர்த்துக்கொள்ள முடியும்?

## 89

உலகைக் காக்கும் ஸ்ரீராமச்சந்திர பிரபுவே! துளசிதாசனாகிய என் மனம் தன் பிடிவாதத்தை விடுவதாக இல்லை. தலைவனே! இரவும் பகலும் அதற்குப் பலவிதங்களிலும் உபதேசம் செய்து கொண்டிருக்கிறேன். ஆயினும் அது தன் சுபாவத்துடனேயே இருக்கிறது.

பெண்கள் பிரசவிக்கும்போது பெரும் கஷ்டத்தை அனுபவிக்கிறார்கள். எனினும் சுகப்பிரசவமானதும் அத் துன்பத்தையெல்லாம் மறந்து, சந்தோஷத்துடன் அத் துன்பத்தை அளித்த கணவரின் புகழை மீண்டும் பாட ஆரம்பித்துவிடுகிறார்கள். பேராசையுடைய குடும்பஸ்தன்,

செல்லுமிடங்களிலெல்லாம் பணக்காரர்கள் அவனைச் செருப்பால் அடித்தாலும் அதே இடத்திற்கு மீண்டும் செல்ல கொஞ்சமும் வெட்கமடைவதில்லை. அது போன்று நான் பல வகைகளிலும் முயற்சி செய்து தோல்வி அடைந்துவிட்டேன்.

இந்த என் மனம் மிகவும் பலசாலியாக இருக்கிறது. இதை என்னால் வெற்றிகொள்ள இயலாது. நீ கட்டளை யிட்டால்தான் இம் மனம் கட்டுக்கடங்கும்.

## 90

என் மனத்தின் மூடத்தனம், ஸ்ரீராமபக்தியென்னும் தேவநதியான கங்கையை விடுத்துப் பனித்துளியின்மீது ஆசை கொள்வதற்கொப்ப இருக்கிறது. தாகமுற்ற சாதகப்பறவை புகைமண்டலத்தைக் கண்டவுடன் மேகமென்று நினைத்து அதனருகில் செல்லும். சென்ற வுடன் குளிர்ச்சியோ, நீரோ கிடைக்காமல் கண்ணெரிச்சல் தான் மிஞ்சும். ர்ஜாளி பறவை கண்ணாடிச் சுவற்றில் தன் உருவத்தைக் கண்டு பசியினால் அதையே ஆகாரமென்று நினைத்து வேகமாக மோதும். அதனால் அது தன் மூக்கையே உடைத்துக்கொள்ளும். அதுபோன்ற நிலையில்தான் இருக்கிறது இம் மனத்தின் மூடத்தனமும்.

கருணாநிதியே! என் மனத்தின் மூடத்தனத்தினை நான் எவ்வாறு கூறுவேன்? இந்தத் துளசிதாசனென்னும் அடிமையின் நிலையை அறிந்த பிரபோ! எனது அளவற்ற துயரத்தைப் போக்கி உனது (சரணாகதர்களைக் காப்பாற்றும்) வாக்கைக் காப்பாற்றிக் கொள்வாயாக!

## 91

ஹே ஹரி! நீ எனது ஜீவனை ஏறபடுத்தியதிலிருந்து நிலையில்லாமல ஓடியாடிச் செத்துக்கொண்டிருக்கிறேன். பலவித ஆசைகளென்னும் ஆடைகளையும் ஆபரணங் களையும் அணிநதுகொணடு அசையும் அசையா உயிரினத் தினமுரலம் விதவிதமான கபடவேஷங்களில எதைத்தான நான செய்யவிலலை?

தேவாகள, அசுராகள, முனிவாகள, நாகாகள, மானிடர்களில நான் யாசகம் கேட்கர்தவாகளே பாக்கி இலலை. ஆனால் யாரும் என துன்பத்தைப் போக்கித் தரிததிரததிலிருநது எ ன னை க காப்பாறறவிலலை. கணகள, கால்கள், கைகள, புததி, பலம யாவும் துன்பப பட்டுச் சலித்துவிட்டன. அவை யாவும் எனனைக கைவிட்டுவிட்டன.

ரகுநாதனே! சமசார பயததையடைநது நிம்மதி இழநது, துளசிதாசனெனனும இந்த அடிமை இறுதியில உனனிடம் சரணடைந்திருககிறேன. எக குணஙகளால கவரப்பட்டு நீ தன்வசப்படுவாயோ அவையாவறறையும் மறந்துவிட்டிருக்கிறேன். பிரபோ! எனனை உனது வீட்டு வாசலில் இருக்க விடுவாயாக! ஏமாற்றவேணடாம்.

## 92

ஹே மாதவா! என்னைப் போன்ற முட்டாள வேறொருவருமிலலை. விட்டில்பூச்சி விளககின அழகில மயஙகி நெருப்பென்றறியாமல அதில வீழ்ந்து மடிகிறது. மீனோ தூண்டிலிருக்கும் ஆகாரத்தினால் கவரப்பட்டு முள்ளை அறியாமல மாட்டிக கொள்கிறது. ஆனால்

நானோ ஆபத்துக்களை கண்டும், உணர்ந்திருந்தும் சிற்றின்பத்தை விடுவதாக இல்லை. எனவே நான் மீனை விட, விட்டில் பூச்சியைவிட அதிக முட்டாளாக இருக்கிறேன்.

மகாமோகமெனனும் பெரிய நதியில் மூழ்கியவனாய், பகவானின் திருவடித்தாமரையென்னும் ஓடத்தை மறந்து சிற்றின்பமெனனும் நுரையையே நான் தொடர்ந்து பிடித்துக்கொண்டிருந்தேன். பெரும்பசி கொண்ட நாய் பழைய எலும்பை வாயிநிறைய கவ்விக் கொள்வது போனறும் அது தன் வாயிலிருந்து வழியும் ரத்தத்தையே குடித்துச் சந்தோஷமடைவது போனறும் மானிடர்கள் சிற்றின்பத்தில் ஈடுபட்டுத் தம் பலத்தை இழந்து சநதோஷப்படுகிறார்கள்.

மிகக் கடினமான வாழ்க்கையெனனும் பாம்பு என்னைப் பிடித்துக் கொண்டிருப்பதால் நான மிகவும் பயந்து விட்டிருக்கிறேன. கருணையான பகவானை மறந்து தவளையிடம் சரணடைந்து அப பயத்தைப் போக்கிக் கொள்ள நினைக்கிறேன. நீரவாழ் பிராணிகள் வலையில வீழ்ந்ததும் எல்லாம ஒரே இடத்தில குவிந்து தனக்கு ஏறபடவிருக்கும் அழிவை உணராமல் ஒனறு மறறொன்றை எப்படி தின்கிறதோ அதே நிலைமையில்தான் நானும காலத்தின வாயினுள் இருக்கிறேன்.

அநேக யுகங்கள் வரையிலும், சரஸ்வதி தேவியே துளசிதாசனாகிய எனது பாபங்களைப பற்றிக் கூறினாலும முழுமையாகக் கூறி முடிக்க இயலாது. ஆயினும் என மனதில் ஸ்ரீராமா அற்பாகளையும் புனிதமாக்குவார் என்ற நம்பிக்கை இருக்கிறது.

## 93

ஸ்ரீராமா! எந்தக் கருணையினால் ஏழைகளின் துன்பத்தைக் கேட்டவுடனேயே வைகுண்டத்தை விட்டு ஓடிவருவாயோ, அந்தக் கருணையை எப்படி மறந்து விட்டாயோ தெரியவில்லை. கஜேந்திரன் தன் பலத்தை உணர்ந்து தோல்வியை ஒப்புக்கொண்டு உனது திருவடிகளில் மனதைச் செலுத்திக் கூக்குரல் எழுப்பியபோது, அக் கூக்குரலைக் கேட்டவுடனேயே தாமதம் செய்யாமல் கருட வாகனத்தில் வந்தாய். இரவையும் பகலையும் ஹிரண்யனின்* பயத்தில் கழித்துவந்த பிரகலாதனின் வார்த்தையைக் காக்கப் பலம் பொருந்திய சிங்கமுகங் கொண்ட நரசிம்ம அவதாரமெடுத்து ஹிரண்யகசிபுவை அழித்தாய். இதற்கு வேதமே சாட்சியாகும்.

அசுரர்களின் பகைவனே! ராஜசபையில் திரௌபதி* துரியோதனனின் கொடுமையைப் பார்த்து "பிரபோ,

---

* ஹிரண்யகசிபு தன் மகன் பிரகலாதனுக்கும் பகவான் நாமத்தைக் கூறாமல் தன் பெயரைக் கூறவேண்டுமென்று ஆணையிட்டான். இதை மறுத்த பிரகலாதனைச் சம்மதிக்க வைப்பதற்காகச் செய்த பல முயற்சிகளிலும் தோல்வியுற்ற ஹிரண்யன் கோபமடைந்து பிரகலாதனிடம் "உனது பகவான் எங்கே இருக்கிறார் கூப்பிடு" என்று கூறினான். அதற்குப் பக்த பிரகலாதன் அவர் தூணிலும் இருப்பார், துரும்பிலும் இருப்பார் என்று பதிலிறுத்தான். இதைக் கேட்டுக் கோபமடைந்த ஹிரண்யன் தூணை உதைக்கப் பகவான், பிரகலாதனின் வாக்கைக் காப்பாற்ற நரசிம்ம அவதாரமாகத் தூணிலிருந்து தோன்றி ஹிரண்யனை அழித்துப் பிரகலாதனைக் காப்பாற்றினார்.

* சூதாட்டத்தில் பாண்டவர்கள் எல்லாவற்றையும் இழந்தவுடன் துரௌபதியையும் வைத்து ஆடித் தோற்றுவிட்டார்கள். உடனே துரியோதனன் துச்சாதனின் மூலமாகத் துரௌபதியைச் சபையிலழைத்து வந்து ஆடையைக் களையுமாறு கட்டளையிட்டான். துஷ்ட துச்சாதனன் துரௌபதியின் புடவையை இழுக்க ஆரம்பித்தவுடன் சபையிலிருந்தவர் ஒன்றும் கூறவில்லை. எவரும் உதவவும் முன்வரவில்லை. இறுதியில் திரௌபதி தன்னைக் காப்பாற்றும்படி பகவானை நினைத்த மாத்திரத்தில் திரௌபதியின் புடவை நீண்டுகொண்டே போயிற்று. துச்சாதனன் இழுத்து இழுத்துச் சோர்ந்து போனான்.

என்னைக் காப்பாற்றுங்கள்'' என்று கூறி உன்னை நினைத்தவுடனே நீ ஆடையை அதிகரிக்கச் செய்து பகைவர்களின் காவத்தைப் போக்கினாய்.

ரகுவீரா! ஒரே ஒரு பகைவனாலும் தொந்திரவு செய்யப்பட்ட பக்தர்களையும் காப்பாற்றி இருக்கிறாய். ஆனால் இங்கே எனக்குப் பல பகைவர்கள் அளவற்ற துன்பத்தை அளித்துக் கொண்டிருக்கிறார்கள். ஏன் எனது வாழ்க்கைத் துன்பங்களை மட்டும் நீ போக்க வில்லை?

லோப (பேராசை), ரூபமுதலை குரோதரூப (கோபம்) ஹிரண்யாசுரன், காமரூபத் துரியோதனனின் தம்பி துச்சாதனன் ஆகியோர் என்னைச் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். பிறகு, துளசிதாசனாகிய எனது பயங்கர துக்கத்தைப் போக்குவாயாக! ஸ்ரீராமா! தயாளமானவனே! என்மீது தயை காட்டுவாயாக!

## 94

ஹே ஹரி! நீ ஏன் என்னை மறக்க வைத்து விட்டாய்? தலைவனே! நீ உனது வலிமையையும் அறிவாய், அதே சமயம் எனது பாவங்களையும் அறிந் திருக்கிறாய். ஆயினும் நீ என்னைக் காப்பாற்றவில்லை? வேதங்கள் உன்னை, அறபர்களையும் புனிதமாக்குபவன், ஏழைகளைக் காப்பாற்றுபவன், புகலிடமற்றவர்களுக்குப் புகலிடமாக இருப்பவனென்று கூறுகின்றன. ஏன், நான் ஒரு அற்பனில்லையா? பயமடைந்த ஏழையில்லையா. அல்லது வேதங்கள்தான் தவறாகக் கூறியிருக்கின்றனவா?

பட்சி (ஜடாயு) தாசி (பிங்களா)* மிருகம் (கஜேந்திரன் என்ற யானை) வேடன் ஆகியோரின் வரிசையிலேயே என்னையும் வைத்திருக்கிறாய். ஆயினும் கருணாகரனே! யாரை நாணப்படுத்துவதற்காக எனக்கு உணவு பரிமாறப் பட்டிருக்கும் இலையை கிழித்துக் கொண்டிருக்கிறாய்?

கலிகாலம் உன்னைவிடப் பலசாலியாகி உன்னுடைய வார்த்தைகளை மதிக்கவில்லையென்றால், நான் எனது அனைத்துக் கௌரவத்தையும் விட்டுவிட்டு, அதன் குரோதத்தின்மீது மதிப்பு வைத்து, அதனுடைய குற்றங்களையே நற்குணங்களாகப் பாவித்து, அதன் புகழையே பாடிடுவேன் போலிருக்கிறது. ஆனால் நீயோ கொசுவைப் பிரம்மாவாகவும் பிரம்மாவைக் கொசுவாகவும் செய்யக் கூடிய வலிமையுள்ளவன். இத்தகைய சாமர்த்தியம் உன்னிடமிருந்தும் நீ என்னை விட்டுவிட்டிருக்கிறாய்!

தலைவனே! துளசிதாசனாகிய எனக்கு என்ன அதிகாரமிருக்கிறது? அதோடு எல்லாவகையிலும் நான் தோல்வி அடைந்து விட்டிருக்கிறேன். நரகத்தில் விழுவதற்கும் நான் பயப்படவில்லை. ஆனால் உனது நாமம் எனது பாபங்களை எரிக்கவில்லையே என்ற பயமே அதிகமாக இருக்கிறது.

---

* ஜனகாபுரியில் பிங்களா எனனும தாசி இருந்தாள். ஒரு நாள் இரவு வெகுநேரம் வரையிலும் தன் காதலனுக்காகக் காத்திருந்தாள். ஆனால் அவன் வராததால் வெகு ஏமாற்றமடைந்து 'இவ்வளவு பக்தியுடன் கடவுளை தியானித்திருந்தால் இப் பிறவியென்னும் விலங்கிலிருந்து விடுதலை பெற்றிருக்கலாமே' என்று சிந்திக்க ஆரம்பித்தாள். அதிலிருந்து கடவுளைத் தியானிக்க ஆரம்பித்தாள். அதனால் அவளுக்குக் கடவுளருள் கிடைத்தது.

## 95

யமராஜர் தன் எல்லாக் காரியங்களையும் செய்வதை நிறுத்திவிட்டு, என் பாபங்களை எண்ணுவதிலேயே முழு மனதையும் செலுத்தினாலும்கூட எனது பாபங்களையும் துர்குணங்களையும் முழுமையாக எண்ண முடியாது. அச்சமயம் மற்ற பாவிகள் அவர் கண்ணில் படாமல் தப்பித்துக் கொண்டு சுவர்க்கத்திற்கு ஓடிவிடுவார்கள். அப்பொழுது யமராஜா மனதில் குழப்பம் ஏற்பட்டுத் தன் அதிகாரத்தில் ஏற்பட்ட தடங்கல்களைக் குறித்து உன்னிடம் என்னைப் பற்றி முறையிடுவார். அவருடைய முறையீட்டைக் கேட்டு நீ சிரித்துக்கொண்டே என் பக்தியை நம்பி என்னை உனது பக்த சிரோன்மணியாக ஏற்றுக்கொள்வாயாக!

கோசல நாட்டரசனே! துளசிதாசனாகிய என்னை எப்படியாவது ஏற்றுக்கொள்வாயாக!

## 96

சுவாமி! நீ உனது தொண்டர்களின் பாபங்களை மனதில் வைத்துக் கொண்டாய் என்றால், என்னிடம் சிறிதளவே உள்ள புண்யமென்னும் நகத்தினால் எனது பாவமென்னும் பெரிய பெரிய வனங்களை எப்படி அழிக்க இயலும். எனது மனம், வாக்கு செயலால் ஏற்படும் பாபங்களை யாரால் கூறமுடியும்? ஒவ்வொரு கணநேரத்திலும் ஏற்படக்கூடிய எனது பாவங்களை எண்ணுவதில், கோடிக்கணக்கான ஆதிசேஷன்களும் சரஸ்வதிகளும் வேதங்களும்கூட சலிப்படைந்துவிடுவர்.

உனது திருநாமத்தின் மகிமை மற்றும் அற்பாகளை முன்னேற்றும் பவித்ரமான குணங்களை மனத்திலிருத்தி

னால, யமதூதர்களின் பற்களை உடைதது அஜாமில னென்னும் பிராமணனைக் கரையேற்றியதுபோல துளசி தாசனாகிய என்னையும் கரையேற்றிவிடுவாய் என்று நம்புகிறேன.

## 97

ஸ்ரீராமா! நீ உனது பக்தர்களின் தீய குணங்களில் மனம செலுததுவதாக இருநதால் இந்திரன்,* துரியோதனன்* மற்றும வாலியிடம்* ஏன பகையை விலைக்கு வாங்கினாய்? அன்பை மட்டும் விரும்பாமல ஜபம், யகஞம், யோகம், விரதம் ஆகியவற்றை மட்டுமே நீ விரும்புவதாகயிருநதால, தேவர்களும முனிவர்களும் இருக்கும இடததைவிட்டு கோகுலததில கோபியா களிடையே ஏன வாசம செய்தாய? நீ ஆங்காங்கே பக்தர் களின வாக்கைக காப்பாற்றிப் பஜனையின மகிமையை எடுத்துக கூறாவிடில் இக கலிகாலததில எங்களைப் போனற மூடர்கள காம மார்கததில எவவாறு செலல முடியும?

---

* ஒரு முறை நாரதர் ருக்மணிதேவியிடம் பாரிஜாத மலரைக் கொடுத்தார். இதையறிநத சத்தியபாமா தனக்கும் பாரிஜாத மலர் வேண்டுமென்று ஊடல்புரிய ஆரம்பித்தார். சததியபாமா அம் மலரைக் கேட்டது தவறு தான் எனறாலும் அவருடைய பக்தியில மயங்கிய பகவான ஸ்ரீகிருஷ்ணர் இந்திரரிடம் சணடையிட்டுப் பாரிஜாத மரத்தையே பிடுங்கிக்கொண்டு வந்தார சத்யபாமாவின் ஆசையைத் தீர்த்துவைத்தார

* சூதாட்டம் ஆடியது, சூதாட்டத்தில திரௌபதியை இழநதது. ஆகிய யாவும் பாண்டவர்கள செய்த தவறே ஆயினும், அவர்களுடைய பக்தியைக கண்டு பகவான ஸ்ரீகிருஷ்ணர் அவர்களுடைய குற்றங்களைப் பொருட்படுத்தாமல அவர்கள பக்கமிருந்ததால் துரியோதனனின் பகை யைத் தேடிக்கொண்டார

* சுக்ரீவன குற்றமே செய்யவில்லை என்று கூற இயலாதெனறாலும் அவனுக்காக பகவான வாலிவதம செய்து சுக்ரீவனைச் சிம்மாசனத திில அமர்த்தினார்

உனது திருநாமம் கொணட தனது புததிரனைக கூப்பிட்ட காரணத்திற்காகவே அஜாமிலனின பாவங்களை நீ போக்கியிராவிட்டால், யமதூதாகள் எங்களைப போன்ற மாடுகளைத தேடிப்பிடித்து துன்பமெனனும கலப்பையில பூட்டி இழுததிருப்பார்கள்.

பாவிகளை புனிதப்படுததுபவனென்ற பெயரை நீ தரிததிருக்காவிட்டால வஞசக துளசிதாசனான என்னைப போன்ற மனிதாகள் கனவிலும யுகயுகங்களானாலும் நறகதி அடைய முடியாது.

## 98

பகவான தன தொண்டாகளிடம அதிக அன்பு கொணடு தன பெருமையையும் மறநது எபபொழுதும பக்தர்களின் வசமாகிவிடுவது வழககமாகும். தேவாகள, அசுரர்கள், நாகர்கள் மறறும் மானிடா யாவரையும கர்மமென்னும கயிற்றால பிணைததிரு வைததிருக்கும் பரப்பிரம்மத்தையே யசோதா கயிற்றால கட்டிவிட்டாா. அதை அவரால அவிழ்க்க முடியவிலலை. எந்த மாயை யிடம் வசப்பட்டதால் பிரம்மாவும சிவனும தேடித தேடி அலைந்தபோதும் கரையைக காண முடியவில்லையோ, அதைக் கோபியாகள கைகளைத தட்டி தட்டியே ஆட வைததுவிட்டனா.

உலக வழக்கிலுள்ள வேதங்களில பகவானைப பறறிக கூறும்போது உலகைக காபபவா, லட்சுமிகாந்தா, மூவுலகங்களுக்கும் நாயகன் என்று கூறப்பட்டுள்ள போதிலும, அவருடைய பெருமை பலியென்னும* பக்த

* பலியெனனும அரசன பகவானின் பகதனாக இருந்தான. அவசியம் ஏறபட்டபொழுது பகவான் தன பெருமையால காரியத்தைச் சாதிக்காமல வாமன ரூபமெடுத்து அவனிடம் யாசகம் கேட்டார். அவர் யாசகம் கேட்காமலேயே பலாத்காரமாகக காரியத்தைச் சாதிததிருகக முடியும் ஆனால அவன் பக்தனென்ற காரணத்தால் அவ்வாறு செய்ய வில்லை.

அரசனிடம் ஒன்றும் பலிக்கவில்லை. அவரிடம் யாசகம் செய்ய வேண்டியதாயிற்று.

யாருடைய நாமத்தை உச்சரிப்பதாலேயே பிறப்பு, இறப்பினின்றும் விடுதலை பெறமுடியும் என்று கூறப் படுகிறதோ, அக் கருணாமூர்த்தியே தனது பக்தன் அம்பரீஷனுக்*காகத் தசாவதாரம் ஏற்கவேண்டி வந்தது. யாரை ஞானிகளும் முனிகளும் யோகம், துறவு, தியானம், தவம், ஜபம் ஆகியவற்றால் தேடிக் கொண்டிருக் கிறார்களோ அந்த ஜகந்நாதரே வானரம், கரடி போன்ற விஷமத்தனமான மிருகங்களிடம் அன்பு காட்டினார்.

துளசிதாசா! லோகபாலர், யமன், காலன், காற்று சூரியன், சந்திரன் ஆகியவற்றின் தலைவனான பிரபு

---

* அம்பரீஷன் என்னும் வைணவன் பகவானின் பரமபக்தனாக இருந்தான். அவன் தவறாமல் ஏகாதசி விரதத்தை அனுஷ்டித்துத் துவாதசியன்று அநேக பிராமணர்களுக்கு அன்னதானம் செய்வதை வழக்கமாகக் கொண் டிருந்தான். ஒரு நாள் துர்வாச முனிவரையும் சாப்பிட அழைத்திருந்தான் அம்முனிவர் ஸ்நானம் செய்யச் சென்றவர் வெகுநேரமாகியும் திரும்ப வில்லை. துவாதசியன்று அன்னதானம் செய்து விரதத்தை முடிப்பது வழக்கமாதலால் திரயோதசி வந்துவிடுமே என்று நினைத்து துர்வாசர் வருவதற்கு முன்பே துளசிதீர்த்தத்தையும், சடாரியையும் பெற்றுக் கொண் டார். சிறிது நேரம் கழித்து வந்துசேர்ந்த துர்வாசர் தானின்றியே துளசி தீர்த்தத்தை பெற்றதை அறிந்து கோபமுற்று "இதுதான் கடைசிப்பிறவி யென்று நினைக்கும் உனது கர்வம் வீணாகும். நீ இன்னும் பத்துப் பிறவி கள் எடுக்கக்கடவாய் என்று அம்பரீஷிக்கு சாபமிட்டார். பின்பு கிருத்யா என்னும் ராட்சசியை ஏவி அரசனைக் கொல்ல முயற்சித்தார். ஆனால் பகவான் தன் பக்தனான அவ்வரசனைக் காக்கும்படி தனது சுதர்சன சக்கரத்திற்கு ஆணையிட்டார். அச் சக்கரம் கிருத்யாவை அழித்துவிட்டு துர்வாசரை விரட்ட ஆரம்பித்தது. அவர் மூவுலகிலும் புகலிடம் கிடைக் காமல் இறுதியில் அம்பரீஷரிடமே சரணடைந்தார். அவ்வரசனும் பகவானின் துதிபாடிச் சக்கரத்தைச் சாந்தப்படுத்தினார் பிறகு பகவான் துர்வாசரிடம், அம்பரீஷனுக்கு அவர் அளித்த சாபத்தை ஏற்று, தானே பத்துப் பிறவிகளையும் ஏற்பதாகக் கூறினார். அதுவே தசாவதாரமாகும்

தான* உகதிரசேனனின வாசலில கையில பிரமபுடன நின்று கொணடிருக்கிறார.

## 99

ஸ்ரீராமா! ஏழைகளின ஆசைகளை நிறைவேறறுவதே உனது சுபாவமாகும. இதையே வேதஙகளும புராணங களும சிவபெருமானும சுகதேவரும கூறி உறுதிப்படுதது இருக்கினறனர். உனது நாமத்தின மகிமை பிரசித்தமான தாகும்.

நீ துருவன, பிரகலாதன, விபீடணன, சுகரீவன, உணாவற நிருந்த யமலாா்சுனன, அகலிகை, ஜடாயுபட்சி, பஞ்சபாண்டவா, சுதாமா ஆகிய அனைவரையும் இப பூவுலகில பெரும்புகழை அடையச செயது பரலோகததில மோட்சத்தைப பெறச் செய்திருக்கிறாய. அதனால உனக்கு ஏறபட்ட பலனதான என்ன? கணிகா, குகன, கவி வாலமீகி ஆகியவர்களையுமவிடக் கொடுமையானவர் யார் இருக்கிறாாகள? அஜாமிலன எபபோது அசுவமேத யாகததைச் செய்துவிட்டான்? எபபோது கஜேந்திரன சாமவேத ததைபபாடினான? இவ் வுலகில துளசிதாசனான எனனைப போன்ற கபடன், பாவி, நற்குணமறற கையா லாகாதவன வேறு யார் இருக்கிறாாகள? ஆயினும் ராம நாமமென்னும் அரசனின பிரபல மகிமையினால உலகத தில யுகயுகமாகத் தோல நாணயமும் செலலுபடியாகிக கொண்டிருக்கிறது. அதாவது ராமநாம மகிமையினால் பாவிகளும் பவித்ரமாகிக்கொணடு வருகிறாாகள்.

---

* பகவான ஸ்ரீகிருஷ்ணா கம்சனை அழிதத பிறகு தனது பாட்டனாரும கம்சனின தந்தையுமான உகரசேனனைச் சிம்மாசனத்திலமர்த்தி அரசவைக்கு தானே துவாரபாலகனாக இருந்தா

## 100

சீதாபதி ஸ்ரீராமச்சந்திரனே! உனது நலமொழுக்கச் சுபாவத்தைக் கேட்ட பின்பும் யாருடைய மனம் உருக வில்லையோ, யாருடைய மெய் புளகாங்கிதம் அடைய வில்லையோ, யாருடைய கண்களில் ஆனந்தக் கண்ணீர் வரவில்லையோ, அவர்கள் யாவரும் தூசியைச் சாப்பிடும் புழுப்பூச்சிகளுக்கு ஒப்பானவராவர்.

சந்திரனுக்கு ஒப்பான உனது முகத்தில் குழந்தைப் பருவத்திலிருந்தே கனவில்கூட கோபத்தைக் காணவில்லை யென்று தாய், தந்தை, சகோதரர்கள், குரு, தொண்டர் கள், மந்திரிகள், நண்பர்கள் யாவரும் கூறியிருக்கிறார்கள். தினமும் மூன்று சகோதரர்களும் பல பாலகர்களும் விளையாடும்போது ஏற்படும் ஆபத்துக்களிலிருந்தும், செய்யும் அநீதிகளிலிருந்தும் அவர்களைக் காப்பாற்றிக் கொண்டிருந்தாய். நீ வெற்றியடைந்தபோதும் அதையே தோல்வியாகப் பாவித்துக் கொஞ்சிக் குலாவி அவர்களுக் கும் சந்தர்ப்பமளித்து மற்றவர்களையும் சந்தோஷப்படுத்தச் செய்வாய். உனது புனித திருவடிகள் பட்டவுடனேயே அகலிகைக்குச் சாப விமோசனம் கிடைத்துவிட்டது. ஆனால் நீ அதற்காக மகிழ்ச்சி அடையாமல் முனிவரின் மனைவியின்மீது உனது பாதங்கள் பட்டுவிட்டனவே என்று வருத்தம்தான் அடைந்தாய்.

## 101

ஹே தலைவனே! நான் உனது திருவடிநிழலைத் தவிர்த்து வேறு எங்கு போவேன்? உலகில் அனாதரட்சகன் என்ற பெயர் வேறு யாருக்கு இருக்கிறது? உன்னைத் தவிர வேறுயாருக்கு ஏழைகள் அதிக பிரியமானவர்களாக

இருக்கிறார்கள்? இன்றுவரை எந்தத் தேவதை தன் அந்தஸ்தைக் காத்துக்கொள்ள விடாப்பிடியாக இருந்தது, பாபிகளைக் கரையேற்றி இருக்கிறது? பட்சி (ஜடாயு) மிருகம் (மாரீசன்) வேடன் (வால்மீகி) கல் (அகலிகை) மரம் (யமலார்ச்சுனன்) மற்றும் காட்டுமிராண்டி ஆகியவற்றை வேறு எந்த தேவதை காப்பாற்றியது? தேவர்கள், அசுரர்கள் முனிவர்கள், நாகர்கள், மானிடர் யாவரும் மாயையின் ஆதிக்கத்துக்குட்பட்டிருக்கிறார்கள். அவர்களே மாயையின் வசமடைந்து இருக்கும்போது மற்றவர்களின் கஷ்டத்தை அவர்களால் எவ்வாறு போக்க இயலும். எனவே, பிரபோ! இந்தத் துளசிதாசனாகிய என்னை அவர்களின்பால் ஒப்படைத்து என்ன செய்ய இயலும்?

## 102

ஹே ஹரி! நீ தேவர்களுக்கும் கிட்டாத துர்லபமான மானிட சரீரத்தைக் கருணையுடன் எனக்கு அளித்து பெரிய உதவி செய்திருக்கிறாய். நீ செய்யும் ஒவ்வொரு உதவியையும் கோடி வாயாலும் முழுமையாகக் கூற இயலாது. ஆயினும் ஹே தலைவனே! நான் உன்னிடம் ஒன்று கேட்கப்போகிறேன். அதை நீ கொடுத்தருள புரிவாயாக!

தயாளரே! எனது மனமென்னும் மீனால் ஒரு நிமிட நேரமும் சிற்றின்பமென்னும் நீரைவிட்டுப் பிரிந்திருக்க இயலாது. எனவே நான் அநேக பிறவிகளை எடுத்து அளவற்ற துன்பத்தை அனுபவித்துவருகிறேன். ஸ்ரீராமா இந்த மனமென்னும் மீனைப் பிடிப்பதற்கு உனது கருணை என்னும் கயிற்றில் பாதரேகையான அங்குசத்தைத் தூண்டில் முள்ளாக செய்வாயாக! அத் தூண்டிலில்

அனபெனும அழகிய உணவினை மாட்டி விடுவாயாக! இவவாறு எனது மனம் என்னும் மீனைப பிடித்து என துன்பததைப போக்குவாயாக! உனனைப் பொறுததவரை உனக்கு இது ஒரு விளையாட்டே ஆகும்.

வேதங்களில் பல உபாயங்களைப் (புலனடககம, ஜபம், தவம்) பறறிக கூறப்பட்டிருக்கிறது. மறறும எலலாத தேவாகளும பிரசித்தமானவர்களதான் ஆயினும், இந்த ஏழை உனனைததவிர வேறு யாரிடத்தில் வேணடுதல செயயமுடியும?

துளசிதாஸ்! யாா இநத ஜீவனை மோகம் என்னும் கயிறறால் கட்டினாரோ அவராலதான அதை நீகக முடியும.

## 103

சுவாமி ரகுவீரா! துளசிதாசனாகிய நான உனனிடம் வேண்டுவது யாதெனில், நீ எனது இநத உயிரின் அறியாமையையும் மறற ஆசைகளையும தூர விலகக வேணடும் எனபதே ஆகும். முக்தி, பேரறிவு, செல்வம், காரியசித்தி, உயாநதநிலை ஆகிய எதையும் நான் விரும்ப வில்லை. ஹே ஸ்ரீராமா! உனது தாமரைத திருவடிகளில எனது தன்னலமற்ற அனபு நாளுககுநாள் அதிகமாகிக கொணடே போனாலே போதும்; எனது இநத கொடிய கர்மவிணைகள வலுக்கட்டாயமாக என்னை எங்கெங்கு பிறப்பெடுக்க வைக்கின்றனவோ, அங்கெல்லாம், எவ்வாறு ஆமை தனது முட்டையை விடாமல் வைத்திருககிறதோ அவ்வாறு, ஒரு நிமிட நேரம்கூட உனது கருணையை விலக்காமல் இருப்பாயாக! இந்த அன்பு, விசுவாசம், உறவு ஆகியவை எவ்வளவு தூரம் பரந்திருக்கின்றனவோ, அவை

யாவும் ஓரிடததில சேர்நது பரமாதமாவிடமே - உன் னிடமே—இருப்பதாக இருக்கட்டும்!

## 104

ஸ்ரீ ஜானகி நா தருக்குத் துளசிதாசனாகிய எனனை அா்பபணிக்கிறேன். ஸ்ரீ சீதாராமரின் திருவடிநிழலை விடடு இஷ்டபபடி வேறெங்கும் போகமாடடேன் என்று எனது மனம் கூறுகிறது. பகவானுடைய திருவடிகளிடம் நம்பிக்கை இழநதால் கனவிலும் சுகம் கிடைக்காது என்ற உணமை என் உளளத்தில் ஏறபட்டுவிட்டது. இதையே உபதேசமாக என சரீரத்திலுளள மற்ற உறுபபுகளுக்கும் கூறுவேன். நான என் காதால ஸ்ரீராமருடைய கதையைத் தவிர வேறு எதையும் கேட்கமாடடேன். நாவினால வேறொருவரைப பற்றிய புகழையும் பாடமாடடேன். வேறெதையும் பார்ப்பதற்காகக் கணகளைத திருப்ப மாடடேன. எனது இஷ்டதெய்வமான ஸ்ரீராமருக்கு மட்டுமே தலைவணங்குவேன. என சுவாமியிடம் நட்பை அதிகரித்துக்கொணடு மறற எல்லா் நடபையும உறவை யும விலக்கிவிடுவேன. நான் யாருடைய தாசனென்று கூறிககொள்கிறனோ அவரிடம் என எல்லா பாரததை யும் ஒப்படைத்துவிடுவேன்.

## 105

துளசிதாசனாகிய எனது வாழ்நாட்கள் இதுவரை யிலும் வீணாகக் கழிந்துவிட்டன. ஆனால இப்பொழுது முதற்கொணடு வீணாக விடமாட்டேன். ஸ்ரீராமரின் கிருபையால் உலக பந்தம் என்ற இரவு கழிநதுவிட்டது. இப்பொழுது விழித்துக்கொண்ட பிறகு மீண்டும்

படுக்கையை விரிக்க மாட்டேன். (விரக்தி அடைந்து விட்டதால் மீண்டும் மாயையில் விழமாட்டேன்.)

நான் ராமநாமமென்ற அழகிய சிந்தாமணியை அடைந்து விட்டேன். அதை உள்ளே மென்னும் கையிலிருந்து கீழே நழுவ விடமாட்டேன். ஸ்ரீராம ருடைய புனித அழகிய மாநிற உருவமென்ற உரைகல்லின் மீது எனது மனமென்னும் பொன்னை உரைப்பேன். (என உள்ளத்தில ஸ்ரீராமரைத் தியானிப்பேன்) இதுவரை நான் பிறர்வசம் இருந்தேன். இதை அறிந்த எனது ஐம்புலன்களும் என்னைக் கண்டு நகைத்துக் கொண் டிருந்தன. ஆனால் இப்போதோ நான் என்வசமாகி இருப்பதால் பிறர் சிரிக்கும்படியாக இருக்கமாட்டேன். ஏனெனில் தற்பொழுது ஐம்புலன்களுக்கும் மனத்திற்கும் நான் வசமாகவில்லை. எனவே அவை என்னைச் சிற்றின்பத்தின் பக்கம் இழுத்துச் செல்லமுடியாது. என மனமென்னும் வண்டை இறைவனின் திருவடிநிழலை நிச்சயம் அடையச் செய்வேன்.

## 106

ஸ்ரீராமா! உன்னால் கௌரவிக்கப்பட்டவர்கள் மிகக பாக்யவான்களே. அவ்விதம் கௌரவிக்கப்பட்டவர்கள் கொண்டிருப்பது போன்ற கம்பீரம், நற்குணம், சர்வ ஞானம், வீரம், நற்பண்பு, புகழ் வேறு யாரிடம் இருக்கிறது?

பாருங்கள், கவி (அகலிகை) வேடன், வானரம், கரடி, ராட்சதன் (விபீடணன்) சபரி, ஜடாயு, ஆகியோரிடம் அமைதி, கட்டுப்பாடு, இரக்கம், தயாளகுணம் யாவும் இல்லையாயினும் ஸ்ரீராமரின் திருநாமத்தை உச்சரித்த

தறகாக, மானிடர் அவர்களது புகழைபபாடி. மகிழும் படியாக அவாகள புனிதபபட்டுவிட்டனர்.

வேடனான வால்மீகி எநதப பாவத்தைத்தான செயயவில்லை? எநதப பக்தியால் தான் பிங்களா யெனனும் தாசியின புத்தி புனிதமடைநது விடடது? அல்லது, அஜாமிளன தான எபபோது சோமயக்ஞம் செய்துவிடடான? சரி, போகட்டும், கஜேநதிரன் தான எந்த அசுவமேத யாகததைச் செயதுவிடடான்? புனித மென்றால என்ன எனபதை அறியாத பாணடவா, கோபியர், விதுரன்,* சபரி ஆகியோரையே புனிதப படுததிவிடடாய். இவாகளுடைய அனபைககொண்டு அவாகளையும் தனதாக்கிக் கொணடாய. அதனாலதான உலகில விஷ்ணு மற்றும் சிவபெருமானின் புகழ் பரவி இருப்பதுபோல உனது புகழும் பரவி இருககிறது.

துஷ்டப்பன்றி, நீசா, காட்டில் வசிப்பவா, யவனர் ஆகியோா தாழ்நதவராயினும், ராமநாமததை உச்சரிதத பின்பும உயர்வடையாதவர் யார்தான இருக்கிறாாகள?

கதியறறவாகளின் துககததைப போககுபவனே! கருணையின் இருபபிடமே! லட்சுமிபதி! அற்பர்களைப் புனிதப்படுததுவதே உனது சுபாவமாகும் என்று வேதஙகள கூறுகின்றன.

---

* தாசியின புதலவனான விதுரன ஸ்ரீகிருஷ்ணரின சிறநத பகதனாவான். இதனால் ஸ்ரீகிருஷணர் அஸ்தினாபுரம் செனறபோது முதலில் கௌரவர் கள வீட்டிற்குச செல்லாமல விதுரன வீடடிறகுச் செனறாா அப்போது விதுரன் வீட்டில இல்லாததால அவரது மனைவியே இவரை உபசரித் தார் வாழைப பழத்தை உரித்து அவருககு அளிக்க முற்பட்டபோது பகவானின அன்பில் மயஙகியவளாய்ப் பழததைக கீழே போட்டுவிட்டுப் பழத்தோலை மட்டும கொடுத்துக் கொண்டிருந்தாள. அனபுப பசி கொணட பகவானும் அத தோலையே சாப்பிட ஆரம்பித்தார்,

ஸ்ரீராமா! துளசிதாசனாகிய என்னைப் போன்ற மநத புத்தியும், கபடமும் கொண்ட போக்கிரி மூவுலகிலும் முக்காலத்திலும் இருக்கமுடியாது. ஆயினும் உனது பெயருக்கேற்றபடி கலிகாலமென்னும் பாம்பால் பீடிக்கப் பட்ட என்னையும் உனது திருவடிகளில் ஏற்றுக்கொண் டிருக்கிறாய்.

## 107

எனது இஷ்ட தெய்வமான கோசலபதி ஸ்ரீராமா! உனது கண்கள் அழகிய தாமரை மலரை ஒத்திருக் கின்றன, மாநிற சரீரம் மிக்க அழகுடையதாக இருக் கிறது. எப்பொழுதும் நீ சீதாதேவியுடன் அநேக காம தேவன்களுக்கு ஒத்த ஒளியுடன் ஒளிவீசிக்கொண்டிருக் கிறாய். உனது அகன்ட தோளகளில் வில்லும் அம்பும் தரித்திருக்கிறாய. இடையில் அழகிய அம்பறாத்துணியை அணிந்திருக்கிறாய்.

நீ, பலியிடுவதையும் பூஜையையும் விரும்புவதில்லை. அன்பை மட்டுமே விரும்புவனாக இருக்கிறாய் உன்னை நினைப்பதாலேயே நீ சந்தோஷமடைந்து எல்லோரையும் புனிதமாக்கிவிடுகிறாய.

துன்பங்களை நசிக்கச் செய்து எல்லாச் சுகங்களையும் அளிப்பவனே! திக்கற்றவர்களின் உறவினனே! நற்குணங் களைக் கிரகித்துக் கொண்டு துர்குணங்களை நீக்கும் கருணைக் கடலே! வேதங்களும் புராணங்களும் உன்னைப் பற்றிக் கூறுவது யாதெனில் "நீ எங்கும், எப்பொழுதும் நீக்கமற நிறைந்திருக்கிறாய், எல்லோருக்கும் தலைவ னாக, எல்லோருடைய உள்ளத்திலும் வாசம் செய்கிறாய், எல்லோருடைய நிலையையும் உணர்ந்தவன்!" உன்னைப் போன்ற தலைவனை விடுத்துக் கோடிக்கணக்கான ஆசைகளுடன் வேறு பல தேவதைகளை யாரதான் வணங்குவர்?

ஏ துளசிதாஸ! சிவபெருமானால்கூட பூஜிக்கப்பட்ட ஸ்ரீராமரின் சேவையையே செய்வாயாக!

## 108

அனைவரும் மாவீரர் ஸ்ரீராமரை ஆராதனை செய்வீராக! ஏனெனில் அவரால் எல்லாக காரியங்களை யும் வெற்றிபெறச் செய்யமுடியும். வெற்றி பெறச் செய்வார் என்ற உண்மையும் யாவரும் அறிந்ததே போதும். இப்போது தாமதம் செய்யாதீர்! சீக்கிரம் ராமநாமத்தின் உபதேசம் பெறுங்கள். சிவபெருமான் ஜபித்த மூலமந்திரத்தையே ஜபியுங்கள். அன்பு என்னும் ஜலத்தினால் தர்ப்பணம் செய்வது உத்தமம் ஆகும். இங்கு அன்பு என்னும் நெய் இருக்கிறது. யகஞத்தில் உபயோகப்படுத்த சந்தேகம் என்னும் கட்டையும் மன்னிப்பு என்னும் அக்னியும் இருக்கின்றன. அதில் மமதையைப் பலியிடுவீராக! இவ்வாறு பாபங்களை விலக்கி மனத்தை தன்வசப்படுத்தி அகங்காரத்தையும் காமதேவனையும் அழித்து சந்தோஷம் மற்றும் சிந்தனை என்னும் சுக சம்பத்துக்களை ஆகர்ஷிக்க வேண்டும். யார் இவ்வாறு பஜனை செய்தார்களோ அவர்கள் யாவருக்கும் ஸ்ரீ ரகுநாதர் கிடைத்திருக்கிறார்.

இப்பொழுது துளசிதாசனாகிய நானும் அதே பாதையில் சென்றுகொண்டிருக்கிறேன். என்னையும் ஏற்றுக்கொள்வார்.

## 109

ஹே ஹரி! ஹே முராரே! நீ துக்கங்களை நசிக்கச் செய்பவன். அப்படி இருந்தும் என்னிடம் மட்டும் ஏன்

கருணை காட்டாமல் இருக்கிறாய்? மூன்று தாபங்கள், சந்தேகம், துயரம், பயம் ஆகியவற்றைப் போக்குபவனே! இந்தக் கலியுகப் பாபங்களால் என் அறிவு பேதைமை அடைந்து விட்டிருக்கிறது. பிரபுவே! நீயும் என்னைக் கவனிக்காவிட்டால் நான் எப்படி உயிர் வாழ முடியும்?

ஹே பிரபோ! நீ எல்லா வகையிலும் சாமர்த்தியசாலி. நானோ எல்லா வகையிலும் பலமற்றவன். இதை அறிந்திருந்தும் உன் மனம் என் மீது உருகவில்லை! என்றால் நான் ஓர் அபாக்யசாலியே!

ஹே ரகுபதி! நான் பல காப்பப் பைகளில் சுற்றிக் கொண்டிருக்கிறேன். அதாவது, பிறப்பதும் இறப்பதுமாக இருந்து கொண்டிருக்கிறேன். உன்னைத்தவிர வேறு சுவாமியும் எனக்கு இல்லை. எனவே நான் சுகதுக்கங்களை சகித்துக்கொண்டு எப்பொழுதும் உன்னிடமே சரணடைந்திருக்கிறேன். உன்னைப் போன்ற தயாள குணமகொண்ட கடவுளும் வேறு இல்லை என்பதை என் மனம நன்கு அறிந்திருக்கிறது. ஆயினும் இந்தத் துளசிதாசனிடம நீ சந்தோஷப்படுமபடியான பொருள் ஒன்றுமில்லை. (எந்தச சாதனமும் இல்லாவிட்டாலும் சரணடைந்த ஒன்றினாலேயே நீ மகிழ்ச்சி அடையவேண்டும்.)

## 110

கருணைக்கடலே! உலகிலுள்ள பெரிய ஆபத்துக்களை நான் உன்னிடமின்றி வேறு யாரிடம் கூறமுடியும்? எல்லா இந்திரியங்களும் சதா அதனுடைய சுபாவப்படி நடந்து நிம்மதியின்றியே இருக்கின்றன. எனது அபாக்கிய மனமும, உன்னை விடுத்துச சுவர்க்க-நரகத்தோடு தொடர்புகொண்ட சுகசம்பவத்தையே நாடிக்கொண்

டிருக்கிறது. நான் மிகவும் ஏழையாக இருக்கிறேன் நீ கருணைமயமானவன் என்பதை பிறர் கூறக்கேட்டு எனது மனம் மிகவும் சந்தோஷமடைந்திருக்கிறது.

ஹே ரகுநாதனே! ஹே வீரனே! நீயே என்னைக் கண்டு உருகவில்லை என்றால் துன்பம் என்னை எப்படித் தாக்காமல் இருக்கும்? நான் குற்றங்களின் இருப்பிடம் தான். ஆயினும் ஹே முராரே! நீ துக்கங்களை நசிக்கச் செய்பவனில்லையோ? துளசிதாசனாகிய என்கு இன்னமும் உன்மீது நம்பிக்கை இருக்கிறது. ஏனெனில் நீ நிறைய அறபாகளை கரையேற்றி இருக்கிறாய். (என்னை யும் நிச்சயம் கரையேற்றிவிடுவாய் என்று நம்புகிறேன்.)

## 111

ஹே கேசவா! என்ன சொல்வதென்றே தெரிய வில்லை ஹே ஹரி! உன்னுடைய இந்த விசித்திர அமைப்பைக் கண்டு மனதிலேயே ஆச்சரியப்பட்டுக் கொண் டிருக்கிறேன் இந்த உலகமெனனும் சித்திரத்தைக் கையற்ற ஓவியா சூனயமான சுவரில் (ஆகாயத்தில்) நிறமேதுமின்றியே வரைந்ததுபோல் இருக்கிறது. அச் சித்திரம் கழுவுவதால் அழியாது. ஆனால் அதனை மரண பய துன்பம் வாட்டுகிறது. (ஓவியர் வரையும் சித்திரத்தின் நிறம் கழுவினால் அழிந்துவிடும். அதற்கு மரண பயமோ துக்கமோ இல்லை. ஆனால் இந்த பஞ்ச பூத சரீர ஓவியத் திற்கு நிறமேதுமில்லை கழுவுவதால் ஒன்றும் ஆகாது. ஆனால் இதற்கு மரண பயமும் துக்கமும் உண்டு.) சூரிய கிரணமெனனும் நீர்நிலையில் காலமென்னும் முதலை வசித்துக்கொண்டிருக்கிறது. அங்கு நீர் (சுகம்) பருக வரும் உயிரினங்களை முதலை (காலம்) விழுங்கிவிடுகிறது. (எவ்வாறு பறவைகள் சூரிய கிரணத்தை நீரென்று

நினைத்து அக்கிரமங்களின் பின் சென்று இறுதியில் தாகத்தால் மடியுமோ, அவ்வாறே இவ்வுலகில் சுகத்தை நோக்கிச் செல்பவர்களை இறுதியில் வாயற்றதாயினும் காலமென்னும் முதலை விழுங்கிவிடும்.) சிலர் இவ்வுலகம் உண்மையானது என்று கூறுகிறார்கள். சிலர் பொய்யானது என்று கூறுகிறார்கள். மற்றும் சிலரோ மேற்கூறிய இரண்டுமே கலந்தது என்று கூறுகிறார்கள். யார் இந்த மூன்று பிரமைகளையும் மறந்துவிடுகிறார்களோ, எல்லா வற்றையும் கடவுளின் செயல் என்று நினைக்கிறார்களோ அவர்கள் மட்டுமே தன்னைத்தானே அறிந்தவர்களாவர்.

## 112

ஹே கேசவா! ஹே சுவாமி! என்னை நீ நன்கு அறிந்திருந்தும், எந்தக் காரணத்தினால் என்னைத் துஷ்டனாகப் பாவித்துப் பாராமுகமாக இருக்கிறாய்? புனிதமான, களங்கமற்ற மனம், படைத்த சாதுக்கள் தான் உன்னுடையவர்கள் என்று நீ சொல்வாயானால், பிராமணன் (அஜாமிலன்) வேடன் (வால்மீகி) தாசி (பிங்களா) ஆகியோரை மட்டும் ஏன் கரையேற்றினாய்? அவர்களுடன் மட்டும் உனக்கு ஏதேனும் தனிப்பட்ட உறவு இருந்ததோ?

ஹே ஹரி! என்னுடைய இந்த ஜீவனின்வாழ்நாளின் வாழ்க்கை, கர்மம், நற்கதி (சொர்க்கம் போவது) துர்க்கதி (நரகம் போவது) ஆகியவை அனைத்தும் உன் கையில் தான் இருக்கின்றன. ஹே பிரபோ! எனது மமதையை அழித்து, உன்னை மறந்து திரியாமல் இருக்க ஏதேனும் வழி செய்வாயாக! ஹே பிரபோ! நீ என்னை விட்டு விட்டாலும், நான் வேறு யாரையும் பூஜிக்க மாட்டேன். இதுவே என் உயிர்ப்பிரமாணம் ஆகும். ஹே ரகுவீரா!

நீ என்னைச் சுவர்க்கத்திற்கு அனுப்பினாலும் சரி, நரகத்திற்கு அனுப்பினாலும் சரி மனம், வாக்கு, செயலால் எங்கிருந்தாலும் உன்னையே நான் பிரார்த்திருப்பேன். தலைவனே! இவ்விதம் உன்னிடம் அதிகப்பிரசங்கித்தனமாக நான் பேசிக்கொண்டிருப்பது சரியன்று. தவறு தான் என்றாலும், உனது இரக்கமற்ற தன்மையைக் கண்டு இரவும் பகலும் துளசிதாசனாகிய நான் துன்பப் படுகிறேன். (ஆகவே மனம் தளர்ந்து இவ்விதம் சொல்ல நேர்ந்தது.)

## 113

ஹே மாதவா! ஏன் என்மீது இன்னும் கருணை காட்டாமல் இருக்கிறாய்? சரண் புகுந்தவர்களைக் காப்பாற்றுவதே உன் லட்சியம். உன் தாமரைத் திருவடிகளைப் பார்த்துப் பார்த்து வாழ்வதே என் லட்சியம். நான் ஏழையாகி நீ தயாளனாகவும் நான் அடிமையாக வும் நீ என் தலைவனாகவும் ஆகாதவரையிலும் நான் பட்ட கஷ்டங்களை உன்னிடம் சொல்லவில்லை; பொறுத்துக் கொண்டிருந்தேன். ஆயினும் நீ எல்லா வற்றையும் அறிந்துதான் இருந்தாய்! வேதங்கள் உன்னைத் தாராள குணமுடையவன், புனிதமானவன் என்றும் என்னைக் கஞ்சன் அற்பன், பாவி என்றும் கூறுகின்றன. ஹே ரகுநாதா! உனக்கும் எனக்கும் பல உறவுகள் ஏற்பட்டுவிட்டு இருக்கின்றன. அப்படி இருந்தும் என்னை உன்னால் எப்படிக் கைவிடமுடியும்? இப்பொழுது நீ என்னைக் கைவிடுவதால் ஒரு காரியமும் நடக்காது. நீயே எனது தந்தை, தாய், குரு, சகோதரன், நண்பன், தலைவன், மற்றும் எல்லாவகையிலும் என்னைக் காப்பவன். எனவே அஞ்ஞானமெனனும் இருளில் நான் விழாமலிருக்க ஏதேனும் ஒரு உபாயத்தை யோசிப்பா

யாக, ஹே தாமரைக் கண்ணனே! உன் எல்லையற்ற கருணை, உலகிலுள்ள பெரும் பயத்தைப் போக்கவல்லது. ஹே பிரபோ! உன்னுடைய ஒளியின்றி துளசிதாசனாகிய எனது சந்தேகம் என்ற இருள் நீங்காது, நீக்கவும் முடியாது. உன்னாலதான் நீக்க முடியும்.

## 114

ஹே மாதவா! இவ்வுலகில் என்னைப் போன்று செயலற்றவனாக, பாவியாக, எல்லையற்ற துன்பங் கொண்டு, சிறுமைபத்தில் ஈடுபட்டுள்ளனர் வேறு யாருமில்லை. உன்னைப் போன்று பலனை எதிர் பார்க்காது தயை காட்டுபவரும் துன்பப்படுகிறவர்களைக் காப்பவரும் பரம தியாகியும் வேறு யாருமில்லை. நான் துன்பத்தாலும் துயரத்தாலும் மனநிம்மதியின்றி இருக் கிறேன். இதன் பிறகும், ஹே பரமதயாளா! எக்காரணத் தினால் என்மீது உனக்கு இரக்கம் ஏற்படவில்லை? ஆயினும் இதில் உனது குற்றமேதும் இல்லை. எல்லாம் என் குற்றமே என்பதை நான் அறிவேன். ஹே தலைவனே! நீ எனக்கு ஞானத்தின் இருப்பிடமான (மானிட) சரீரத்தை அளித்திருக்கிறாய். ஆனால் அதைப் பெற்ற பின்பும் உன்னை நான் அறிந்துகொள்ளவில்லை. மூங்கில், சந்தன மரத்தின் மீதும் இலையற்ற முடசெடி பசுமையான மரத்தின் மீதும் வீணாகக் குற்றஞ்சாட்டு கின்றன. வாசனையற்ற மூங்கில் மரத்திற்குச் சந்தன மரம் எவ்வாறு வாசனையளிக்க முடியும்? இலையே இல்லாத முட்செடி பசுமையான மரத்திடமிருந்து எவ்வாறு இளந்தளிரைப் பெறமுடியும்? அதுபோன்றே விவேகமற்றவனும் பக்தியற்றவனுமாகிய நான் உன் மீது எப்படிக் குற்றம் சாட்டமுடியும்? ஹே பகவானே! எல்லா வகையிலும் நான் கொடூரமானவன், நீ மிருதுவானவன்

என்பது என மனதின் அசைக்க முடியாத நம்பிக்கை, ஹே! பிரபோ! இந்தத் துளசிதாசனின் அஞ்ஞானம் என்னும் விலங்கை உன்னால்தான் தகர்க்க முடியும்.

## 115

ஹே மாதவா! எனது அஞ்ஞானமென்னும் முடிச்சு எவ்வாறு அவிழும்? வெளியில் இருந்துகொண்டு கோடி உபாயங்களைச் செய்துகொண்டிருக்கிறேன். ஆனால் உள்ளிருக்கும் முடிச்சு அவிழவில்லை. நிறைந்திருக்கும் நெய்க்குடத்தில் தெரியும் சந்திரனின் பிரதிபிம்பம்; கோடி யுகங்கள் வரையிலும் தீ மூட்டி கொதிக்க வைத்தாலும் (சிறிதளவு நெய் இருக்கும் வரையிலும்) அழிவதில்லை. எவ்வாறு மரப்பொந்தில் வசிக்கும் பட்சியானது அம் மரத்தை வெட்டுவதால் மரணமடைவது இல்லையோ, அவ்வாறே ஆலோசனையின்றிச் செய்யும் உபாயங்களால் மனம் புனிதமடைவதில்லை. எவ்வாறு பாம்புப் புற்றின்மீது பலவகையாக அடிப்பதாலோ, அநேக உபாயங்களைச் செய்வதாலோ, அதனுள்ளிருக்கும் பாம்பு இறப்பதில்லையோ, அவ்வாறே சரீரத்தைப் பலமுறை தேய்த்துக் கழுவிச் சுத்தப்படுத்தினாலும் சிற்றின்பங்களினால் அழுக்கடைந்த மனம் புனிதமடைவதில்லை. ஏ துளசிதாஸ்! பகவான் மற்றும் குருவினுடைய தயையின்றி நிர்மல ஞானம் ஏற்படுவதில்லை. யாரும் விவேகமின்றி இப் பிறவிப் பெருங்கடலைக் கடக்க முடியாது.

## 116

ஹே மாதவா! ஒருவர் எவ்வளவுதான் முயற்சி செய்து சாகக் கிடந்தாலும், நீ தயை காட்டாத வரையிலும் மாயையிலிருந்து விடுதலை பெறமுடியாது.

இதுவே உனது மாயையாகும். நான கேட்கிறேன், விசாரிக்கிறேன். புரிந்துகொள்கிறேன்; மற்றவர்களுக்கும் புரியவைக்கிறேன். ஆயினும் எந்த மாயையின அனுபவம் ஏறபடாமல, அறியாமையால் ஏறபடும உலகத்தின பயனகள், ஆபததுககள தொலலை கொடுததுக கொண டிருக்கின்றனவோ, அநத உனது மாயையின நிலை என மனதில் நிலைத்து நிறகவிலலை. இனிப்பாக குளிர்ந்துள்ள பிரம்மாம்ருதத (வேத உபதேசம்)தின சுவையை இநத மனம் அறிந்து கொள்ளுமேயானால், பிறகு கானல் நீரான சிற்றின்பத்தை நாடி இரவும் பகலும் ஓடுமோ? தூய்மையான நவரத்தினங்களைத் தன் வீட்டிலேயே வைததிருப்பவன கண்ணாடித் துண்டுகளைச் சேர்ப் பானோ? (அதாவது, பகவானுடைய அழகின ஆனந தத்தை அடைநதவன துச்சமான உலகச சிற்றின்பத்தை நாடமாட்டான்) கனவில ஒருவருககு அடிமையானவன, விழித்துக கொண்ட பின் (அங்கு யாருமில்லை என்பதை அறிந்த பின்பும்) விடுதலைககாக மனறாடுவானோ! ஞானம, பக்தி போனற எண்ணற்ற வழிகளும் உணமை யானவையே, சிறிதளவும பொய்யலல. ஆயினும் துளசி தாசனாகிய எனது மனதில உனது—ஸ்ரீராமரின்— கிருபையால மட்டுமே பிரமையை அழிக்கமுடியும் என்ற நம்பிக்கை பதிநதுள்ளது.

## 117

ஹே ஹரி! எந்த மூலம கனவிலகூட முக்தி அடைய இயலாதோ அதையே துளசிதாசனாகிய நான இரவும் பகலும் செய்துகொண்டிருக்கிறேன். இநநிலையில் உன் மீது எப்படிக் குற்றஞ்சாட்ட முடியும்! செல்வம் (நிலம், பணம, தானியம், நண்பர், கால்நடைச் செல்வம ஆகிய இவற்றை அடைவதும் வளர்த்துக்கொள்ள நினைப்பதும)

தீமையின் மொத்த உருவமாகும். அதன் காரணமாகப் பாழுங்கிணற்றிலதான் விழுவேன் என்பதை நன்கு அறிவேன். ஆயினும் அதை விடாமல் நாய், ஆடு, கழுதை ஆகியவற்றைப் போன்று சிற்றின்பத்தில திளைத்துத் திரிந்து கொண்டிருக்கின்றேன்; எல்லா உயிர்களையும் பகைத்துக் கொண்டிருக்கிறேன். மோகத திற்கு வசப்பட்டு விட்டேன். எனக்கு நலன் தரக்கூடிய வற்றைப் பற்றி சிறிதும் சிந்திக்கவில்லை. ஞானத்தின் பகைவர்களான காமம், பொறாமை ஆகியவற்றிலேயே எப்பொழுதும் மூழ்கி இருக்கிறேன். வேத, புராணங் களைக் கேட்டதனால் எல்லா உலகங்களிலும் ஸ்ரீரகு நாதரே வியாபித்திருக்கிறார் என்பதை அறிந்திருக் கிறேன். அதை அறிந்த பின்பும், எவ்விதம் சந்தன மரத்தின் மணம் மூங்கிலில் நுழையாதோ, அவ்வாறே எனது பாழும் மனதிலும் இந்த உண்மை நுழையவில்லை.

ஹே கருணையின் இருப்பிடமான ஸ்ரீராமா! நான குற்றங்களின் சமுத்திரம் என்பதை நீ அறிவாய். ஏனென்றால் நீ என் இதயத்தில் வசிக்கும் இறைவ னாவாய். இதனால் கருடவாகனனே! பிறவித் துன்ப மென்னும் பாம்பால் பீடிக்கப்பட்டிருக்கும் துளசிதாச னாகிய நான உன்னிடம் தஞ்சமடைந்திருக்கிறேன். (உனது வாகனமான கருடனைக் கண்டவுடன் எனது பிறவித் துன்பமென்னும் பாம்பு பயத்து ஓடிவிடும் எனவே என்னிடம் ஒருமுறை வருவாயாக!)

## 118

நான் எந்த வகையில் சுகம் அடைவேன்? ஹே ஹரி! யானைத் தந்தங்கள் எப்படி இருக்கின்றனவோ அது

போலத்தான் நான் செய்யும் காரியங்களும இருக்கின்றன. இதை நீ நன்கு அறிவாய்.

நான் பிறரிடம சொல்வதையெல்லாம நானே செய்து விட்டேன என்றால் கன்றின் குளம்படி நீரைத் தாண்டுவது (வெளிதோற்றத்திற்கு மட்டுமே யானைத் தந்தம் இருக்கிறது. யானை சாப்பிடுவதற்கு அவை பயன்படுவதில்லை.) போன்று இந்தப் பிறவிப் பெருங்கடலைக் கடந்து விடுவேன. (அதாவது நியமப்படி காரியங்கள் செய்பவன பசுக்கன்றின் குளம்படி பட்ட இடத்தில் ஏற்படும பள்ளத்தில் தங்கும் நீரைக் கடப்பது போன்று பிறவிப்பெருங்கடலை எளிதாக கடந்துவிடுவான்) ஆனால சொல்வது ஒன்று, செய்வது வேறொன்றாக இருக்கும்போது உனது திருவடிநிழல எனக்கு எப்படிக் கிடைக்கும்?

மயில பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கிறது. அதன குரலும் அமுதம் போன்று இனிமையாக இருக்கிறது. ஆனால அதன் உணவோ விஷப்பாமபாகும். எத்தகைய கொடுமை இது! ஹே ரகுவீரா! யார் எல்லா உயிர்களிடமும அன்பு செலுத்தபவராகவும பொறாமையின்றியும் உன தாமரைத் திருவடிகளில் பகதி கொண்டவராகவும் திட புத்தியுடையவராகவும வேற்றுமை பாராட்டாதவராகவும இருக்கிறார்களோ, அத்தகையவர்களே உனக்குப் பிரியமானவர்கள்.

ரகுநாதா! என்னிடம் பெருங்குற்றங்கள நிறைந்திருக்கின்றன. நரகத்தில் இருப்பதற்கு உரிய தகுதிதான என்னிடம இருக்கிறது. ஆயினும் கருணையின இருப்பிடமே! உன பெருமையை நினைத்து இந்தத் துளசிதாசனமீது தயை காட்டுவாயாக!

## 119

ஹே ஹரி! எனது இநத உலகப பிரமை எதனமூலம தூர விலகும்? இந்த மனம உலகததின அழியும தன்மையைப பார்த்துககொண்டும கேடடுக்கொண்டும சிந்தித்துககொண்டும்தான் இருக்கிறது. ஆயினும், அது தன் சுபாவததைவிடவில்லை. பகதி, ஞானம், புலனடககம் ஆகியவை மனதை ஸதிரபபடுததுவதற்கான உபாயமாகும. இவ உபாயஙகளால் பிறர் எனனைப புகழவாாகளா, எனககு ஏதேனும கொடுபபாாகளா என்ற ஆசை என மனதை விட்டு அகலவிலலை எல்லா உயிரினங்களும தூஙகும இரவு நேரததிலும் உன அருளுககுப் பாததிரமான பகதர்கள மட்டும விழித்துக கொண்டிருககிறாாகள. நான் செய்யும விபரீதச் செயல் களைக கண்டு அதை அறியும்போது மிகவும் பயமாக இருக்கிறது. எபபடிக கையறற சிததிரககாரன் மனதில வரையும் ஓவியம பயனற்றதோ, அதைப்போன்றே விதி வசத்தால் மக்களின மனோரதம் தோலவியடையும்போது சுகததை எதிர்பார்க்கும் மக்களுககுத் துன்பம் ஏற்படு கிறது. உனனுடைய ரிஷிகேசன் (ஐம்புலனகளின அதிபதி) எனனும நாமததைக்கேட்டு என்னை உனககு அர்ப்பணிக கிறேன். என் மனதில உன்மீது பெரும நம்பிக்கை நிறைந்து இருக்கிறது. ஹே பிரபோ! துளசிதாசனாகிய எனது ஐம்புலனகளால எனக்கு ஏறபடும துககத்தை அவசியம நீ போககுவாயாக! (ஏனெனில நீ ரிஷிகேஷ, அதாவது, ஐம்புலன்களின் தலைவன்)

## 120

ஹே ஹரி! எனது பெரும் பிரமையை நீ ஏன இன்னும் போககவிலலை? இவ உலகம நிலையறறது

நான். ஆயினும் உன் கிருபை ஏற்படாத வரையிலும், அது உண்மையானது போலத் தோன்றும். செல்வம் யாவும் (உடல், பொருள்) பொய்யானது என்பதை அறிவேன். ஹே கோசுவாமி! உலகில் ஜனன மரணக் கணக்கு முடிவில்லையானாலும் கட்டப்படாமலேயே கூண்டில் அடைபடும் மடத்தனக் கிளியைப்போன்று என் மூர்க்கமான பிடிவாதத்தால் நான் பாழுங் கிணற்றில் விழுந்திருக்கிறேன்.

எட்டிக் கனவில் தோன்றும் தோர்களால் மரணம் நெருங்கி வரும்போது பல வைத்தியர்கள் வந்து பல உபாயங்களைச் செய்தாலும், கண் விழிக்காமல் அத நோயின் துன்பம் தீராதோ அவ்வாறே பிரமையில் ஆழ்ந்து நாங்கள் துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். அவற்றைப் போக்க பல உபாயங்களைச் செய்து கொண்டும் இருக்கிறோம். அதனால் தத்துவ ஞானம் பெறாமல் அவற்றிலிருந்து விடுதலை பெற முடியாது. வேதம், குரு, சாது, ஸ்மிருதி கண்ணில் தோன்றும் இவ் வுலகம் யாவும், பொய்யானது, துன்பமளிப்பது என்பதை ஒப்புக்கொண்டுள்ளன. இவ்வுலக ஆசையைத் தியாகம் செய்துவிட்டு ஸ்ரீராமபஜனை செய்யாவிட்டால் அவர் களின் உலகத் துன்பங்களை யாரால் போக்கமுடியும்? வேதங்கள், இனிய மொழிகளில் இப் பிறவிப் பெருங் கடலை நீந்துவதற்கான பல உபாயங்களை கூறியிருக் கின்றன. ஆனால் துளசிதாஸ்! நான், எனது என்ற எண்ணத்தைக் கைவிடாத வரையில் இவ் உயிருக்கு என்றுமே சுகம் கிடைக்காது என்பதைப் புரிந்துகொள்.

## 121

ஹே ஹரி! பார்த்தும் கேட்டும் உணர்ந்தும் இருந்த போதிலும், பயமும் சந்தேகமும் நீங்காதது பிரமையின் மகத்துவமே. உலகம் பொய்யானது என்றால் மூன்று தாபங்களாலும் அனுபவம் பெறுவது எதற்காக? கானல் நீரை உண்மையானது என்று கூறமுடியாது. ஆனால் பிரமையால் விசேஷ துன்பங்கள் ஏற்பட்டுக்கொண்டிருக் கின்றன. அழகிய மெத்தையில் தூங்கிக் கொண்டிருப்பவன் கனவில் சமுத்திரத்தில் மூழ்குவதாகப் பயப் படுகிறான் என்றால் அவன் கனவிலிருந்து விழிப்படையா தவரை கோடிப் படகுகளிருந்தாலும் அச் சமுத்திரத்தைக் கடக்கமுடியாது. அறியாமையினால்தான் இப் பயங்கர வுலகம் எப்பொழுதும் நமக்கு அழகாகக் காட்சி அளித்துக் கொண்டிருக்கிறது.

துளசிதாஸ்! சமத்துவம், சந்தோஷம், தயை, விவேகம் ஆகியவற்றுடன் காரியத்தைச் செய்பவனே சுகமடைகிறான். இவ்வுலக பிரபஞ்சம் பொய்யானது என்று வேதங்கள் கூறினாலும் ஸ்ரீராமரிடம் பக்தி பூண்டு ஈசனடியார்களிடம் நட்புக் கொள்ளாவிட்டால் பயத்தை யாரால் நீக்கமுடியும்?

## 122

ஹே ஹரி! நான் (அறியாமையை அழிப்பதற்கான) எந்த உபாசனையைச் செய்யவும் அறியவில்லை. ஒருவருக்கு இருக்கும் நோய்க்கேற்ற மருந்தைக் கொடுக்க வில்லை என்றால் அம் மருந்தின் குற்றம்தான் என்ன? எந்த அரசனாவது, கனவில் பிரம்மஹத்தி தோஷத்தைச் செய்ததுபோல கண்டு, அதனால் பாபமேற்பட்டுவிட்டது என்று நினைத்துப் பைத்தியமாக சுற்றிக்கொண்டு

இருந்தால் அவன் நூறுகோடி அசுவமேத யாகத்தைச் செய்தாலும் அத் தூககத்திலிருந்து அவன் விழிக்காதவரை அத் துன்பத்திலிருந்து மீள முடியாது. (அவ்வாறே, தத்துவ ஞானம் பெறாவிட்டால் அறியாமையுடன் கூடிய பாபங்களிலிருந்து விடுதலை பெற முடியாது.) அறியாமை யால் மாலையில் பாம்பிருப்பதாகப் பிரமைகொண்ட ஒருவன், பலவித பலத்தைப் பிரயோகித்து அடித்து அடித்து அவனது கை ஓய்ந்தாலும் அது இறப்பதில்லை. (அது உண்மைப் பாம்பாக இருந்தால்தானே இறக்கும்? அதைப் பாம்பு என்று நினைக்கும் பிரமை நீங்கும்போது தான் அது இறக்கும்.) தனது பிரமையின் காரணமாகச் சூரிய கிரணங்களால் ஏற்படும் கானல் நீர்க்கடல் அதிகப் பயமுறுத்தும். அதில் மூழ்கியவர்களால் கப்பலிலோ, படகிலோ ஏறிக் கரை சேரமுடியாது.

சகோதரனே! நான் எனனும் மமதையுடன் கூடிய உலகம் நிர்மூலமாகின்ற வரை, கோடி யுகங்கள் வரை யிலும் உபாசனை செய்து செய்தே மடிந்தாலும் பிறவிப் பெருங்கடலைக் கடக்க முடியாது.

## 123

ஹே தயாள ரகுராமா! உன்னுடைய கிருபையின்றிப் பக்தர்களுக்கு நற்கதி ஏற்படாது, அவர்களது அறியாமை விலகாது, பிரமை நீங்காது என்பது எனக்கு நன்கு புரிகிறது. வாயச் சொல்லில் அளவற்ற நிபுணராக இருப்பவரால்கூட பிறவிப் பெருங்கடலைக் கடக்க முடியாது. ஒருவர் இரவில் விளக்கைப்பற்றி பேசுவதால் இருளைப் போக்க முடியாது. எப்படி உணவின்றிக் கஷ்டப் படும் ஏழையின் வீட்டில், கற்பகவிருட்சம் மற்றும் காமதேனுவின் சித்திரத்தை வரைந்துவிடுவதால்

அவனுடைய பசித் துன்பத்தைப் போக்கிவிட முடியாதோ, அதே போன்று அறுசுவை உணவைப்பற்றி இரவும் பகலும் வர்ணனை செய்துகொண்டு இருந்தாலும் அவனது பசி தீராது. வர்ணனை செய்வதால் அன்றி உண்மையாகவே யாரா அறுசுவை உணவை உண்டு மகிழ்கிறார்களோ அவர்களால்தான் அந்த வர்ணனையின் ஆனந்தத்தை அனுபவிக்கமுடியும். (இதேபோல் சாஸ்திரங்களைப் படிப்பதாலோ வர்ணனை செய்வதாலோ பயனேதும் ஏற்படாது) துளசி! ஒருவருக்கு உள்ளத்தில் தத்துவ ஞானத்தின் ஒளி ஏற்படாமல், அவரது மனதில் சிற்றின்ப ஆசை எனறுவரை இருக்கிறதோ அன்றுவரை அவ்வுயிர் உலகில் பல பிறவிகளை எடுத்து அலைந்துகொண்டுதான் இருக்கவேண்டும். கனவில்கூட சுகத்தை அனுபவிக்க முடியாது.

## 124

நமது மனம் சிற்றின்ப ஆசைகளை விட்டுவிடுமே யானால் கெடுமதியால் ஏற்படும் உலகத் துன்பம், பயம் துயரம் யாவும் நம்மை நெருங்குமோ? நமது மனம்தான் பகைவர், நண்பர், உதாசீனர் என்று கற்பனை செய்து கொள்கிறது. (ஆனால் உண்மையில் யாரும் நண்பரு மில்லை, பகைவருமில்லை, உதாசீனருமில்லை) பகைவர்களைப் பாம்பைப்போன்று பகையாக நினைத்துத் தூர விலகிவிடுதலும் நண்பரைப் பொன்னாகப் பாவித்து ஏற்றுக் கொள்ளுதலும், இரண்டுமற்றவரை சிறு துரும்பாகப் பாவித்து அலட்சியம் செய்து விடுதலும் இயற்கையே. மாணிக்கத்தில் நாம் பயன்படுத்தும் உணவு, உடை, மிருகம், மற்றும் பலவிதமான பொருட்களும் அடங்கி இருப்பது போலவே, சுவர்க்கம், நரகம், ஜங்கம, ஸ்தாவர சொத்துக்கள் யாவும் மனதில் அடங்கி இருக்கின்றன.

(அதாவது மாணிக்கத்தை விற்று உணவு, உடை மற்றும் பல பொருட்களையும் அடைய முடிவதைப்போலவே மனதாலும் சுவர்க்கம் நரகம் முதலிய இடங்களுக்குச் செல்ல முடியும்) எப்படி மரத்தின் நடுவே மரப்பாச்சியும், நூலிலே துணியும் மறைந்திருக்கிறதோ அதே போன்று மனதிலும் பல உருவங்கள் நிறைந்திருக்கின்றன. அவை அவசியமேற்படும்போது வெளிப்படுகின்றன. துளசி! ஸ்ரீரகுபதியின் பக்தியெனனும் ஜலத்தினால் மனத்தை நீராட்டினால முயற்சி ஏதுமின்றியே எளிதாகப பகவானின் தரிசனம கிடைத்துவிடும். அப்பொழுதுதான ஞானத்தின் சொரூபமான பகவானை உணர முடியும், உணர, உணரத்தான புரிந்துகொள்ள முடியும்.

## 125

ஹே ரகுவீரா! தீரத்துடன காப்பாற்றுபவனே! நான எனக்கு ஏறபட்டிருக்கும் பெரும் ஆபத்தை (உன்னிடமன்றி வேறு) யாரிடம் கூறுவேன? ஹே பிரபோ! என உள்ளமே உனது இருப்பிடமாயினும் அதில் பல திருடாகள நுழைந்து கொண்டிருக்கிறார்கள். அத் திருடர்கள் மிகவும் அழுத்தமானவர்களாக இருக்கிறார்கள். எனது வேண்டு கோளையும் வணக்கத்தையும் மதிக்கவில்லை. தலைவா! அறியாமை மோகம், பேராசை, அகங்காரம், காமம், குரோதம், மற்றும் ஞானத்தின பகைவனான கர்மம ஆகியவையே அத் திருடர்கள். நான அநாதை எனபதை அறிந்து அவை என்னை நசுக்கிப் பெரும் தொந்தரவு செய்து கொண்டிருக்கிறேன். நான் தனனந்தனியனாக இருக்கிறேன. ஆனால் அத திருடர்கள் பலபோ இருக்கிறார்கள். எனது கூக்குரலை யாரும் கேட்கவில்லை. எங்கு ஓடினாலும் நான் அவர்களிடமிருந்து தப்பித்துக கொள்ள முடியாது. ஹே ரகுநாதா! என்னைக்

காரபபாறறுவாயாக! ஹே ராமா! கேள! உன இருப்பிடத்தைக் கொஞ்சகொஞ்சமாக அத் திருடர்கள் கொளளை யடித்துக கொணடிருககிறார்கள். அதனால் உனககு அபகீர்த்தி ஏற்படடுவிடுமோ என்று துளசிதாசனாகிய நான கவலைப்பட்டுக கொணடிருககிறேன.

## 126

ஏ மனமே! நீ பகவானின உணமையான பகதியை விரும்புவதாக இருநதால் என் உபதேசத்தை ஏற்றுக கொள்வாயாக! பிரபு-நீ பிறநதது முதல் இதுவரை-எததனை உபகாரங்களைச் செய்திருககிறாரோ அவை யனைததையும் உள ளத்தில் நினைப்பாயாக! அகங்காரத்தை விட்டுவிட்டுப புத்தியுடன அவருடைய சேவையைச் செய்வாயாக! இனப துன்பங்களையும் மான அவமானங்களையும் சரியாக உணர்நதுகொளவாயாக! அப்போதுதான உனககு ஏறபடககூடிய ஆபத்துக்கள தூர விலகும்.

ஏ துஷ்ட மனமே! கேள! இச் சரீரம் காலத்தால் அழியககூடியது. இதனால் யாரையும் குறை சொல்லாதே துளசி! உண்மையான புத்தியினறிக் கபடபக்தி கொள்வதால் மட்டும் ஸ்ரீராமா கிடைக்கமாட்டார். உணமை அன்பினால் மடடுமே அவரைப் பெறமுடியும்.

## 127

பகவானின திருவடிகளில் எனதன்பு இல்லையென படதைப் புரிநதுகொணடேன். ஏனெனில் கனவில்கூட என் மனதில புலனடக்கம இலலை.

ஸ்ரீ ரகுவீரருடைய திருவடிகளிடம் அன்பைச் செலுத்துபவர்கள் எல்லாச் சுகபோகங்களையும் நோயென்று அறிந்து விட்டுவிடுகிறார்கள். ஒருவனைக் காமம் என்னும் பாம்பு கடித்திருக்கும்போது அவனுக்குச் சிறிதும் வேப்பங்காயின் கசப்புத் தன்மை தெரியாது. இவ்வாறு சிந்தித்துக்கொண்டிருக்கும் எனது உள்ளம் குழப்பமடைந்திருக்கிறது. தினமும் புதிது புதிதாகப் பெருங் கவலைகள் சேர்ந்துகொண்டே இருக்கின்றன. துளசி! எப்பொழுதிருந்தாலும் இந்த துன்பங்கள் யாவும் ஸ்ரீராமரின் கிருபையினால்தான் தூர விலகும். வேறு எந்த வழியும் இல்லை!

மனமே! அன்புடன் சீதா சமேத ஸ்ரீராமரை நினைப்பாயாக! ஏனெனில் ஸ்ரீராமச்சந்திரரின் திருவடிகளை விட்டுவிட்டால் உனக்கு வேறு கதியில்லை.

கலியுகத்தில் புத்தி பேதமையடைந்து விட்டிருப்பதால் ஜபம், தபம், தீர்த்தாடனம், யோகம், சமாதி நிலை யாவும் சுதந்திரமாக இல்லை, நமக்கு உதவி செய்வதாகவும் இல்லை. புண்ணியம் செய்து கொண்டே இருப்பினும் பாவம் தீருவதாக இல்லை. அது ரக்தபீஜனென்னும்* ராட்சதனைப் போன்று வளர்ந்துகொண்டே

* ரக்தபீஜன் என்ற அரக்கன் கடுந் தவம் செய்து சிவபெருமானிடம் தன் சரீரத்தின் ஒரு சொட்டு ரத்தம் கீழே விழுந்தாலும் அதிலிருந்து நூற்றுக் கணக்கான ரக்தபீஜ் தோன்ற வேண்டுமென்ற வரத்தைப் பெற்றுக் கொண்டான். அதன் பிறகு மூவுலகங்களையும் அதிரச் செய்துகொண்டு இருந்தான். இறுதியில் தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி, காளி தேவி தோன்றி அவனுடன் போர்புரிய ஆரம்பித்தாள். அவன் உடலிலிருந்து விழும் ரத்தத்தில் பல நூறு ரக்தபீஜர்கள் தோன்றுவதைக் கண்ட காளிதேவி ரத்தம் கீழே விழாதபடி தன் நாக்கைப் பெரிதாக்கி ரக்தம் அருந்தி அந்த அரக்கனைக் கொன்றாள்.

இருக்கிறது. துளசி! ஸ்ரீராமச்சந்திரனின் கிருபை என்னும் காளியே பாவரூப ராட்சதனை அழிக்கவல்லவளாவாள்.

## 129

ஏ நாவே! நீ ஏன் ராம நாமத்தை உருபபோட்டாமல இருக்கிறாய்? அதை உச்சரிப்பதால் சுகமும் ஆனந்தமும் அதிகரித்துப் பாவமும அமங்கலமும் குறையும். ராம நாமத்தை ஜபிப்பதால உழைப்பேதுமின்றியே சூரியன உதயத்தால இருள் விலகிவிடுவதுபோல் கலியுகத்தின் கொடுமையான பயங்கர பாவ வலை அறுந்துவிடும். நீ செய்யும் யோகம், யக்ஞம, ஜபம, புலனடக்கம், தவம், தீர்த்தாடனம யாவும் பிறவியென்னும் யானையைக கட்டுவதறகாகப் புழுதிக கயிறறைத திரித்துக்கொண டிருப்பது போனறதாகும். நீ ராமநாமம் என்னும் நவரத்தினத்தின்மீது ஆசைகொள்ளாமல் குனறுமணியின மீது ஆசை கொண்டிருக்கிறாய். உனது இந்த அறப ஆசையைக கண்டு உனனிடமிருந்து துளசிதாசனாகிய நான தூர விலகிப்போய்க் கொண்டிருக்கிறேன்.

## 130

நாவே! நீ ராம், ராம், ராம், ராம், ராம், ராம என்று ஜபிக்கும்போதே மங்களமும் ஆனந்தமும் ஏற்படடுப் பாபமும் வஞ்சனையும் மறைந்துவிடும. கருவேல மர விதையை விதைத்து யாருக்காவது மாங்கனி கிடைத்திருக் கிறதா? கூறு! தற்புகழ்ச்சியாக வம்பளந்து பேசிப்பேசியே உன் வாழ்நாட்கள வீணாக கழிந்துகொண்டிருக்கின்றன. ஆனால் அவ்வாறிருக்க விடாதே; (வம்பளப்பதை விடுத்துக் கடவுளைத் தியானம் செய்வாயாக!) காலம், கர்மம், குணம், சுபாவம் யாவும் எல்லோருடைய

தலையையும் அழுத்திக் கொண்டிருக்கின்றன. ஆனால் ராமநாமத்தின் மகிமையைக் கேட்ட உடனேயே இவை யாவும் நம்மைவிட்டு ஓடிவிடும். அறிவற்ற ஜனங்கள் உழைக்காமலேயே எல்லா சித்திகளையும் அடைய விரும்பு கிறார்கள். கலியுகத்தின் மிகப்பெரும் வியாபாரம் ராமநாமம் என்னும் ஊரில் நடந்து கொண்டிருக்கிறது. ராமநாமத்தில் விசுவாசம் கொண்டு அன்பு செலுத் தினால் உள்ளம் திடமடைந்து பகவானிடம் சேர்ந்து விடும். ஸ்ரீராமநாமம், ராவணன் போன்ற பகைவர் களையும் துளசிதாசனாகிய என்னைப் போன்ற பாவி களையும் புனிதப்படுத்தி இருக்கிறது.

## 131

ஸ்ரீராமரின் பாதக் கமலங்களில் பவித்ரமான அன்பு வைத்திருத்தலே இப் பிறவியின் பெரும் பயனாகும். ராம நாமத்தைக் கூறினாலே எல்லாத் தர்மங்களும் எளிதாகி விடும். வேதங்களில் கூறப்பட்டிருக்கும் யோகம், யக்ஞம், விவேகம், புலனடக்கம், கருமம் யாவும் கேட்பதற்கு இனிமையாகவும் மிருதுவாகவும் இருக்கும். ஆனால் செயல்முறைக்கு மிகவும் கசப்பாகவும் கடினமாகவும் தோன்றும். (யோகம், யக்ஞம் ஆகியவற்றைச் செய்தால் கிடைக்கக்கூடிய சுவர்க்கம், செல்வம் முதலானவற்றைக் கேட்க இனிமையாக இருக்கும். ஆனால் செய்யும்போது மலை போன்று பாரமாக, கடினமாகத் தோன்றும். துளசிதாஸ்! நீ இவற்றைக் கேட்டறிந்து புரிந்தபின் பிரமையில் மறந்துவிடாதே. நீ பிரபு ஸ்ரீராமருடைய தாசனாகிவிடு. அதனால் உனக்கு எல்லா நன்மைகளும் உண்டாகும்.

## 132

அன்பான ஸ்ரீராமச்சந்திரரிடம் அன்பு செலுத்தாமல் இல்லியா வீணாக வாழ்ந்து கொண்டிருக்கிறது. நீ எச் சுகத்தைச் சுகமென்று கருதுகிறாயோ அது எவ்வளவு என்பதை புரிந்துகொள். (இவ்வுலகச் சுகம் நொடியில் நசித்துப் போகக்கூடியது. பெரும் துன்பத்தையே அளிக்க வல்லது.) ஆகாயம், பூமி, பாதாளம் ஆகியவற்றில் எங்கெல்லாம் நீ ஜென்மமெடுத்தாயோ அங்கெல்லாம் சிற்றின்பத்தையே விரும்பினாய். அதையே நீ அடையவும் செய்தாய். நீ ஏன் அறியாமையில் மூழ்கிக் கிழிந்த (உண்மையில் கிழியாமலிருக்கும்) ஆகாயத்தை தைப்பதில் லயித்திருக்கிறாய்? துளசி! நீ ஏன் பிரபு ஸ்ரீராமரின் தற்புகழைப் பாடி எதனால் ஆனந்த ரூபமடைந்து அமரத்வம் அடைந்து விடுவாயோ, அந்த அமுதத்தைக் குடிப்பதில்லை? (அதைக் குடித்தால் ஆனந்த ரூபமடைந்து அமரத்துவம் அடைந்துவிடுவாய்).

## 133

மூடனே! நான் மீண்டும், மீண்டும் உன்னிடம் நன்மை பயக்கும் அன்பான, பவித்ரமான வார்த்தை களைச் சொல்லிக்கொண்டுதான் இருக்கிறேன். அதை கேட்டு மனதிலிருத்தி புரிந்துகொண்டு நீ ஏன் நல்வழி யில் செல்லவில்லை? உலகிலுள்ள சிறியோர், பெரியோர், நல்லோர், தீயோர், யார்தான் தனது மற்றும் தனது குடும்பத்தின் நன்மையை விரும்பாமல் இருக் கிறார்கள்? பிரம்மா முதல் சிறு புழு வரையிலும் சுகத்தின் போது மகிழுகிறார்கள்; துன்பத்தின்போது கஷ்டப்படுகிறார்கள். இடையன் மிருகங்களை நடத்துவது போன்ற பரமாத்மா ஜீவன்களை

(அஞ்ஞானத்தால்) கட்டுகிறார். (ஞானத்தால்) அவிழ்க்கிறார். (காமமென்னும்) வண்டியில் பூட்டுகிறார். சிறறின்பத்தைச் சுகமென்று நினைப்பது சிரசிலிருக்கும் பாரத்தைத் தோளில் வைத்துக்கொள்வதற்கு ஒப்பாகும். அடமூடா! நீயும் அதைப்போன்று சிறறின்பத்தால் சுகம் கிடைக்காது என்பதை நன்கு அறிந்து புரிந்துகொண்ட பின்பும், உள்ளத்தில் ஏற்றுக்கொண்ட பின்பும் ஏன் இன்னும் துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறாய்? (அதாவது ஒருவன் சிரசிலிருக்கும் பாரத்தைத் தோளில் இறக்கி வைத்துக்கொண்டு, பின்பு தோளில் வலி எடுக்கும்போது மீண்டும் சிரசில் அப்பாரத்தை வைத்துக்கொள்வதுபோல க்ஷணநேர சுகத்திற்காக ஒரு சிறறின்பத்திலிருந்து விடுபட்டு மற்றொரு சிறறின்பத்தில் சிக்கிக்கொள்கிறாய்.) யாராவது கானல்நீரைக் கடைந்து நெய்யை அடைந்திருக்கிறார்களா? நீயே சிந்தித்துப் பார். துளசி எந்தப் பிரபுவிடம் எல்லாச் சுகத்தையும் அடையமுடியுமோ அந்தப் பிரபுவிடமே சரணம் அடைவாயாக!

## 134

ஹே தேவா! நான் உன் வாசலில் இருந்துகொண்டு அடிக்கடி உன்னை அழைத்துக்கொண்டே இருக்கிறேன். ஏனெனில் உன்னிடம் தாழ்மையுடன் துன்பத்தையும் ஏழ்மையையும் கூறினால் அத் துன்பத்தையும் ஏழ்மையையும் நீ நீக்கிவிடுகிறாய்.

ஹே தயாளனே! இந்திரன் முதலான லோகபாலர்கள் ராவணனிடம் பயந்து கலக்கமடைந்திருந்தபோது நீ எதைக் கேட்டு (பெருமைப்படும்படியான அவர்களது எந்த உபாசனையைக் கேட்டு) மானிட சரீரமெடுக்கச்

சங்கோஜபபடவிலலை? துயரததில எரிநது கொண டிருநத விசுவாமிததிரா அகலிகை, ஜனகா முதலானோரின துனபம எவவுபாயததினால நீஙகியது என்பதைத்தான எனனால இனனமும புரிநதுகொளளவே முடியவிலலை. உன திருவடிகளில குகன, ஜடாயு, சபரி ஆகியோரின இயலபான அனபு இருககவிலலை. ஆயினும ஹே தலைவனே உன முன் வரும்போதே கொடிய மரங்களும இனிய பழததைக கொடுககினறன. ஹே ராமா! சகோதரர்களின பகையினால சுக்ரீவனும் விபீடணனும துயரத்தில் உருகிககொண்டிருநத போது அவாகளது எந்தச் சேவையினால ஈர்க்கபபடடுப பரதருக்கு சமமாக அவர்களை நீ ஏறறுக கொண்டாய்? வாயுப் புததிரரான ஆஞ்சநேயா உனககுச் சேவைச செய்து செய்தே உனக்குச சமமானவராகிவிடடார். ஹே ராமா! அவருடைய பேரைச சொனன உடனேயே நீ எலலோரிடமும் மிக்க மகிழ்ச்சி அடைநதுவிடுகிறாய். உன் நியமத்தை அறிநதுகொள்ளாமலேயே மற்ற சாதனஙகளில உலகம துடிதுடித்து இறநதுகொண்டிருககிறது. ஆனால அனை வரையும் வஞசகத்தை விடுத்து, துன்பபபடுபவர்களிடமும ஆதரவற்றவர்களிடமும நீ மகிழ்ச்சியாக இருக்கும் நேர மறிந்து உன்னிடம் சரணமடைநதால துளசிதாசனான என்னைப போனற ஜீவன்களும் கரை சேர்ந்துவிடுவா.

## 135

தேவர்களுககும் துர்லபமான மானிட சரிரததை அளிதது உனனை நரகுடியில பிறக்கச் செய்திருக்கும் அன்பான ஸ்ரீராமரிடம நீ அன்பைச் செலுத்தவிலலை. வீடு பேற்றுக்குக் காரணமான அச் சரிரத்தைப் பெற்ற ஞானிகள் சிவபெருமான மறறும் விஷ்ணுவின பரமபததைத அடைகிறாாகள். நீ இருக்கும் இந்த பாரத

பூமி பவித்ரமானது. அதில தேவநதியான கங்கையும் இருக்கிறது. ஆயினும் ஏ கோழையே! உனது துர்புத்தியால மரங்களில் விஷபபழங்கள் இருககவேண்டுமென்று விரும்பு கிறாய். (அதாவது நற்சாதனங்களை எல்லாம் உனது துர்புத்தியால் துஷ்பிரயோகம் செயகிறாய்.) இப பொழுதும் நேரமாகிவிடவில்லை. இப்பொழுதாவது சிறந்தக ஆரம்பித்துவிடு. மனம் லயித்து பரமாத்மாவைப் பற்றிக் கேள். அவரே உலகைக் காபபவர். எனவே உனக்கும் நனமை ஏறபடும். உன் நலத்திலேயே உனக்குப பிரியம் இருககுமானால, அத்தன்னலத்தை யாரிடமிருந்து நீ பெருகிறாய்? அவர் யார்? அவரைப பறறி வேதங்கள பாடுகினறன எனபதைப பறறிச் சிந்தித்துப்பார்.

ஏ துஷடனே! மனதில தோனறும சிற றினபமென்னும் பாமபுடன விளையாடுவதை விடுத்து பிரபு ஸ்ரீராமனை அடையாளம் தெரிந்துகொள்வாயாக! அதனால தநதை, தாய, குரு, எஜமானன, உன உள்ளம், மனைவி, மகன, வேலையாள, நணபா யாரவரும் உனனிடம் பிரியமா யிருப்பார்கள. எதையும் எதிர்பாராமல் நனமையைச் செய்யும் அந்த ஸ்ரீராமரை இன்னும் நீ அறிநதுகொள்ள வில்லை. அவர் உன்னிடமிருந்து வெகுதூரத்தில இல்லை. பார், உன உளளததிலேயே இருககிறார. வருசததை விடுத்து அவரை நினைபபவருககு அருள பாலித்துக கொணடிருக்கிறார. அன்புடன தன பகதாகள்மீது தன தாமரைக கைகளின நிழல விழச் செயதுகொணடிருக கிறார. அவரின புகழைப பாடுகிறவர்களுடைய புகழை அவா பாடுகிறார. உலகத்தின தலைவனான அவா ஜீவனுககும் ஜீவனானவா. எலலோருக்கும் தேவையான எலலாப் பொருடகளையும் அளிபபவர். பிரம்மாவுக்கு ஆக்கல் சக்தியையும் விஷ்ணுவுககு காத்தல சகதியையும்

சிவபெருமானுக்கு அழித்தல் சக்தியையும் அளித்தவர், ஆனந்தம் மற்றும் மங்களமயமான அழகிய உருவங் கொண்ட ஜானகிநாதனான ஸ்ரீராமரே ஆவார். நல்லொழுக்கத்தின் இருப்பிடமும் கபடமற்றவரும், அழகானவரும் மிகப் பெரிய எஜமானருமான ஸ்ரீராமர் சிவபெருமானுக்குக்கூட அரிதானவர். ஆனால் தானே எழுந்திருந்து படகோட்டியை (குகனை) தழுவிக்கொண்டவர். அன்புடன் தன் களைத்த உடலோடு படகோட்டியின் உடலைத் தழுவியதும் ஆனந்தக் கண்ணீர் பெருகிய ஸ்ரீரகுநாதரைப் போன்று அன்பை விரும்புகிறவர் வேறு யாருமில்லை என்று வேதங்கள், சித்தர், முனிவர் மற்றும் கவிஞர் யாவரும் கூறுகின்றனர். அவர் ஜடாயு, சபரி, ராட்சதன் (விபீடணன்) கரடி (ஜாம்பவான்) வானரம் (சுக்ரீவன்) முதலானோரைத் தன்னைவிட அதிக வணக்கத்துக்குரியவர்களாக ஆக்கினார். அவர்களுடைய சேவைகளை நினைக்கும்போது சங்கோசத்தில் வீழ்ந்து விடுகிறார். ஸ்ரீராமரது சுபாவத்தைப்பற்றி இப்பொழுது நான் கூறியவற்றை நன்கு உன் மனதில் இருத்திக் கொள்வாயானால் உனது கவலைகள் யாவும் தீர்ந்து விடும். அவரும் மனதில் உனது சௌக்கியத்தைப்பற்றி நினைத்து உன்மீது சந்தோஷமடைவார். நீ கைகூப்பி சிரம் தாழ்த்தி வணங்கினால் ஸ்ரீரகுநாதர் உன்மீது சந்தோஷமடைந்து விடுவார். துளசி! அச் சமயமே நீயும் உனது பிறவிப் பயனை அடைந்துவிடுவாய். ஸ்ரீராம நாமத்தை ஜபித்து அவரை வணங்கி அவர் உருவத்தை மனதிலிருத்தி அவருடைய புகழைச் சதா பாடிக்கொண்டிருப்பாயாக! நீ சுவாமி ஜகதீசருடைய சரண கமலங்களில் மது அருந்திய வண்டினைப்போன்று உனது மனதை செலுத்திப் பூமியில் ஆனந்தமாகச் சுற்றிக் கொண்டிருப்பாயாக!

## 136

ஏ ஜீவனே! எப்பொழுது நீ பரமாத்மாவிடமிருந்து வேறுபட்டாயோ, அப்பொழுதே உனது சரீரத்தையே உனது வீடு என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். நீ மாயையின் வலையில் வீழ்ந்து விட்டிருக்கிறாய். அந்த மாயையினால்தான் உனக்குப் பல துன்பங்கள் ஏற்பட்டிருக்கின்றன. நீ அனுபவித்த அந்தப் பயங்கர துன்பத்தின் காரணமாகச் சிறிதளவு சுகத்தையும் நீ கனவில்கூடக் காணவில்லை. நீ பிடிவாதமாக உலகின் பல துன்பம் மற்றும் துயர பாதைகளிலேயே நடந்தாய். ஏ மந்தபுத்தி உடையவனே! நீ அநேக கல்பங்களில் பிறந்து—பிறந்து முதுமையின் துன்பத்தை அனுபவிக்க நேர்ந்தது. ஆயினும் நீ ஸ்ரீராமரை அறிந்து கொள்ளவில்லை. ஏ மூடனே! ஸ்ரீராமரைத் தவிர வேறு இடத்தில் உனக்கு நிம்மதி கிடைக்குமா என்று நன்று யோசித்துப் பார்ப்பாயாக!

ஆனந்தக் கடலின் நடுவே உன் இருப்பிடம் அமைந்திருக்கிறது. எனினும் இதையறியாமல் தாகத்தால் நீ ஏன் இறந்து கொண்டிருக்கிறாய்? கானல்நீரை (சிற்றின்பத்தை) உண்மை என்று நினைத்து அதிலேயே மூழ்கி இருப்பதையே சுகமென்று நினைத்திருக்கிறாய். முக்காலங்களிலும் நீரின்றி இருக்கும் இடத்திலேயே (கானல் நீரிலேயே) சந்தோஷமடைந்து சிற்றின்பத்திலேயே—அதிலேயே மூழ்கி குளித்துக் கொண்டிருக்கிறாய்; அதையே குடித்துக் கொண்டுமிருக்கிறாய். (சிற்றின்பத்தால் எப்போதும் சுகம் இருந்ததில்லை, இப்போதுமில்லை, எப்போதும் இருக்காது என்பதை அறிந்து கொள்வாயாக!) ஏ மூடனே! இப்பொழுது நீ உனது ஆத்ம சொரூபத்தை மறந்துவிட்டு அந்த நீரற்ற கானல்

நீக்க கடலிலேயே வீழ்ந்திருக்கிறாய். நீ பரிசுத்தமான, அழிவற்ற, ஆறு விகாரங்களுமற்ற பரம சுகத்தை கைவிட்டிருக்கிறாய். உன் நிலைமை, அரசன் சனவில் தன் சாம்ராஜ்யத்தை விட்டுவிட்டு சிறைச்சாலையில் அகப்பட்டுக் கொண்டிருப்பதுபோல இருக்கிறது.

நீ உனது காமங்களின் வலுவான கயிற்றைத் திரித்து உனது கைகளாலேயே உன்னை இறுக்க கட்டிக் கொண்டாய். ஏ அபாக்கியவானே! இதனால் நீ (மாயையின்) அடிமையாகி இருக்கிறாய். அதன் பலனாக கர்ப்பவாசம் செய்யவேண்டிய துன்பம் உன்னை எதிர் நோக்கி இருக்கிறது. மறுபிறப்பின் அநேக விதமான துன்பக் குவியலையும் தாயின் வயிற்றிலேயே அறிந்தாய். தலை, கீழாகவும், கால், மேல் நோக்கியும் இருந்த சங்கடத்தைச் சகித்துக்கொண்டிருந்தாய். இதைப் பற்றிக் கேட்பதற்கு யாரும் இருக்கவில்லை. ரத்தம், சிறுநீர், மலம், புழு, கோழை இவற்றினிடையே கண்களை மூடி, கர்பத்தில் தூங்கிக்கொண்டிருந்தாய். அச் சமயம் அழகான சரீரம் இருந்தபோதிலும் துன்ப பாரத்தால் தலையிலடித்துக்கொண்டு அழுது கொண்டிருந்தாய்.

எங்கெல்லாம் நீ உன் கர்ம வலையில் வீழ்ந்தாயோ அங்கெல்லாம் உன்னைக் கைவிடாமல் கடவுள் துணை இருந்தார். பகவான் பல வகையிலும் உன்னைக் காப்பாற்றி இருக்கிறார். அத்தோடு உனக்கு ஞானத்தையும் அளித்தார். ஞானத்தையும் விவேகத்தையும் கடவுள் உனக்கு அளித்ததுடன் முற்பிறவிகளைப் பற்றிய ஞாபகம் உனக்கு வந்தது. உடனே "நான் எந்தக் கடவுளின் முக்குணங்களின் மாயையைக் கடப்பது அரிதானதோ அந்தக் கடவுளிடமே சரணடைந்திருக்கிறேன்" என்றாய். ஹே லட்சுமிநாராயணா! எந்த மாயை தீவ சமுதாயத்

தைத்த தன வசப்படுத்திச் சாட்மறச்செய்து, தினம் தினம் புதுமையாகக் காட்சி அளிக்கிறதோ, அந்த மாயையிலிருந்து சீக்கிரம் என்னைக் காப்பாற்றுவாயாக' ஏனெனில இக் கஷ்ட காலத்தில (காப்பத்தில) நீதானே புத்தியை அளித்தாய் என்று கூறினாய.

பிறகு நீ பலவிதமான துன்பங்களை மனதில உணர்ந்து ''நான பூமியில ஜன்மமெடுத்து சகரபாணி பகவானின புகழ பாடுவேன'' என்று கூறினாய. இவ்வாறு நீ கூறிக் கொண்டிருக்கும்போதே பிரபு உன்னைக் காப்பத்திலிருந்து வெளியேறும்படி வாயுவுக்கு ஆணையிட்டார். பிரசவ காலத்தில் வாயு உன்னை வெளியே தள்ள ஆரம்பித்தபோது அளவற்ற துன்பத்தை அனுபவித்தாய். அக் கஷ்டத்தில நீ எல்லாவற்றையும மறந்துவிட்டாய. அளவற்ற கஷ்டத்தில வியாகூல மடைந்து பலவீனத்தால உன்னால் பேசவும் முடியவில்லை. ஆனால் அச் சமயத்தில உன கஷ்டத்தை யாரும் அறிய வில்லை மாறாக சந்தோஷத்துடன பாட ஆரம்பித்தார்கள்.

குழந்தைப பருவத்தில நீ அனுபவித்த கஷ்டங்கள எண்ணிலடங்கா பசி மற்றும நோயின துன்பம நிறைந்திருந்தது. உன வேதனையை—எக் காரணத்தினால நீ அழுகிறாய என்பதை—உன தாய்கூட அறியவில்லை. உனக்கு நன்மை செய்ய வேண்டுமென்று நினைத்து அவர்கள செய்த காரியம உனக்கு இன்னும் மன வேதனையையே தந்தது. குழந்தைப பருவத்திலும, பிள்ளைப பருவத்திலும், இளமைப பருவத்திலும உனக்கேற்பட்ட துன்பங்களைப்பற்றி யாரால் கூற முடியும்! ஏ கருணையற்றவனே' மகா நீசனே' உன்னாலன்றி வேறு யாரால அக் கஷ்டங்களைச் சகிக்க முடியும்.

அதனபிறகு இளமைப் பருவத்தில மகா மோகமென்னும் மதுவின வசமாகி பெண்ணுடன் உல்லாச வாழ்க்கையில் மூழ்கியதால தர்மம, கட்டுப்பாடு ஆகியவற்றை மீறிவிட்டாய. அச் சமயம் முனனால் அனுபவித்த துனபங்களையும் நீ மறந்துவிட்டாய. பினனால வரபபோகும துனபங்களை அறிந்திருந்தும உன மனம் துடிக்கவிலலையா? எதனால மறுபிறபபு அடைந்து சமசாரக கடலின சூழலில சிக்க வேண்டி இருக்குமோ அதையே நீ செய்திருக்கிறாய. எச சரீரம பழுவாகவோ, சாமபலாகவோ, மலமாகவோ (இறந்த பிறகு சரீரம் அழுகிவிட்டால சாம்பலாகிவிடுகிறது. சரீரம ஜீவ ஜநதுக் களால் உணணப்பட்டால மலமாக வெளியாகிறது.) மாறுகிறதோ அச சரீரத்திறகாக உலகைப பகைத்துக கொணடாய. பிறா மனைவி, பிறா சொத்து இவறறுக் காக பிறருடன பகை கொள்வது அதிகமாகிக்கொணடே இருக்கிறது.

பாரத்துக் கொணடிருக்கும்போதே முதுமை வநது விட்டது. நீ கனவிலகூட அழைக்காத அம முதுமையைப் பறறி ஒன்றும கூற இயலாது. அதன குணத்தை உனது சரீரத்திலிருந்தே நீ அறிந்துகொள்ள முடியும. அது தெளிவாகத் தெரியும. காலததால சரீரம தளர்ந்து நோயும வலியும் தொடர்ந்து செய்துகொணடிருக்கின்றன. தலை ஆடிக் கொண்டிருக்கிறது. புலன்களின சக்தி குறைநது விட்டிருக்கினறன. நீ சொல்வது யாருக்கும பிடிக்கவிலலை. நீ நாயினும கீழாக அனாதரவாக இருக் கிறாய். நேரத்தில உணவு நீரகூட உனக்கு கிடைப்ப தில்லை இந் நிலைமையில்கூட நீ பறறினமையைக கையாளாமல ஆசைகளெனனும அலைகளையே அதிகரிக்கச செய்துகொணடிருக்கிறாய.

உனது பிறவிப் பெருங்கடலைப் (ஜனன-மரண) பற்றி யாரால் கூறமுடியும்? இங்கு கூறியிருப்பதோ ஒரு ஜன்மத்தைப் பற்றியதே. எப்போதும் அனைவரும் நான்கு வகைகளிலும் (முட்டையிலிருந்து பிறக்கும் பறவை முதலியன, காபத்திலிருந்து பிறக்கும் மனிதன், மிருகம் முதலியன, வியர்வையிலிருந்து பிறக்கும் மூட்டைப்பூச்சி, பேன் முதலியன விதையிலிருந்து முளைக்கும் செடி, கொடி முதலியன) பிறந்து, உழல வேண்டியிருக்கிறது. இன்னமும் நீ இதைப்பற்றி சிந்திக்க ஆரம்பிக்கவில்லை. இப்பொழுதுகூட நீ சிந்தித்து ஆசைகளை விடுத்து பக்தர்களை மகிழ்விக்கும் ஸ்ரீராமரை வணங்குவாயாக! கடப்பதற்கு அரிதான பிறவிப் பெருங்கடலைக் கடப்பதற்கான கப்பலைப் போன்ற சக்கரதாரி, தேவாதிதேவா பகவான் ஸ்ரீராமசந்திரனின் புகழைப்பாடுவாயாக! அவர் காரணமின்றியே—பலனை எதிர்பாராது—கருணைகாட்டி மாயையிலிருந்து விடுவிப்பவர். அவர் மோட்சத்தின் தலைவர், பூமிநாதர், லக்ஷ்மிதேவியின் துணைவர், பிராணநாதர் மற்றும் சுகபோகத்திற்குக் காரணமானவர்.

ஸ்ரீரகுநாதரிடம் பக்தி செலுத்துவது மிகவும் சுலபமானது, சுகமளிக்கவல்லது. அது மூன்று தாபங்களையும் துயரத்தையும் பயத்தையும் போக்கவல்லது. ஆனால் அப்பக்தி ஈசனடியார்களின் துணையின்றிப் பிறப்பதில்லை. அவர்களின் துணையும் ஸ்ரீராமரின் அன்பு கிட்டும்வரை கிடைப்பதில்லை. தீனதயாளுவான ஸ்ரீ ராகவன் உருகி கருணை காட்டும்போது பார்வையாலும் தொடுவதாலும் தொடர்பு கொள்வதாலும் பாபத்தைப் போக்கக்கூடிய சாதுக்களின் தொடர்பும், யாருடன் தொடர்பு கொள்வதால சுக-துக்கத்தை ஒரே மாதிரியாக பாவிக்கும் குணம் ஏற்படுமோ, மற்றும் நேர்மை முதலான நற்குணங்கள்

ஏற்படுமோ அச சாதுக்களின் தொடர்பும் கிடைக்கும். இதனால ஆத்ம ஞானத்தை அடைந்துவிடுவதால கர்வம், அஞ்ஞானம் துயரம், குரோதம ஆகியவை இயற்கை யாகவே விலகிவிடுகிறது. அதாவது, ஈசனடியார்களின துணையால் வாழ்க்கையே போற்றத தக்கதாகிவிடுகிறது.

ஒருவர் சாதுககளின் சேவையைச் செய்யும்போதே பேதப புத்தியின பயம நீங்கி அவர்கள ஸ்ரீரங்நாதரின் திருவடிகளில் ஒன்றிவிடுவர். சரீரத்தினால ஏற்படும் குறறங்களை நீக்கிவிட்டால், உயிருக்கு தன் சுய ரூபமான ஆத்மஞானத்திடம அன்பு ஏற்படுகிறது. அந்த அன்பு தனிச் சிறப்புடையதாக தோன்றும். அத்தகைய அன்பு ஏற்பட்டவர எப்பொழுதும் சந்தோஷம், சமநதுவம், சாநதம உடையவராக, ஐம்புலனகளையும அடக்கி ஆள்பவராக இருப்பர. குறறமறறு, நோயறறு, ஜனன மரணமறறு மாறுபாடறறவராக இருப்பர. மகிழ்ச்சி மறறும் துயரம் அவர்களை அண்டுவதிலலை. இப்படிப பட்டவர்கள யாவரும மூவுலகத்திலும பவித்ரமானவா களாகக் கருதப்படுகிறார்கள.

யார இநத மார்க்கததில தூய மனததுடன நடக்கிறார்களோ அவர்களுக்கு இறைவன ஏன உதவி செய்யமாட்டார்? வேதங்களும் சாதுக்களும் காட்டி இருக்கும் மார்க்கத்தில் நடப்பவர யாவரும் சுகததையே அடைகிறார்கள். அவர்கள் ஈசுவர கிருபையால உலக ஆசையைவிடுத்து நித்யானந்தத்தை அடைகிறார்கள். அவர்களுக்குக் கனவில்கூட பிரமை ஏற்படுவதிலலை என்று கோடிமுறை கூறப்பட்டிருப்பதை யாரால் கூறிக்கொண டிருக்க முடியும்? பிராமணர், தேவர், குரு, ஹரி மறறும் சாதுககள் ஆகியோரின்றிப் பிறவிப பெருங்கடலைக

கடப்பது அரிது. இதைப் புரிந்துகொண்ட துளசிதாசனாகிய நான் பயத்தைப் போக்கக்கூடிய லட்சுமி நாராயணனின் புகழைப் பாடிக்கொண்டிருக்கிறேன்.

## 137

ஒருவருக்கு கருணாகர ரகுநாதரின் கருணை இருந்து விட்டால் மற்றவர்களுடைய பகைமை அவர்களை என்ன செய்யமுடியும்? கோடி உபாயங்களைச் செய்தபோதும் பக்தர்களுடைய முடியைக்கூட யாராலும் அசைக்க முடியாது. அறபனானவன் ஏதேனும் ஒரு சாதுவுடைய மரணத்தைக் கண்டால் அம்மரணத்தாலேயே தானும் மரணமடைந்துவிடுகிறான். வேதங்களில் கூறப்பட்டுள்ள பகத பிரகலாதனின் கதையைக் கேட்டவர் யார்தான் அந்தப் பக்திவழியில் செல்லமாட்டார்கள்? பகவான் கஜேந்திரனைக் காப்பாற்றினார். விபீடணனை அரியணையில் அமர்த்தினார். துருவருக்குச் சாசுவதமான பதவியை அளித்தார். அம்பரீஷி என்ற அரசனின் சாப விமோசனத்தை நினைக்கும்போது இப்பொழுதும் மகரிஷிவர்கள்கூட வெட்கத்தால் சங்கோசத்துக் குள்ளாகிறார்கள். ஸ்ரீ கிருஷ்ணபகவான் கூறியது எதையும் துரியோதனன் செய்யவில்லை. அந்த மூர்க்கன் தன் கர்வத்திலேயே எரிந்துகொண்டிருந்தான். ஆனால் இறைவனின் அருள் இருந்ததால் சௌபாக்கியம், வெற்றி, புகழ் யாவும் பாண்டவர்களுக்கே கிடைத்தது. யார் மற்றவர்களுக்காகக் குழிதோண்டுகிறார்களோ அவர்களே இறுதியில் அக்குழியில் வீழுவார்கள். முனிதுரோகிகளுக்குக் கனவிலகூட சுகம் கிடைக்காது. அத்தகையவர்களுக்குக் கற்பகவிருட்சமகூட விஷப் பழங்களையே அளிக்கும். பகவானின் பக்தியில் எல்லையைக் கடக்கும் அளவுக்கு யாருக்கு இரு தலைகள் இருக்கின்றன. துளசிதாஸ்!

ஸ்ரீரகுவீரருடைய புஜவலிமையின் துணை யாருக்கு இருக்கிறதோ அவர்கள் சதா பயப்படாமல் இருக்கிறார்கள். அவர்கள் யாருக்கும் பயப்படுவதில்லை.

## 138

ஹே ரகுகுல நாயகனே! ஹே தலைவா! வேறுவழியின்றி உன்னை ஒருமுறை கூப்பிட்டுடனேயே துன்புறுபவர்களுக்கு எக் கரங்களால அபயமளித்தாயோ அக் கமலக் கரங்களை என் தலையின்மீது வைப்பாயா? ஹே கிருபாளு! எக் கமலக் கரங்களால சிவபெருமானின் வலிய வில்லை ஒடித்து ஜனக மகாராஜனின் கவலையை நீக்கினாயோ, எக் கமலக் கரங்களால படகோட்டியைச் சகோதரனாகப் பாவித்து கட்டிப்பிடித்தாயோ, எக் கமலக் கரங்களால் ஜடாயுவுக்குப் பிண்டதானமளித்து மோட்சத்திற்கு அனுப்பினாயோ, எக் கமலக் கரங்களால் தொண்டனின் நன்மைக்காக வாலியை வதம்செய்து சுக்ரீவனை வானர வம்சத்தின் அரசனாக்கினாயோ, எக் கரங்களால பயத்துடன் சரணடைந்த விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தாயோ, எக் கரங்களால அசுரர்களை அழித்துத் தேவர்களுக்கு அபயமளித்தாயோ, எக் கரங்கள் குளிர்ந்த, சுகமளிக்கிற நிழல பாபம், தாபம், மாயை ஆதியவற்றை அழித்துவிடுகிறதோ அக் கமலக் கரங்களின் நிழலையே துளசிதாசனாகிய நான இரவும் பகலும் விரும்புகிறேன்.

## 139

ஹே தீனதயாளு! உலகம் பாவம, தரித்திரம், துக்கம், மூன்று தாபம் ஆதியவற்றால் சூழப்பட்டிருக்கிறது. ஹே தேவாதிதேவ! எல்லா ஜனங்களும் சுகங்களை இழந்து விட்டிருக்கிறார்கள், எனவே துன்ப நிலையில் நான உன்

வாசலில் நின்று உன்னை அழைத்துக்கொண்டிருக்கிறேன். ஹே பிரபோ! என உடலே பிராமணர்களின் அங்க மென்பது வேதம் மற்றும் பண்டிதர்களின் கருத்தாகும். அதுவே உன வாகனமாகும். ஆனால அப் பிராமணர்களின் ஆசை மனதை கோபம், அஞ்ஞானம், சிற்றின்பம் காமம், பேராசை ஆகியவை ஆக்ரமித்துக் கொண்டிருக் கின்றன. ராஜ சபையில கோடிக்கணக்கான தீய செயலகள் நிறைந்திருக்கின்றன. அங்கு தினமும் பாவமயமான புதிய புதிய பேரக்கிரித்தனங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. நாஸ்திகவாதிகள் அரச நீதி, வேத சாஸ்திரம், கடவுள் நம்பிக்கை, நான்கு தாமம ஆகியவற்றின் அடிப்படையையே தூள் தூளாக்கி விட்டனர். அற்ப ஜனங்கள் ஆடம்பரத்திலும் பாவகாரியங் களிலும் பற்றுவைத்துக் கொண்டார்கள். எல்லோரும் தங்கள் தங்கள் சுகங்களிலேயே மூழ்கி இருக்கிறார்கள். சாந்தம, சத்தியம், மங்களம் யாவும மறைந்து கபடம் நிறைந்த தீயவழிகள பெருகிவிட்டிருக்கின்றன. சாதுக்கள கஷ்டப் படுகொண்டிருக்கிறார்கள். சாதுத்தன்மை யும கவலையில் மூழ்கி இருக்கிறது. துஷ்டர்கள் ஆனந்தத் தில இருக்கிறார்கள். துஷ்டத்தனமையும ஆனந்தத்தில மூழ்கி இருக்கிறது. தார்மீககாரியங்கள் (ஜபம், தவம், பூஜை, தீர்த்தாடனம்) யாவும் பொருள் சேர்க்கும் தன்னலச் சாதனங்களாக ஆகிவிட்டிருக்கின்றதால அவை யாவும் பலன் தருவதில்லை. அவற்றால லாபமோ, விருத்தியோ இல்லை. காமதேனுவை ஒத்த பூவுலகம் கலிகாலமென்னும் கசாபபுக்காரன் கையில அகப்பட்டுக் கொண்டிருக்கிறது. அதில் போடும் விதைகள முளைப்ப தில்லை. கலியுகத்தின் லீலைகளை எவ்வாறு கூற இயலும்? அது எந்தப் பிரயோஜனமும் இல்லாமல் எல்லா காரியங் களையும் செய்துகொண்டிருக்கிறது. அது பற்களை

கடித்துக்கொண்டு கைகளை பிசைந்து கொண்டிருக்கிறது. அதன் மனதில் என்ன இருக்கிறது, என்ன செய்யப் போகிறது என்பதை யாரால் கூறமுடியும்? ஹே பிரபு! பெருந்தன்மையோடு நீ, நீசர்களை மன்னிக்க— மன்னிக்க அவர்கள் தலைமேல ஏறிக்கொள்கிறார்கள். அவ்வாறின்றி கோபத்துடன் நீ அவர்களை விலக்குவாயானால், ஆள்காட்டி விரலால் சுட்டிக்காட்டப்பட்ட பூசனிப் பிஞ்சு எப்படிப் பெரிதாக வளருவதில்லையோ அதைப்போன்று அவர்களும் வளரமாட்டார்கள். உன்னிடம் நான் சரணடைந்திருக்கிறேன். சுவாமியின் சேவகன் என்றமுறையில் எனக்கு நியாயம் கூறுவாயாக! ஏனெனில் உலகில் ஆனந்தம் குறைந்துகொண்டே வருகிறது. மக்கள் எல்லா சௌபாக்கியங்களையும் பெற்று "ஸ்ரீராமரின் கருணைப் பார்வையாலேயே அனைத்தையும் அடைந்தோம் என்று கூறும்படி செய்வாயாக! எனது இந்த வேண்டுகோளைக் கேட்ட நீ நகைத்துச் சந்தோஷத்துடன் என் பக்கம் பார்வையைச் செலுத்தினாய். கருணை என்ற நீரில் உலகை நனைத்தாய். ராமராஜ்யமானதால் எல்லா காரியங்களும் நல்லவகையில் முடியும் என்று கூறும்படியாக நற்சகுணங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஹே ஸ்ரீராம்ஜி! நீ உலகை வென்றவன், மிகவும் சாமர்த்தியமானவன், நல்ல தலைவன். நீ புண்ணியம் என்ற சேனையைத் தோல்வி அடையாமல் வெற்றி பெற செய்திருக்கிறாய். பக்தர்களை ஆதரித்து அவர்களின் துன்பங்களை எளிதாகப் போக்கிவிடும் குணமுள்ளவன். ஸ்தானத்தை (பதவி) இழந்தவர்களை மீண்டும் அந்த ஸ்தானத்தில் ஸ்தாபித்தலும், சீரழிந்தவனை மறுபடியும் சீரடையச் செய்தலும், இழந்த பொருளை மீண்டும் அடையச் செய்தலும் உனது வழக்கமாகும். துளசிதாசனாகிய எனது பிரபு ஸ்ரீராமா! நீ துன்பப்படுபவர்களின் துன்பத்தை எடுத்துக்கொள்பவன்.

## 140

*நீ யாருக்குத்தான் அபயக் கரங்களை அளிக்கவில்லை யாரைத்தான் காக்கவில்லை?*

துளசி! மறுபிறப்பின் பயத்தை அழிக்கவல்ல ஸ்ரீராமரின் பாதங்களை விரோதித்துக் கொண்டவர்வரும் அபாக்யவான்களாகப் பாவரூபத்துடன் வையத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இரவும் பகலும் பாவத்திலேயே அவர்கள் ருசி கொண்டு தூய்மையற்ற மனமுடையவர்களாக இருக்கிறார்கள். வைதீக மார்க்கத்தை விடுத்த அவர்களது கெட்ட புத்தி அழுக்கடைந்திருக்கிறது. அவர்கள் சாதுக்களைச் சந்திப்பதோ, பகவான் பஜனையைச் செய்வதோ இல்லை. ராமகதையைக் கேட்பதிலும் அவர்களுக்கு விருப்பம் இருப்பதில்லை. அவர்கள் யாவரும் குழந்தைகள், செல்வம், பெண், வீட்டுப் பெருமை என்ற இரவில் தம்மை மறந்தவர்களாய் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களது அறிவு எப்போதும் விழிப்பதே இல்லை. அத் துஷ்டர்கள் ராமநாமம் என்ற அமுதத்தை விடுத்துப் பிடிவாதமாகச் சிற்றின்பமெனனும் விஷத்தைக் கேட்டுக் கேட்டுக் குடிக்கிறார்கள். அப்படிப்பட்ட மானிடர் யாவரும் பன்றி, நாய் மற்றும் குள்ளநரியைப் போன்று தம் தாய்மார்களுக்குத் துன்பமளிப்பதற்காகவே பிறக்கிறார்கள்.

## 141

ஹே ரகுநாயக ஸ்ரீராமச்சந்திரா! நான் உன்னிடம் எவ்வாறு பிரார்த்தனை செய்வேன்? ஏனெனில் என்னிட-

முள்ள அநேக பாபங்களைப் பார்த்த பின், உன் பாபமற்ற நாமத்தை அறிந்து நான் பயன்படுத்துகிறேன். மற்றவர்களுடைய துன்பத்தைக் கண்டு வருந்துவதும் மற்றவர்களுடைய சந்தோஷத்தைக் கண்டு சந்தோஷப் படுவதுமான சாதுக்களின் சுபாவத்தை என் மனதில் நான் ஏற்கவில்லை. மற்றவர்களுடைய துன்பத்தைக் கண்டு ஆனந்தப்படுகிறேன். மற்றவர்களுடைய சுகத்தைப் பற்றிக் கேட்டு நெருப்பின்றியே எரிந்து கொண்டிருக் கிறேன். பக்தி, வைராக்கியம், ஞானம், சாதனைகள் ஆகியவற்றைப் பற்றிக் கூறியே பலவிதமாக ஜனங்களை ஏமாற்றிக்கொண்டிருக்கிறேன். சுகத்தின் இருப்பிடமும் சிவபெருமானின் செல்வமுமான உன் நாமத்தை விற்றே நரகத்தில் சேர்க்கும் என் வயிற்றை நிரப்பிக் கொண்டிருக் கிறேன். மேலும் எனது பாவங்கள் சமுத்திரத்தைப் போன்று விசாலமானவை என்பதையும் நனகு அறிவேன். ஆனால் பிறர் எனது பாவத்தைப் பற்றி சிறிதளவு கூறினாலும் அவர்களிடம் சண்டையிடுகிறேன். ஏனெனில் எனது பாவத்தைப்பற்றி அவர்கள் கூறும் போது என்னால் பொறுக்கமுடியவில்லை. ஆனால் மற்றவர்களுடைய தூசியை ஒத்த பாவங்களை மலை யாக்கியும் மலையைத் தூசியாக்கியும் அவர்களை நிராதரவாகச் விடுகின்றன. பலவிதமான வேஷங்களைப் புனைந்து இரவும் பகலும் வஞ்சனையாக மற்றவர் களுடைய செல்வத்தை அபகரித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் ஒரு க்ஷணங்கூட நிலையான மனதுடன் உன் பொற்பாதங்களை நினைப்பதில்லை. எனது நடத்தை யைப்பற்றி நீ ஆராய முற்பட்டால் நான் கோடி யுகங்கள் வரையிலும் வெந்து மடிய வேண்டியதுதான். எப்போதும் விடுதலை அடையவே மாட்டேன். ஆனால் ஹே பிரபோ! உனது கருணைப் பார்வையிலேயே பிறவிப்

பெருங்கடலை, மாட்டுக்குளம்படியில் தேங்கும் நீரைத் தாண்டுவது போன்று நான் எளிதாகக் கடந்துவிடுவேன்.

## 142

ஹே கிருபாநிதி ராம! நான் மிகவும் வெட்கமடைந்திருக்கிறேன். எப்படி நான் உன்னை என் பிரார்த்தனை பைச் செவிமடுக்க வைப்பேன்? தலைவனே! எல்லாக் காரியங்களையும் அதாம வழியில் செய்துகொண்டிருக்கும் போது உன் மனதில் நான் நல்லவனாக எப்படித் தோன்ற முடியும்? புழுப்பூச்சி முதற்கொண்டு எல்லா உயிர்களும் பரமாத்மாவின் சுயரூபமே என்பதை நான் அறிந்த போதிலும் பிடிவாதமாக நான் அவற்றில் இறைவனைக் காணவில்லை. நானோ கண்களென்னும் விட்டில் பூச்சியை மாது என்ற நெருப்பிடம் செலுத்திக் கொண்டிருக்கிறேன். உன்னுடைய கதையைக் கேட்பதே காதின் பலன் என்பதை நான் அறிவேன். மற்றவர்களுக்கும் எடுத்துச் சொல்லுகிறேன். ஆனால் எப்பொழுதும் மற்றவர்களுடைய குற்றங்களைக் கேட்டு கேட்டே மனதில் அதை நிரப்பி மூடி வைத்திருக்கிறேன். என் நாவினால் உன் புகழைப் பாடிச் சிரமமின்றி உன் திருவடிகளை அடைய முடியுமோ அவ்வாயால் தவளையைப் போன்று மற்றவர்களுடைய தீய செயல்களைப்பற்றிக் கத்தி——கத்தியே என் ஜன்மத்தை வீணாக்கிக் கொண்டிருக்கிறேன். ‘உங்கள் மனதை சுத்தமாக வைத்துக்கொண்டிருங்கள். அப்போதுதான் இறைவன் அதில் வாசம் செய்வார்’ என்று பிறருக்கு உபதேசம் செய்துகொண்டிருக்கிறேன். ஆனால் என் மனதிலோ கர்வம், அஞ்ஞானம், வெறி முதலான வஞ்சனையின் குழுவை நிலை நிறுத்திக்கொண்டிருக்கிறேன். எந்தச் சரீரத்தைப்

பக்தர்கள் பகவானின் பரமபதங்களை அடையும் சாதன மாகக் கொண்டிருக்கிறார்களோ அம் மானிட சரீரத்தை வீணாக இழந்துகொண்டிருக்கிறேன். வீட்டில் பொற் குடம் நிறைய அமுதம் இருந்தபோதிலும் ஆகாயத்தில் கிணறு வெட்டிக்கொண்டிருக்கிறேன். மனம், வாக்கு, காயங்களால் நான் செய்த பாவங்களை ஜாக்கிரதையாக மறைத்துக்கொண்டிருக்கிறேன் ஆனால் மற்றவர் களுடைய தூண்டுதலினால், இறைவனுடைய கருணை யால் ஒரு சிறு நற்காரியத்தைச் செய்துவிட்டாலும் அதைப் பறைசாற்றிக்கொண்டு திரிகிறேன். பிடிவாத மாக எல்லோரிடமும் பகைமையே வளர்த்துக் கொண் டிருக்கும் என்னிடம் பிராமணத் துரோகம் அதிகமாகி விட்டிருக்கிறது. அப்படி இருக்கின்ற போதிலும் என் கிருதிகளை சாதுக்களின் நடுவில் கூறிக்கொண்டு நானும் சாதுவாக இருக்கிறேன். வேதம், ஆதிசேஷன், சரஸ்வதி முதலானவர்களிடம் பிரார்த்தனை செய்து எனது அவகுணங்களைப்பற்றிக் கூறினாலும், ஹே பிரபு! கோடி யுகங்கள் வரையிலும் கூறிமுடியாது. அப்படி இருக்கும்போது ஒரு வாயால் அதை எவ்வாறு கூற முடியும்? என்னுடைய செயல்களைப்பற்றி நீ ஆராய முற்பட்டால் எப்பொழுதாவது உன் திருவடிகளை நான் அடைய முடியுமா? ஆயினும் மனதிற்கு ஸ்ரீராமருடைய மிருதுத் தன்மை, நல்லொழுக்கம் ஆகியவற்றின் பலத்தைப் பற்றி உணர்த்திக் கொண்டிருக்கிறேன். ஹே பிரபோ! இந்தத் துளசிதாசரிடம் கனவில்கூட உன்னை மயக்கக்கூடிய குணமில்லை. ஆயினும் ஹே தலைவனே! உன் கருணை யினால் இந்தச் சம்சாரக் கடலும் மாட்டின் குளம்படி நீரைப்போன்று ஆகிவிடும். அதனால் எந்தச் சாதனமும் இன்றி நான் பிறவிப் பெருங்கடலை கடந்துவிடுவேன் என்பதை அறிந்து சந்தோஷப்படுகிறேன்.

## 143

ஹே ராம்! என மனம அநியாயத்தில் ஈடுபட்டிருக்கிறது. அது உன சரணகமலங்களை மறந்து இரவும் பகலும வீணாகச் சுற்றிக்கொண்டிருக்கிறது. அது வேத கட்டளைகளை மதிப்பதுமில்லை, யாருக்கும் பயப்படுவதுமில்லை. செக்கில எள்ளுழலவதுபோனறு கர்மத்தில உழன்ற பினபும் அதன துனபத்தை அது மறந்துவிட்டது. எங்கு சாதுக்களின தரிசனம் கிட்டுமோ, எங்கு பகவானுடைய கதாகாலட்சேபம நடக்கிறதோ அங்கு கனவில் கூட நான போவதில்லை. ஆனால பேராசை, அஞ்ஞானம, காமம, காம குரோதம நிறைந்தவர்களிடம் மட்டும மனம அதிகப் பிரியம கொணடிருக்கிறது. மற்றவர்களுடைய நற்குணங்களைக் கேட்கும்போது பொறாமையும மற்றவர்களுடைய தீய குணங்களைக் கேட்கும்போது சந்தோஷமும் கொள்கிறது. தன்னிடத்தில பாவராஜ்யமே இருக்கின்றபோதிலும் மற்றவர்களுடைய சிறு பாவத்தையும அது பொறுப்பதில்லை. ஹே ரகுவீர! சுவாமி! உன நாமம் எல்லா நற்பலனையும் அளிக்கவல்ல சாதனமாகும். வேதங்களின சாரமாகும். பிறவிப பெருங்கடல என்ற ஆற்றிலிருக்கும் தோணியைப போன்றது. அதை இந்த மூடமனமே காசுக்காக விற்று மற்றவர்களிடம அடிமையாகிவிடுகிறது. எப்போதாவது பிறரால நல்லதை நாடிச சென்றாலும் தீய எண்ணங்களெனனும் தோழர்கள கோபமடைந்து பெரும் இடையூறுகளை விளைவிக்கின்றன. ஹே கருணாநிதியே! நானோ ஏழை, தூய்மையற்றவன, மந்தபுத்தியுடையவன ஆபத்தில் சிக்கிக்கொண்டிருக்கிறேன. என்னுள ஏறபடும மனப்போராட்டத்தை என்னால சகிக்க முடியவில்லை. நான் பலவிதமாக முயற்சிகள செய்த பின்பும் தோற்று

விட்டேன். எனவே இந்த துளசிதாசனின் மனதில் நீ வாசம் செய்யும்போதுதான் அப் பயம் நீங்கும் என்று இப்பொழுதே—உயிர் இருக்கும் போதே—கூறிவிடுகிறேன்.

## 144

ஸ்ரீ ரகுவீரா! உன் பெயரின் கௌரவத்திற்காக யார் தான் ரட்சிக்கப்படாமல் இருக்கிறார்கள்? காரணமின்றியே கருணாகரனாக விளங்கும் பகவானே! நீ யாருடைய சம்சாரச் சங்கடங்களைத்தான் தீர்க்கவில்லை? பிராமணனான அஜாமிலன் பாவத்தின் இருப்பிடம் என்பது உலகத்தில் பிரசித்தமான விஷயமாகும். அதைப் பற்றி வேதத்திலும் கூறப்பட்டுள்ளது. ஆயினும் நாராயணன் என்ற பெயர் கொண்ட தனது மகனை நாராயணா என்று கூப்பிட்டதாலேயே நீ அவனை யமலோகத்திற்குச் செல்லாமல் காப்பாற்றிவிட்டாய். மகாபாவியும் காவக கட்டுமான கஜேந்திரனை முதலை பிடித்துக்கொண்டபோது, ஒருமுறை உன்னை நினைத்தவுடனேயே அதன் இதயதாபத்தைத் தீர்த்துவிட்டாய். வேடன் (வால்மீகி) படகோட்டி (குகன்) கழுகு (ஜடாயு) வேசி (பிங்களா) யாவரும் எண்ணற்ற அவகுணங்களுக்கு மூலஸ்தானம் போன்றவர். ஆயினும் ஹே ராமா! நீ உன் பெயரின் பாதுகாப்புக்காக இவர்களுடைய துன்பங்களனைத்தையும் போக்கிவிட்டாய். ஹே ரகுகுல திலக ஸ்ரீராமச்சந்திரா! துளசிதாசனாகிய நான் மட்டும் பயங்கர இருட்டில் இரவும் பகலும் விழுந்து கிடக்க வேண்டுமா? அந்தப் பாவிகளைவிட நான் எவ்வகையில் குறைந்துவிட்டேன்?

## 145

ஹே கருணைக்கடலே! துளசிதாசனாகிய இந்த ஏழைக்கு மட்டும் இன்னும் ஏன் நியாயம் கிடைக்க வில்லை? துன்புறோர் எங்கு, எப்பொழுது கூப்பிட்டார் களோ அங்கேயே அவர்களுடைய துன்பங்களைப் போக்குகி விட்டவனே! கஜேந்திரன், பிரகலாதன், பாண்டவர், சுக்ரீவன் ஆகியோருக்கு அவர்களது பகைவர் களால் ஏற்பட்ட சங்கடங்களைத் தீர்த்தவனே, தன் சகோதரனின் பயத்தால் மனங்கலங்கிய நிலையில் சரணடைந்த விபீடணனை பரதனுக்குச் சமமாக அணைத்துக் கொண்டவனே! நான் உன் நாமத்தைக் கூப்பிட்டு கூப்பிட்டு இதயத்தில் ஒரு ராமராஜ்யத்தை ஸ்தாபித்துக்கொண்டிருக்கிறேன். அதில் வசிக்க பஜனை, ஞானம், வைராக்கியம் போன்ற நல்லோர்களை கொண்டு வந்து கொண்டிருக்கிறேன். அதாவது உன நாமத் திலுள்ள நம்பிக்கையால் என இதயத்தில் விவேகம், வைராக்கியம் முதலான நற்குணங்களுக்கு இடமளித்துக் கொண்டிருக்கிறேன் இதை அறிந்து கோபமடைந்த காம—க்ரோத முதலான துஷ்டத்தனங்கள் அதன்மீது செடுபிடி செய்து கொண்டிருக்கின்றன. அவை விவேகம், வைராக்கியம் முதலானவற்றை அழித்து ஹே பகவான் ஸ்ரீராமச்சந்திரா! மாது, பகைவன், செல்வம் ஆகிய வற்றை அதில நிரப்பிக்கொண்டிருக்கின்றன. அதாவது, எவ்வளவுக்கெவ்வளவு என இதயத்தில் நற்குணங்களை நிரப்ப விரும்புகிறேனோ அவ்வளவுக்கவ்வளவு தீய குணங்கள் அதில இடத்தைப் பிடித்துக் கொள்கின்றன. சமத்துவம், தொண்டு, கடடம, தான, தண்ட முதலான வழிகளில் பல உபாயங்களைச் செய்து சலித்துவிட்டேன். அதாவது, முதலில் காமக்ரோதத்துடன் சமத்துவத்தைப் பேசிப் பார்த்தேன். அவை சமமதிக்காதபோது அதன

கீழ்த்தனத்தை எடுத்துக் காட்டினேன். அதனாலும் பலனேற்படாதபோது வஞ்சனை செய்தேன். அதனாலும் பலனேதும் ஏற்படாததால் அதன் விருப்பத்திற்கேற்ப சிறதின்பமளித்தேன். அதன் பிறகும் அவை சாந்த மடையாததால் யோக சாதனங்களால் அதன் பலத்தை முறிக்க எண்ணினேன். ஆயினும் அதனால்கூட பலன் ஏதும் ஏற்படவில்லை. காரணமேதுமின்றி நடக்கும் இக் கலகத்தால் எனக்கு மிகவும் கவலையாக இருக்கிறது. அதனால் வெளிப்படையாக இறைவனைக் கூப்பிடேன். தேவர்களிடம் ஏன் முறையிடவில்லை என்று நீ நினைக் கலாம். தேவர்கள் சுயநலக்காரர்கள், திறமையற்ற வர்கள், அயோக்கியர்கள், கொடுமையானவர்கள், மனதில் இரக்கமற்றவர்கள். எனவே நான் எங்கே போவேன்? என் குறையைப் போக்கக்கூடியவர் யார்? உலகில் உன்னைப் போன்று பிறவிப் பெருங்கடலிலிருந்து கரையேறக் கூடியவர் யார் இருக்கிறார்கள்? துளசிதாஸ னாகிய நான் தாழ்ந்தவன்தான். ஆயினும் உன்னு டையவன். வேறு யாருடையவனுமல்ல. ஒரேமுறை பக்தியென்ற புஜங்களின் பலத்தை அளிப்பாயாக! அதனால் பஜனை, விவேகம், வைராக்கியம் முதலான நல்லவை நிறைந்த இச் சிறு ராமராஜ்யம் ஸ்தாபன மாகட்டும்!

## 146

ஹே ராமா! எல்லாவகையிலும் உன்னுடைய சேவகனாக விரும்புகிறேன். கலிகாலம் ஆங்காங்கு என்னைத் தலைவனாக்கிக் கொண்டு வருகிறது. காலம், காமம், இந்திரியங்களின் இச்சையென்னும் முதலைகள் என்னைச் சூழ்ந்துக் கொண்டிருக்கின்றன. இவற்றிறகு

அடிமையாக நான ஒதுதுககொள்ளவில்லை, எனறாலும பலாத்காரமாக என்னை விலைக்கு வாங்க—விலைபேசிக் கொண்டிருக்கினறனர். பெரும புகழுடைய உன நாமம் என் விலங்கினைத தகர்த்து விடுதலை அளிக்கவல்லது. நான அவற்றிடம ''நான ஸ்ரீராமசசநதிரனின அடிமை'' எனறு கூறியபோது அவை கபடமான அன்பு செலுத்தி என இருதயததில நிலைக இடம் கேட்டன இவவுலகில கலியுகத்தின் கட்டாயததினபோில இதுவரை உன நாமத்தை உச்சரித்துக்கொண்டு வந்திருக்கிறேன். இபபொழுது இநத ஏழை சேவகனைக் காப்பாற்ற வேண்டுகிறேன். இல்லாவிட்டால் உனது இந்தச சேவகனை இருககுமிடம தெரியாமல கலியுகம அழித்து விடும. ஹே பிரபோ! எநதச சநதோஷததில ஆந்தை* மறறும் நாயின்* வழககை தீரததாயோ அதே சநதோஷத தில், ஹே கிருபாலு! ''துளசி என்னுடைய தாசன்'' என்று கூறிவிடுவாயாக!

---

* ஆந்தையும கழுகும் ஒரே கூட்டில் வசித்து வந்தன இரண்டுககும இடையே தகராறு தோன்றி ஒன்றை மற்றொன்று வெளியேறும்படி சண்டை யிட்டுககொண்டு ஸ்ரீராமரிடம் சென்று முறையிட்டன: ஸ்ரீராமர் ஆந்தை யிடம கூடு யாருடையது? நீ எப்போதிருந்து அங்கு வசிககிறாய் என்று கேட்டார ஆநதை, எப்போது மரங்கள் தோன்றினவோ அப்போதிருந்து அங்கு வசிக்கிறேன் என்று கூறியது. கழுகிடம் அதே கேள்வியைக கேட்ட போது மனித இனம் தோன்றியது முதல அங்கிருக்கிறேன் என்று கூறியது. ஸ்ரீராமர் கழுகிடம் ''மரஙகளின் தோற்றம்தான் மனித இனத்தைவிட் முந்தியது. எனவே கூடு ஆந்தைக்குத்தான சொந்தமாகும் எனவே கூட்டைக் காலி செயதுவிடு'' என்றார்

* ஒரு நாள ஸ்ரீராமரின சபையில ஒரு நாய அழுதுகொண்டே வந்து தீர்தத சித்தனென்ற பிராமணன், நிரபராதியான தன்னை அடித்துவிட்டான் என்று முறையிட்டது. ஸ்ரீராமர் பிராமணனை அழைத்து நாயை அடித்தற்கான காரணத்தைக கேட்டார். பிராமணன் ''நான் பிச்சை கேட்டுககொண்டிருந்த போது இது இடையில் இருந்தது அதைத் தளளியும நகராததால அடித்தேன்'' என்று கூறினார். பிராமணனமீது தவறில்லை என்றுணர்ந்த பகவான் நாயிடமே பிராமணனுக்கு என்ன தண்டனை அளிக்கலாம் என்று கேட்டார். இறுதியில் நாயின் விருப்பப்படியே அப்பிராமணனை காலிஞ்ஜரின் மடாதிபதியாககி இருவருடைய பிரச்சினையையும் தீர்த்து வைத்தார்.

## 147

ஹே கருணைக்கடலே! தன் தொடையின் துணியைத் தானே விலக்கி வெளிப்படுத்துதல் வெட்கத்துக்குரிய விஷயம் என்பதால் இரவும் பகலும் நான் மனந்தளர்ந்து அவஸ்தைபட்டுக் கொண்டிருக்கிறேன். காம, குரோத, லோப முதலானவை என்கூட இருந்துகொண்டே என்னைக் கொல்லவே நினைக்கின்றன. நானின்றி இவைகளும் இருப்பதில்லை, வஞ்சனையாக என் இதயத்தையே எரித்துக் கொண்டிருக்கின்றன. அதாவது, என் உயிர் இருக்கும்வரையே இவையும் என் உடலில் இருக்க முடியும் என நிருக்கிற நிலையிலும் என்னையே அழித்துக் கொண்டிருக்கின்றன, என் இதயத்தில் வாசம் செய்து கொண்டிருக்கும் அவைகளை என் நண்பர்களாக நினைத்து அவற்றின் இச்சைகளைப் பூர்த்தி செய்தேன். ஆயினும் உணர்வற்ற, போககிரித்தனமான அநேக கர்மங்கள் கதக்களியின் குச்சியைப் போன்று என்னை ஆட்டுவிக்கின்றன. இந்திரியங்கள் கர்மங்களைச் செய்கின்றன. ஆனால் அந்தக் காமத்தின் பலனோ என் தலையில் விழுகிறது. இப்படிப்பட்ட அடிமைத்தனத்தை இதுவரை நான் பார்க்கவோ கேட்கவோ இல்லை. இவற்றை அகற்றினாலும் என்னைவிட்டு விலகாதது பெரிய விசித்திரமாக இருக்கிறது. ஹே பிரபோ! நான் குழப்பத்தில் மூழ்கி இருக்கிறேன். என் கைகளைப் பிடித்துக் கொள்வாயாக! அதனாலேயே இந்தத் துளசிதாசரின் சங்கடங்கள் எளிதாக நீங்கிவிடும்.

## 148

ஹே ரகுவீரா! ஹே சுவாமி! எந்த முகத்தோடு நான் உன்னிடம் பேசுவேன். நான் செய்த காரியங்களை

நினைத்து நானே வெட்கப்பட்டுக் கொண்டிருக்கிறேன். உனக்குச் சேவை செய்தால, அவர்களின் வசமாகிவிடு கிறாய். ஸமரணை செய்தாலே நண்பனாகிவிடுகிறாய். சரணாகதி அடைந்தால் காட்சி அளித்துவிடுகிறாய். ஹே சீதாநாதனே! உன்னுடைய இக் குணங்களின்மீது இனமும் நான் தியானம் செய்யவில்லை.

ஹே கருணைக்கடலே! நீ ஏழைகளின் நண்பன், துன்புறுவோர்களுக்கு நன்மையைச் செய்பவன். சரண டைந்தவர்களைக் காப்பாற்றுபவன் என்பதைக் கேட்டிருந் தும்—அறிந்திருந்தும் நான் உன்னை மறந்துவிட்டேன். சேவை செய்தோ, தியானம் செய்தோ, ஸமரணை செய்தோ, சரணடைந்தோ உன்னிடம் அன்பு காட்ட வில்லை. ஹே ராமா! உன்னைப் போன்ற நல்ல பிரபுவை அடைந்திருந்தும் நான் எனது வாழ்நாட்களை நன்கு வீணாக்கிவிட்டேன். ஹே தலைவனே! நீயோ ஏழை களுக்குக் கருணை காட்டுபவன். ஆனால் நான் ஏழ்மை யிலும் இல்லை. ஹே பிரபோ! உன்னால் செய்ய முடிந்ததை இந்தத் துளசிதாசனுக்காகவும் செய்வாயாக!

## 149

ஹே சுவாமி! நான் எங்கு செல்வேன்? யாரிடம் முறையிடுவேன்? எனக்கென்று வேறு இருப்பிடம் எதுவும் இல்லை. உன் வாசலிலேயே உன் தாசனாகக் காலத்தைக் கழித்திருக்கிறேன். ஹே தலைவனே! பீடிக்கப்பட்ட துன்பத்தின் காரணமாக உன்னிடமிருந்து வழிதவறி விட்டேன. ஆயினும் ஹே கருணைக்கடலே! நீயும் என்னைப் போலவே செய்தால் எப்படி? ஹே ரகுகுல திலகமே! நீ உன் கருணைப்பார்வையால் பார்க்காதவரை எல்லா நினங்களும் தீய தினங்களாகத்தான் இருக்கும்.

தினமும் தீயவை நடந்துகொண்டுதானிருக்கும். தினம் தினம் துன்பம் ஏற்பட்டுக்கொண்டும், தோஷம் பட்டுக் கொண்டும்தான் இருக்கும். என் முதுகை நான் உன் பக்கம் காட்டிக் கொண்டிருந்ததற்குக் காரணம் நான் பார்வை யற்றவன். ஆனால் நீயோ உலகத்திற்கே கண்ணானவன். பக்தர்களின் துன்பத்தைப் போக்குபவனே! உனக்குச் சமமானவன் நீயே! வேறு யாருமில்லை. ஹே தேவா! நான் ஒரு ஏழை அடிமை. நீயோ சுதந்திரமானவன். நான் உன்னிடம் சரணடைகிறேன். பேசுகின்ற ஒருவனிடம் அவன் நிழலே எதையாவது கேட்கமுடியுமா? நீயே கூறு. இதனால் முதலில் உன்னைப் பார்த்துக் கொள். பிறகு என்னைப் பார்த்து இந்தத் தாசனை உண்மையானவன் என்று அனுமானித்துக்கொள். ஹே ராமச்சந்திரா! உன் நாமத்தைப் பாதுகாப்பாகக் கொண்டவர்கள். பிழைத்துக்கொண்டார்கள். ஹேராமா! உன்னுடைய சுபாவமும் நியமமும் என் இதயத்தில் நீங்காது ஆனந்தத்தை அளிக்கின்றன. இந்தத் துளசிதாசன் உன்னுடைய தாசன். எனவே எது உனக்கு நல்லதென்று தோன்றுகிறதோ அதையே எனக்குச் செய்ய வேண்டு கிறேன்.

## 150

ஹே கல்யாண சொரூப ஸ்ரீராமா! எனக்கு என்னைப் பற்றிய சிந்தனையே இருக்கிறது. சில நேரம் இல்லாமலும் இருக்கிறது. ஏனெனில் உலகிலுள்ள எல்லா ஜீவன்களும் துன்பத்தின் பாத்திரமாகவே இருக்கின்றன. பெரிய திறமைசாலியுடன் இருக்கும் ஒருவருடைய (என்னுடைய) உறவு ஒருதலைப்பட்சமாகத்தான் இருக்குமோ? என்னைப்போன்ற பலர் உன்னிடம் இருக்கிறார்கள், ஆனால் எனக்கோ நீ மட்டும்தான் இருக்கிறாய். ஹே

சுவாமி! துஷ்டச்சேவகனாக நான் இருந்தபோதிலும் நல்ல சேவகன் என்ற பேரை எல்லாம் இந்த உன்னிடமே பேசிக்கொண்டிருப்பதை நினைத்து நான் வெட்கப்படுகிறேன். நான் நல்லவனோ கெட்டவனோ, ஆனால் எல்லா ஆண்களும் பெண்களும் என்னை 'ஸ்ரீராமருடையவன்' என்று கூறுகிறார்கள். நாயினைப் போன்று சேவகர்களும் தவறு செய்தால் தூஷணையெல்லாம் தலைவரின் தலையில்தான் விழுகிறது. என் மனத்தின் குழப்பத்தைத் தீர்ப்பதற்கான எந்த உபாயமும் எனக்குப் புலப்படவில்லை. ஹே தீனபந்து! உனக்கு என்ன தோன்றுகிறதோ, எதைச் செய்ய முடிகிறதோ அதையே எனக்காகச் செய்வாயாக, நீ உன் புகழ்மாலையைப் பார். அதில் நானும் இருக்கக்கூடும். ஹே பிரபோ! உன்னால் கைவிடப்பட்ட இந்தத் துளசிதாஸ உன்னிடமே சரணடைந்து உன்னெதிரிலேயே இருப்பேன். வேறெங்கும் போகமாட்டேன்.

## 151

ஏ ஜீவனே! நீ ஸ்ரீராமருக்குச் சேவை செய்வதில் வெட்கமடையவில்லையென்றால் நீ செல்லாக் காசாக ஒருவர் கையிலிருந்து மற்றொருவர் கைக்கு மாற வேண்டியதில்லை. அதாவது பரமாத்மாவின் அம்சமாகப் பல காப்பங்களில் பிறந்துகொண்டிருக்க வேண்டியதில்லை. நீ நாவினால் ஸ்ரீரகுநாதருடைய நாமத்தை ஜபிப்பதில் சலிக்கவில்லையென்றால், ஏ மூடனே! மந்திரவாதியின் வீட்டிலிருக்கும் களுசனைப்போன்று தூசியைச் சாப்பிடமாட்டாய். ஏ மனமே! நான் சொல்வதைக் கேட்டு ஸ்ரீராமச்சந்திரரின் அன்பைச் சம்பாதித்துக்கொண்டால் நீ சீதாநாதரின் முன் தோன்றிச் சுகமடைவாய். அதோடு

எல்லா இடங்களிலும் அதாவது பூலோகத்திலும் பரலோகத்திலும் இடம் பெறுவாய. உனக்கு ஸ்ரீராமர் நல்லவராகத் தோன்றுவாரானால் நீ எல்லோருககும் நல்லவனாகததோனறுவாய். எலலா வகை பேதங்களையும் ஏற்படுததும காலம, கர்மம, குணம முதலானவை உன் மீது கோபமடையாது. ராமநாததததில் உளளம உருகி உன மனம் லயித்துவிட்டால சுயநலம் கொண்டவாகளும பரமனைத தேடுபவாகளும உன்னிடம் விசுவாசம் கொள வார்கள். நீ சாதுக்களின் சேவையை செயதால், மறறவா களின துககததைக கேட்டு அறிநது வருத்தபபட்டால, கோடி ஜனமஙகளின அழுக்கும உனது மனமென்ற ஏரியின அடியில தங்கிவிடும். அந நிலையில் கடபபதறகு அரிதான பிறவிப பெருஙகடலை எநதக் கடின உழைபபு மின றிக கடநது விடலாம். ராமநாமததைத தலைகீழாகக் கூறியபோதும அதன மகிமை வேடனைககூட (வாலமீகி) முனிவராககிவிட்டது. ஏ மூடனே! தேவாகளுககும் அரிதான இம மானிட சரீரததை நீ வீணாககாமல இருநதால் நீ மஙகளத்தின மூல காரணமாகி விடுகிறாய. உனனைப பிறபபித்தவரே உனககு அநுகூலமாகி விடுவார். ஏ மனமே! நீ அனபுடனும விசுவாசததுடன ராமநாமததில லயித்து இருநதால இந்த துளசி ஸ்ரீராமரின் அருளினால் மூனறு தாபஙகளாலும் எரிய மாட்டான

## 152

ஸ்ரீராமா! உனது நலல சுபாவததால நீ யாருக்குத தான நனமை செய்யவிலலை? யுகயுகமாக உலகில ஞானிகி நாதரான உனது மகிமை பிரசிததமானது. பிரமமா முதலான தேவாகள பூமியின குறைகளைக கூறி முறை

பிட்டபோது சூரியவம்ச ரூப அலவியை மலரச்செய்யும் சந்திர ரூப மற்றும் அமுதந்திறகுச் சமமான ஆனந்தம் நிறைந்த பகவானான ஸ்ரீராமா நீ அவதரித்தாய். தாடகையின் ஒளியைக்கண்டு விசுவாமித்திரர் பனிபோல் உருகி வந்தார். பிரபு ஸ்ரீராமச்சந்திரா, நீ அந்த தாடகை யிடம் பகைகொண்டு பரலோக பலனையே அளித்தாய். அதாவது, பகைவனைப் போன்று தாடகையை அழித்த அதே சமயம் நண்பனைப் போன்று அவளுக்கு முக்தியளித் தாய். தானே சென்று அகல்யாவுக்கு சாபவிமோசன மளித்தாய். மற்றும் கவலைக் கடலில் மூழ்கியிருந்த மிதிலாபுரியின் அதிபதியான ஜனகருடைய வில்லினை ஒடித்ததன்மூலம் அவர் ப்ரதிக்ஞையைக் காப்பாற்றினாய். கோபத்தின் குவியலான அகங்காரத்தின் இருப்பிடமான பரசுராமரை உனது பார்வையாலேயே சாந்தமடையச் செய்து சமத்துவத்திற்கு தகுதியுடையவனாக்கிவிட்டாய். தாய் தந்தையரின் கட்டளையை ஏற்று சந்தோஷத்துடன் வனத்திற்குச் சென்றாய். இப்படிப்பட்ட சிறந்த தர்மவானை, வீர திரம் கொண்டவரை வெல்லக் கூடியவர் யாரா இருக்கிறார்கள்? தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்தவனும் எல்லாவகைப் பிராணிகளையும் புசித்தவனுமான குகன் கூட உனது புனிதமான அன்பினால் சகோதரனுக்குச் சமமானான. உன்னைத் தவிர சபரி மற்றும் கழுகிற்கு வேறு யார் ஆதரவுடன் மோட்சமளிப்பார்? எல்லையற்ற துயரமடைந்த சுக்ரீவனின் துன்பத்தைப் போக்குபவர் யார்? காலத்தின் பிடியினால் ராவணனுடன் பகைத்துக் கொண்ட விபீடணனுக்கு அபயமளிக்க யாரால் முடியும்? ஆயினும் - ராமரின் கிருபையால் - இன்றும் அவர் ராவணன் ஆண்டுகொண்டிருந்த இலங்கையை ஆண்டு கொண்டிருக்கிறார். முனிவர்களும் அடைய எண்ணி மனந் தளர்ந்துவிடும் இடத்தைத் தூசிக்குச் சமமாக

மதிக்கப்பட்ட மூடனும் அயோத்தியாவாசியுமான வண்ணானகூட அடைந்துவிட்டான். ராமநாமத்தின் மகிமையால முக்தியடைய முடியாதபடி பிரம்மா யாரைப் படைத்திருக்கிறார்? ராமநாம ஸ்மரணையை பார்வதி வல்லப பகவான் சங்கரன் செய்துகொண்டு பிறரிடம் அதைப்பற்றிச் சொல்லிச் சொல்லிப் பிரசாரம் செய்து கொண்டும் இருக்கிறார். அஜாமிலனின் கதையைக் கேட்டு யார்தான் சப்தோஷப்படவில்லை? இக் கலிகாலத் தில்கூட ராமநாமத்தைக் கூறியே விஷ்ணுலோகத்தைச் சென்றடையாதவர் யார்? எருக்கஞ் செடியைக் கற்பக விருட்சமாக மாற்றக்கூடியது ராம நாமத்தின் மகிமை. இதற்கு வேதங்களும் புராணங்களுமே சாட்சியாகும். மற்று ம் துளசிதாசரின் சரித்திரத்தையும் பாருங்களேன்!

## 153

ஹே ரகுநாதா! ஆதம சமர்ப்பணம் செய்கிறேன். எனக்கு உனது ஆதரவு மட்டுமே இருக்கிறது. என்னைப் போன்ற வெட்கமற்ற, நீச, செல்வமற்ற நற்குணங்களற்ற வனுக்கு இவ் வுலகில் உன்னைத்தவிர வேறு தெய்வமும் இல்லை, வேறு புகலிடமும் இல்லை. உலகில் வீடுவீடாக ஒவ்வொரு வீட்டிலும் நல்ல நல்ல தலைவர்கள் நிறைந்து இருக்கிறார்கள். ஆனால் அவர்களெல்லோருக்கும் அவரவர் துன்பமே தெரிகிறது. நானோ வானரங்களின் நண்பனும் விபீடணனைக் காப்பாற்றிக் கோசலபாலகன் ஸ்ரீராமரைத் தவிர்த்து வேறெங்கும் செல்லமுடியாது. உன்னுடைய நாமம பக்தர்களின் துன்பத்தை அழிக்க வல்லது. பக்தர்களுக்குச் சுகத்தை அளிக்கவில்லை. அதாவது சரணடைந்தவர்களுக்கோ வஜ்ரத்தால் செய்யப் பட்ட உடலாகும். ஹே கருணைக் கடலே! இப்பொழுது

துளசிதாசரை நீ உன்னுடைய தாசனாக ஆக்கிக்கொள். நான் விலையேதுமின்றியே உன் கைகளில் விற்கப்பட வேண்டுமென்று ஆசைப்படுகிறேன்.

## 154

ஹே தேவ! (உன்னைத் தவிர) ஏழைகளிடம் கருணை காட்டுபவர் வேறு யார் இருக்கிறார்கள்? நீ நல்லொழுக்கத்தின் இருப்பிடம்; ஞானிகளில் சிரோன்மணி, புகலடைந்தவர்களுக்குப் பிரியமானவன், பக்தர்களைக் காப்பாற்றுபவன். உன்னை ஒத்த சாமர்த்தியசாலியும் எங்கும் வியாபித்திருப்பவனும் எல்லோரின் தலைவனும் யார் இருக்கிறார்கள்? சிவபெருமானின் மானசரோவரில் வசிக்கும் அன்னம். எந்தப் பகவான் உன்னைத்தவிர அனபினால் பட்சி (ஜடாயு) அரக்கன் (வீபீடணன்) வானரம் (சுக்ரீவன்) காட்டுமனிதன் (நிஷாதி) கரடி ஜாமபவான்) முதலானவற்றை நண்பனாக்கி இருக்கிறார்கள்? ஹே நாதா! உலகின் மாயை, ஜீவன்களின் தோஷம், குணம், செயல், மற்றும் காலம் யாவும் உன் கையில் இருக்கின்றன. இந்தத் துளசிதாசன் நல்லவனோ கெட்டவனோ ஆனால் உன்னுடையவன். கொஞ்சம் இவனுடைய பக்கமும் பார்வையைச் செலுத்தி மிகக மகிழ்ச்சி அடையச் செய்யவேண்டுகிறேன்.

## 155

எனக்கு ராமநாமம் ஒன்றின்மீதுதான் விசுவாசமிருக்கிறது. எனது கபடமனம் ஸ்ரீராமநாமத்தை விடுத்து வேறெதிலும் நம்பிக்கை வைப்பதில்லை. இதுவே அதனுடைய சுபாவமாகும். ஆறு சாஸ்திரங்களையோ நான்கு வேதங்களையோ பயில எனது பாசகியத்தில

எழுதப்படவில்லை! உபவாசம், தீர்த்த யாத்திரை மற்றும் தவம் ஆகியவற்றின் பெயரைக் கேட்டாலே, யார் அவற்றில் ஈடுபட்டுச் சரீரத்தை இளைக்க வைத்துத் தினம் தினம் செத்து மடிவது என்று நினைத்துப் பயந்து கொண்டிருக்கிறேன். கலியுகத்தில் காமங்களைச் செய்வதே கடினம். செல்வத்தின் பிடியிலிருக்கிறது. ஞானம், வைராக்கியம், யோகம், ஜபம், மற்றும் தவம் யாவும் காமம், குரோதம், லோபம், மோகம் ஆகிய வற்றால் பாதிக்கப்பட்டிருக்கின்றன. எப்பொழுதும் ஸ்ரீ ரகுநாதரின் புகழைப் பாடிக்கொண்டிருப்பவர்கள் உலகில் எல்லாவகையிலும் சிறந்தவர்கள். ஏனெனில் ராமநாமமென்னும் கற்பகவிருட்சத்தினடியில் அமர்ந் திருப்பவர்கள் வெயிலிற்கு—உலகின் மூன்று தாபங்களுக்கு —பயப்படவா செய்வார்கள்? யமலோகத்திற்குச் செல்ப வர் யார்? சுவர்க்கத்திற்குச் செல்பவர் யார்? பிரம்ம லோகத்திற்குச் செல்பவர் யார்? என்பதை அறிந்தவர் யார்? உலகில் ஸ்ரீராமரின் அடிமையாயிருப்பதே துளசி தாசனுக்கு மிகவும் பிடித்திருக்கிறது.

## 156

கலியுகத்தில் ராமநாம கற்பகவிருட்சமானது, தரித்திரம், பஞ்சம், துக்கம் மற்றும் தோஷங்களென்னும் இருளைப் போக்கவல்ல சூரியனைப் போன்றது. யார் தோவது படைத்தல் தொழில் கொண்டவன் விரோதம் கொண்டிருப்பினும் ராமநாமத்தை அவர்கள் கூறிய டனேயே தீய எண்ணம், நல்லெண்ணமாக மாறிவிடும். பெரும் முனிவர்களும் சிவபெருமானுமகூட ராமநாமத்தின் மகத்துவத்தை இப்படியும் அப்படியுமாகக் கூறி இருக்கிறார்கள். இந்த அழகிய, இனிமையான ராம

நாமத்தின்மீது விசுவாசம் வைத்திருப்பவர்களுக்குப் பூலோகம், பரலோகம் யாவும் ஒன்றே. ஏ துளசிதாஸ்! ராமநாமத்தின் மகிமையால் இவ்வுலகில் பிறப்பு, இறப்பைப் பற்றிய கவலை இருப்பதில்லை.

## 157

ராமரைப் போன்ற சுவாமியின் சேவையைத்தான் செய்யவேண்டும். அவர் சுகமளிப்பவர், நல்ல பண்புள்ளவர்; சாமர்த்தியமானவர், வீரர், புனிதமானவர் மற்றும் கோடிக்கணக்கான காம தேவர்களைவிட அழகானவர். அவரது மகிமையைச் சரஸ்வதி, ஆதிசேஷன் மற்றும் முனிவர்கள் கூறிக்கொண்டிருக்கிறார்கள், சாம வேதத் தைப்போன்று அவருடைய புகழைப் பாடிக்கொண்டிருக் கிறார்கள். அவருடைய நாமத்தை அன்புடன் ஸ்மரணை செய்வதன்மூலம் பிறை அணிந்தவனுடைய (சிவபெருமான்) அன்பைப் பெற விரும்புகிறார்கள். வனவாசத்தின்போதுகூட அவர் சிறிதும் கவலைப்பட வில்லை. ஒரு முறை வணக்கம் கூறியவுடனேயே மனம் இளகிவிடும். இதற்கு உதாரணம் இலங்கையில் அரியணையில் நீங்காது அமர்ந்திருக்கும் விபீடணனே. யாருக்குச் சேவை செய்வது எளிதோ, யார் பக்தர்களை எப்பொழுதும் கண்காணித்துக் கொண்டிருக்கிறாரோ, யார் தனது பக்தர்களுடைய தவறுகளைப் பார்த்தபின்பும் கோபமடையாமல் அவர்களுடைய நற்குணங்களைக் கேட்டு சந்தோஷமடைபவராக இருக்கிறாரோ, யாரைப் பூஜித்தே உயிரினங்களும் ராட்சதர்களும் மூவுலகங்களின் திலகமாகி விட்டார்களோ, அப்படிப்பட்ட பிரபுவைப் பூஜிக்காமல் இருப்பது அவர்களுடைய துரபாக்கியமே என்று துளசிதாசர் கூறுகிறார்.

## 158

தலைவனின்மீது எவ்வாறு பழிகூறுவேன! ஹே ஹரே, எனது மனம் உனது பகதியை விடுத்துக் காமம் மறறும் பேராசையின பினனால் சுற றிக்கொண்டிருக் கிறது. மற றவர்களால் வணங்கப்படுவதிலே எனக்கு மிகவும் ஆனந்தம் ஏற்படுகிறது. ஆனால் உன்னை வணங்குவதில மிகக் குறைவான பிரியமே இருக்கிறது. நான மறறவர்களுக்கு நிறைய உபதேசமளிக்கிறேன் ஆனால் மற்றவர்களுடைய நல்லுபதேசங்களைக் கேட்காத மூர்க்கனாக இருக்கிறேன. எப் பாபங்களைப பிரியமுடன் செய்தேனோ அவற்றை மனதில் மறைததுு வைததிருக் கிறேன. அனால சாதுக்களின சேர்க்கையால் செய்த ஒரு சில நறகாரியங்களை உலகமெலலாம் அறியச் செய் கிறேன. நான செய்திருக்கும் ஒருசில நறகாரியங்களையும் நிலத்தில விழுநது சிதறிய தானியத்தைப பொறுக்குவது போன்று, சேர்த்து வைத்திருக்கிறேன். ஆனால் ஹே தயாநிதியே! சர்வமெனனும் திருடன் அதையும எனது மனதிலிருநது எடுத்துக் கொள்கிறான - காவததால் அதைபபற்றி ஜனங்களிடம் கூறிக்கூறி அதன் பலனை இழநதுவிடுகிறேன. பேராசையென்னும மதயானை தன கழுத்தில் ஆசையெனனும மாலையை அணிந்துகொணடு குரங்கினைக குரங்காட்டி ஆட்டி வைப்பது போனறு என மனதை ஆட்டிப்படைததுக் கொணடிருக்கிறது. இதற்கு பினபும் பண்டிதர்களைப போனறு உயர்நத வைராக்கியத்தின தத்துவங்களைப் பறறிக கூறிக்கொண் டிருக்கிறேன். அவ்வாறிருந்தும் வெட்கத்தை விடுத்து என்னை உனது பக்தன என்றும கூறிக்கொணடிருக் கிறேன. ஹே ரகுநாதா! இநத வெட்கமற்ற தன்மையைக்

கண்டு சந்தோஷித்தது இந்தத் துளசிதாசரைச் சம்சார பந்தத்திலிருந்து விடுதலை செய்துவிடுவாயாக!

## 159

ஹே பிரபோ! எல்லா குற்றங்களும் என்னுடையதே. நீ நல்லொழுக்கக்கடல், தயாளமானவன், அனாதைகளின் நேசவன் ஏழைகள் மற்றும் துன்புறுவர்களைக் காப்பாற்றுபவன். எனது வேஷத்திலும் சொற்களிலும் வைராக்கியம் இருக்கிறதே தவிர மனமானது பாபங்கள் மற்றும் தீய குணங்களின் கஜானாவாக இருக்கிறது. ஸ்ரீராமா! உன்னிடத்தில் நான் காட்டும் அன்பும் விசுவாசமும் வெறுமையானவை, கபடம் நிறைந்தவை. (அதாவது சிங்கத்தின் புகழைப் பெற விரும்பி குள்ளநரிக்குச் சேவைசெய்யும் முயல குள்ளநரிக்கே உணவாகிவிடுவது போன்று மானிடரும் புகழைப் பெற விரும்பி தீயவர்களோடு சேர்ந்தால் இருக்கின்ற நல்லனவும் பேராய நாசமடைந்துவிடுவர்.) சாதுக்களை விரோதித்துக் கொண்டு தீயவர்களுடன் நான் சகவாசம் செய்து கொண்டிருக்கிறேன். இது குள்ளநரிக்குச் சேவைசெய்து சிங்கத்தின் புகழைப் பெற விரும்பும் முயலின் நிலையைப் போன்று நான் சதா ராமநாமத்தை ஜபித்துக்கொண்டிருக்கிறேன். சிவபெருமானும் உபதேசம் செய்திருக்கிறார். ஏனெனில் இக் கலியுகத்தில் உதட்டளவில் ராம நாமத்தைக் கூறினாலும் அந் நாமம் கவலையெனனும் கடலை வற்றவைத்துவிடும் அகத்தியரைப் போன்றது. ராமநாமம் அளவற்ற அநுகூலமானது, ஆனந்தம் மற்றும் மங்களத்தின் ஆதாரம். இப்படிப்பட்ட ராமநாமத்தின் மகிமையைக் கேட்டுத் துளசிதாசனாகிய நானும் சந்தோஷமடைகிறேன். (ஏனெனில் அதுதான் எனது வாழ்க்கைத் துணையாகும்.)

## 160

ஹே ஹரே! நீ பாவிகளையும் புனிதமாக்குபவன் என்று கேள்விப் பட்டிருக்கிறேன் நானொரு பாவி, நீயோ பாவிகளைப் புனிதமாக்குபவன். இவ்வாறு நாமிருவரும் ஒருவருக்கொருவர் வேஷதாரிகளாக வியாபாரிகளாக இருக்கிறோம் அதாவது நான் பாவியாக இருக்கவேண்டி இருக்கிறது. நீ பாவிகளை ரட்சிப்பவனாக இருக்கவேண்டியிருக்கிறது. வேதங்களில் கூறப்பட்டிருக்கும் தர்மமென்னும் வேடன், கணிகை, (பிங்கலை யென்னும் வேசி) கஜேந்திரன், மற்றும் அஜாமிலன் ஆகியவர்களே நீ பாவிகளை ரட்சிப்பவன் என்பதற்கு உதாரணமாவர். வேறு பல பாவிகளையும் நீ ரட்சித்திருக்கிறாய். ஆனால் அதை யாரால் எண்ண முடியும்? அறிந்தோ, அறியாமலோ உனது நாமத்தைக் கூறுவதால் யமதாமராஜனின் நரகலோகத்திற்குச் செல்லவேண்டிய அவசியமற்றுப் போகிறது. இந்தத் துளசிதாசன் உன்னிடம் சரணடைந்திருக்கிறேன். என்னையும் உன் சரணங்களில் வைத்துக்கொள்வாயாக.

## 161

ஹே பிரபோ! உன்னைப் போன்ற தலைவர் வேறு யாராவது இருப்பாரேயானால், பெரும் அவமானத்தைச் சகித்துக்கொண்டு இரவும் பகலும் உன்னுடைய நாமத்தையே யாராவது ஜபித்துக் கொண்டிருப்பார்களா? சத்தியமாகச் சொல்கிறேன் நான் உன்னிடம் கருணை யென்னும் அமுதத்தைக் கேட்பதில் களங்கமில்லை. எனது மனமென்னும் சாதகப்பறவையானது சிநேக ரூபச் சுவாதி நட்சத்திரத்தின் ஆனந்தமென்னும் நீரை விரும்புகிறது. காலம் மற்றும் வினைப் பயனால் எப்போதாவது எனது

மனதில் தீய நினைவுகள் தோன்றுகின்றன. மீன் சந்தோஷத்துடன் குதித்துக் குதித்து நீரைவிட்டு வெளி வந்தவுடன் பயந்து மீண்டும் நீருக்குள் சென்றுவிடுவது போன்ற நிலை இருக்கிறது. துளசிதாசரின் மனதில் இருக்கும் கபடத்தைப்பற்றி யாரால் முழுமையாகக் கூற முடியும்? ஹே தசரத மகாராஜனின் செல்வ மகனே! உனது ராஜ்யத்தில் உழுது பயிரிடாமலே அறுவடை செய்திருக்கிறார்கள்.

## 162

தனக்குச் சேவை செய்யாத ஏழைகளுக்கும் கருணை காட்டும் தயாளர் இவ்வுலகில் யார் இருக்கிறார்கள்? ஸ்ரீராமா! தான் இருக்கிறாய் நீ உன்னை ஒத்தவர் வேறு யாருமில்லை.

ஹே பிரபோ! எக்கதியை முனிவர்களும் ஞானி களும் யோகம், தவம் முதலான முயற்சிகளாலும் அடைய முடியவில்லையோ, அக்கதியை நீ, கழுகு, சபரி முதலா னோருக்கு அளித்த பின்பும் அவர்களுக்கு ஒன்றும் செய்ய வில்லையே என்றுதான் நினைத்தாய். பெரும் உதவியை அளித்துவிட்டதாக உன் மனதில் நினைக்கவில்லை. பெரும் பொருளை அளிப்பதாகவும் உணரவில்லை * ராவணன் தனது பத்துத் தலைகளையும் அர்ப்பணித்த பின்னர் எந்தச் செல்வத்தை சிவபெருமானிடம் அடைந்தாரோ,

* ஒரு முறை கைலாசப் பர்வதத்தில் ராவணன் கடுந்தவம் செய்துகொண்டிருந்தான். இறுதியில் தனது தலைகளை ஒவ்வொன்றாக வெட்டி அக்னியில் எறிந்தான். தனது பத்தாவது தலையையும் வெட்ட முயன்றபோது சிவபெருமான் காட்சியளித்து வரத்தைக் கேட்கும்படி கூற, ராவணன் இலங்கை ராஜ்யத்தைக் கேட்டான். சிவபெருமானும் அதை அவனுக்கு அருளியதால் இலங்கை ராஜ்யம் அவனுக்குக் கிடைத்தது.

அந்தச் செல்வத்தையே நீ விபீடணனுக்கு கொடுப்பது மிகக் குறைவு என்ற எண்ணத்தினால் ஏற்பட்ட மிகுந்த சங்கோஜத்துடன் அளித்தாய்.

துளசிதாசனின் மனமே! எல்லா வகையிலும் எல்லா சுகத்தையும் அடைய விரும்புவதாக இருந்தால், நீ, ஸ்ரீராம பஜனையைச் செய்வாயாக! அப்போது கருணைக் கடலான ஸ்ரீராமா உனது எல்லாக் காரியங்களையும் முடித்துவைப்பார்.

## 163

ஹே ஸ்ரீராமா! நீயே உண்மையான வள்ளல்களில் மணிமகுடம். ஒருமுறை உன்னிடம் யாசகம் கேட்டவர்கள் அதே தேவைக்காக மீண்டும் மீண்டும் ஆடிப்பாட வேண்டிய நிலையின்றி தேவையைப் பூர்த்தி செய்து விடுகிறாய். அசுரர், தேவர், மானிடர், முனிவர் யாவரும் சுயநலமுடையவர்களே. பிரதி உபகாரமின்றி எதையும் செய்ய மாட்டார்கள் ஆனால் ஹே கோசலபதி! நீ மட்டுமே ஒருமுறை வணங்கியவுடனேயே தயை புரியும் தயாளக் கற்பகவிருட்சமாவாய். நீ உனது மற்ற அவதாரங்களிலும் வேதத்தின் பெருமையைக் காப்பாற்றி இருக்கிறாய். அதாவது கிருஷ்ணாவதாரத்தில், இளம்பிராய நட்பு இருந்த போதிலும் சுதாமாவிடம் அவலைப் பெற்றுக்கொண்ட பின்பே சுகசம்பத்துக்களை அளித்தாய். ஆனால் ராமாவதாரத்தில் வானரம், சபரி, சுக்ரீவன், விபீடணன் முதலானோரில் அவர்களிடமிருந்து ஒன்றும் பெறாமலேயே யாருடைய விருப்பத்தைத்தான் நீ பூர்த்தி செய்யவில்லை?

ஹே தயாநிதியே! துளசிதாசனாகிய எனக்கு ஆசை என்னும் பயங்கர பிசாசு துன்பத்தை அளித்துக் கொண்

டிருக்கிறது. (எனவே எனது துன்பத்தைப் போக்கி, உனது தரிசனமளித்துக் கருணை செய்வாயாக!)

## 164

ஸ்ரீ ரகுநாதரே அன்பின் நியமநதை அறிந்தவ ராவார். ஸ்ரீராமா எல்லா பந்தங்களையும் விடுத்து அன்புச்கே முதலிடம் வைத்திருக்கிறார். தசரத மன்னன அன்பைப் பரிபாலிக்கும்போது உயிர் தியாகம் செய்து புகழை நிலைநாட்டினார். இப்படிப்பட்ட அன்பு நிறைந்த தந்தைக்கும் மேலாக கழுகிடம் (ஜடாயு) ஸ்ரீராமா அன்பு காட்டினார். (தசரதரின் மரணத்தின் போது ஸ்ரீராமா அருகில் இல்லை. ஆனால ஜடாயுவின உயிர் ஸ்ரீராமரின் மடியில் இருக்கும்போது பிரிந்தது. உடனே ஸ்ரீராமரும் அவரது ஈமச் சடங்குகளைச் செய்தார்.)

மனைவியைப் பிரிந்த துயரத்தில் வருந்திக் கொண் டிருந்த நண்பன சுக்ரீவனைக் கண்டதும் தன் பிரிய நாயகி ஜானகி தேவியை மறந்துவிட்டார். (ஜானகி தேவியைத் தேடுவதை மறந்து வாலியைக் கொன்று சுக்ரீவனின் துயரத்தைத் தீர்த்தார்.)

யுத்தகளத்தில் லட்சுமணன மூர்ச்சித்து இருந்தபோது கூட லட்சுமணன பிழைக்கவில்லையானால் ராவணனிடம் சண்டை செய்து என் செய்வேன? வானரங்களும் கரடி களும் தங்கள் தங்கள் வீட்டிற்குச் சென்றுவிடும், ஆனால விபீஷணன் என்ன செய்வானோ? என்று - விபீஷணனைப் பற்றிய நினைவே அவர் மனதில் நிறைந்து இருந்தது.

வீட்டில, குருகுலத்தில், மகாஜனங்களிடம மற்றும மாமனார் வீடு ஆகச சென்ற இடங்களில் எல்லாம சபரி

யின் இலந்தைப் பழத்தைப் போல் ருசியுள்ள பழம் வேறெங்கும் கிடைக்கவில்லை என்று பிரஸ்தாபித்தார். முனிவர்கள் அவருடைய அழகை வர்ணிக்கும்போது சங்கோசத்துடன் தலையைத் தாழ்த்திக்கொள்வார். ஆனால் படகோட்டியின் நண்பன், வானரங்களின் உறவினன் என்று கூறும்போது பெருமையுடன் ஆனந்த மடைவார்.

ஹே சகோதரனே! மூவுலகிலும் முக்காலங்களிலும் ஸ்ரீராமரைப் போன்று அன்பினால் பரவசமாகும் தலைவர் வேறு யாருமில்லை. அனுமாரிடம் "நான் உனக்குக் கடமைப்பட்டவன்" என்று கூறி இருக்கிறார். இவ்வாறு சேவையை வேறு யார் ஏற்றுக்கொள்வார்கள்?

துளசி! ஸ்ரீராமரின் அன்பையும் பண்பையும் பார்த்த பின்பும் உன் இதயத்தில் அவரிடம் பக்தி ஏற்படவில்லை என்றால் உனது தாயார் வீணாக உன்னைப் பெற்றெடுத்து அவரது இளமைப் பருவத்தை இழந்திருக்கிறார் என்றுதான் கூறவேண்டும்?

## 165

ஹே ரகுநாதா! நீ தனவந்தர்களை விடுத்து ஏழைகளையே ஆதரித்து அவர்களிடம் கருணை காட்டுகிறாய் என்பதே உனக்குப் பெருமையாகும். தேவர்கள் எல்லா உபாயங்களையும் செய்து செய்து சலித்துவிட்டார்கள். ஆயினும் அவர்களுக்கு நீ காட்சி அளிக்கவில்லை. ஆனால் படகோட்டி, கரடி, குரங்கு மற்றும் ராட்சதன் விபீடணன்) முதலானோர்களை சொந்தச் சகோதரர்களைப்போல பாவித்தாய். தண்டகாருண்ய வனத்தில் முனிவர்களுடன் சுற்றினாய். ஆனால் அவர்களைப் பற்றி

பேசவும் இல்லை. ஆனால் கழுகு மற்றும் சபரியின் அன்பைப் பற்றி மீண்டும் மீண்டும் வாணித்திருக்கிறாய். நாய் கூறியதற்காக முனிவரை—தீர்த்த சித்தனென்னும் பிராமணனை—யானையின் மீதமர்த்தி ஊரைச் சுற்றி வரச் செய்து வெளியேற்றினாய். ஆனால் ஜானகி தேவியைக் குறை கூறிய வண்ணானை மட்டும் உனது குடிமகனாக வாழவிட்டாய். உனது தாயாரில் ஏழைகளை ஆதரிப்பதென்பது முறையாக நடந்துகொண்டிருக்கிறது. ஆனால் ஹே தீனதயாளு! இந்த அளசிதாசரைப் பற்றி இதுவரை யாரும் உன்னிடம் ஞாபகப்படுத்தவில்லையோ?

## 166

ஏழைகளைப்பாளனான ஸ்ரீராமா! நீ அளவற்ற மிருதுவான சுபாவத்தைக் கொண்டவன், கருணையின் இருப்பிடம், காரணம் ஏதுமின்றியே பரோபகாரம் செய்பவன். கௌதமரின் மனைவியான அகலிகை தன் பாபத்தின் காரணமாக வேறு உபாயமின்றித் திகைத்துக் கல்லானாள். நீயே அங்கு சென்று உனது பவித்ரமான கால்களால் தீண்டிப் பாபவிமோசனம் செய்வித்தாய். கொடிய சரீரம் கொண்ட நிஷாதன் இமசை செய்வதில் ஈடுபட்டு, மிருகத்தைப் போன்று வனத்தில் சுற்றிக் கொண்டிருந்தான். ஆனால் நீ ஜாதிபேதம் பாராமல் பெரும் அன்புடன் அவனைத் தழுவிக் கொண்டாய். இந்திரனின் புத்திரன் ஜயந்தன் உனக்குச் செய்த துரோகத்தைச் சொல்லி முடியாது. ஆயினும் அவன் எல்லா லோகங்களுக்கும் சென்ற பின்பும் எங்கும் அபயம் கிடைக்காததால் பயத்துடன் உன்னிடம் சரணடைந்த போது அவனது பயத்தைப் போக்கினாய். மாமிச உணவை விரும்பும் பறவை இனமான கழுகு மட்டும் எந்த

உயர்ந்த விரதத்தைச் செய்துவிட்டது என்று அதற்கு உனது கைகளாலேயே தந்தைக்குச் செய்வது போன்று இறுதிச் சடங்குகளைச் செய்தாய். தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்த சபரி முட்டாளாக, வேதங்களுக்கு அப்பாற் பட்டவளாக இருந்தாள். ஆயினும் ஹே கருணாநிதி! ரகுநாதரே! நீ அவளுடைய பக்தியை புரிந்து கொண்டு காட்சி அளித்து முக்திப்பேறு செய்தாய். தனது தம்பி வாலியிடம் கொண்ட பயத்தால் மனங்கலங்கிய நிலையில் உன்னிடம் சரணடைந்த உனது பக்தன் வானரச் சுக்ரீவனுடைய எல்லையற்ற துன்பத்தைக் கண்டு சகிக் காமல் நிந்தனையையும் சகித்துக் கொண்டு வாலிவதம் செய்தாய்? பகைவனின் (ராவணனின்) தம்பியான அரக்கன் விபீடணன் எந்த பூஜனையின் அதிகாரியாக இருந்தானென்று அவன் சரணடைந்ததுமே நீயே முன் சென்று கைகளை விரித்து வரவேற்றாய்? தோஷங்கள் நிறைந்த குரங்கையும் கரடியையும் நினைப்பதே அமங்கல மாகும். ஆனால் யாவரையும் நீ புனிதமாக்கி விட்டாய். இதற்கு வேதங்களே சாட்சியாகும். ஹே தலைவனே! இது உன்னுடைய மகிமையே ஆகும். நீ திகழ்ற்றவா களின் விபத்துக்களை போக்கி இருப்பதை எவ்வாறு கூறுவேன்? அவை அளவற்றவை. கலிகாலத்தின் பாபங் களால் பீடிக்கப்பட்டுள்ள இந்தத் துளசிதாசனாகிய என் மீது மட்டும் ஏன் கருணை காட்ட மறந்துவிட்டாய்?

## 167

ரகுபதியிடம் பக்தி செய்வது மிககடினம். சொல்வது எளிது. ஆனால் செய்வது கடினம். யார் பக்தி செய்வதில் ஈடுபட்டிருக்கிறார்களோ அவர்கள்தான் இதை அறிய முடியும். யார் எந்தக் கலையில் சிறந்தவர்களாக இருக் கிறார்களோ, அவர்களுக்கு அது சுலபமாக இருக்கும்,

சுகத்தையும் அளிக்கும். பாருங்களேன், கங்கையின் நீரோட்டத்தை எதிர்த்து மீன் செல்ல முடிகிறது, ஆனால் இவ்வளவு பெரிய யானை அதில் அடித்துச் செல்லப்படுகிறது. மணலில் கலந்த சர்க்கரையை எவ்வளவு முயற்சித்தாலும் தனியாகப் பிரிக்க இயலாது. ஆனால் அதன் ருசி அறிந்த சிறிய எறும்பு சிரமமேதுமின்றி அதைப் பிரித்துவிடுகிறது. அதே போன்று எந்த யோகி கண்ணில் தெரியும் உலகைத் தன் மனத்தினுள் அடக்கி நித்திரையைத் தியாகம் செய்து தூங்குகிறானோ, அவனே ஹரி சரணங்களில் சுகத்தை அனுபவிக்கிறான். அவனுக்கு இடமோ, காலமோ, இன்பமோ, துன்பமோ, பயமோ, மோசமோ, இரவோ, பகலோ எதுவுமில்லை. துளசி! இத்தகைய நிலை ஏற்படாதவரையிலும் சந்தேகத்தை நிர்மூலமாக்க இயலாது என்பதை உணர்ந்துகொள்வாயாக!

## 168

ஸ்ரீராமரின் பாதங்களில் அன்பிருந்திருந்தால் மூன்று தாபங்களின் துக்கத்தை இரவும் பகலும் ஏன் சகித்துக் கொண்டிருக்கிறேன்? இரவிலோ, பகலிலோ அல்லது கனவிலாவது சுகமென்ற அமுதம் கிடைத்திருந்தால் இந்த மனமென்னும் மான் கானல் நீரான சிற்றின்பத்தை நோக்கி ஏன் ஓடப்போகிறது? நாம் லட்சுமிநாராயணனின் மகிமையை மனத்திலிருத்தி அன்பைப் பெருக்கி அவரையே பூஜித்தால் நாயைப்போன்று வயிற்றைப் புடைத்துக் கொண்டு வீடு வீடாகச் செல்ல வேண்டியிருக்குமா? யார் அளவற்ற பேராசையால் ஆசைக்கு அடிமையாகி விடுகிறார்களோ அவர்களெல்லாம் மற்றவர்களின் அடிமையாவர். ஆனால் பிரபுவிடம் விசுவாசம் கொண்டு ஆசையை வென்றவர்களே பகவானின் பக்தர்களாவர்.

பஜனை செய்வதற்கு வேண்டிய நடத்தையும் என்னில் இல்லை. எனவே, ஹே தலைவனே! உன் பெயருக்காக வாவது இந்தத் துளசிதாசனாகிய என் மீது கருணை காட்டுவாயாக என்று வேண்டுகிறேன்.

## 169

எனக்கு ஸ்ரீ ராமா சுவையாகத் தோன்றுவாரானால் நவரசங்களும் அறுசுவை உணவும் சுவையற்றதாகத் தான் தெரியும். ஐம்புலன்களும் வஞ்சனையானவை என்பதை பலவித சரீரங்களை அடைந்த அனுபவத் தாலும் மற்றவர்களால் கூறக் கேட்டும் என் கண்களாலும் கண்டு கொண்டேன். இதை நான் நன்கு அறிந்திருந்த போதிலும் கனவிலகூட என் மனம் திருப்தியடைய வில்லை, சலிப்படையவுமில்லை. கருணையின் இருப்பிட மான ஸ்ரீ ராமா! உனது பெயரின் கௌரவத்திற்காக நீ யாருக்குத்தான் கருணை காட்டவில்லை என்று ஒரே மூச்சில் துளசிதாசனாகிய நான் எனது சுவாமியிடம் அதிகப் பிரசங்கித்தனமாக கூறிவிட்டேன்.

## 170

ஸ்ரீ ராமா! என் மனம் கபடமற்று, பேதமற்று இயற்கையாகச் சிறந்தப்பதில் ஈடுபட்டிருப்பதைப் போன்று எப்போதும் உன்னிடம் ஈடுபடவில்லை. எனது கண்கள் வேற்றுப் பெண்களைப் பார்த்தது போன்று சாதுக்களைப் பார்க்கவில்லை. காது மற்றவர்களின் பாபங்களையும் பிரச்சனைகளையும் கேட்டது போன்று கங்கைக் கரையை ஒத்த நிர்மலமான ஸ்ரீ ரகுநாதரின் புகழைக் கேட்கவில்லை. எந்த அளவுக்கு மூக்கு நறுமணத் தில் ஈடுபட்டிருக்கிறதோ அந்த அளவுக்கு இறைவனின்

மீது போடப்பட்டிருக்கும் மாலையின நறுமணத்தை நுகர அலையவில்லை. நாக்கு அறுசுவையில் வைத்திருக்கும் அபிமானத்தை இறைவனின பிரசாதத்தின மீது வைத்திருக்கவில்லை இந்த இழிந்த சரீரமும் சந்தனத்தை சந்திரவதனப பெணகளை, ஆடை ஆபரணங்களை அணிய விரும்புவதைப போனறு பகவானின பாதார விந்தங்களைத் தொடுவதறகு ஏஙகவில்லை. மனம, வாககு, காயததால நான துாதேவதைகளுககும தீய தலைவாகளுக்கும் சேவை செய்திருப்பதைப் போனறு, ஒரு முறை வணங்கினாலே நன்றியோடு தான் உபகாரம ஒனறும செய்யவிலலையே எனறு சங்கோஜததுககுள ளாகும ஸ்ரீராமசந்திரருக்கு செயயவிலலை. பேராசையில மூழ்கி, உலகில வீடு வீடாக இந்தக் கால்கள நிலையற்றுத திரிவதுபோனறு, ஏ அபாககியசாலி! ஜானகிராமருடைய ஆசிரமத்திறகுச சென்று களைபபடையவில்லை. ஹே தலைவனே! எனது அங்கம யாவும் உன்னுடைய திருவடி களிடம விரோதித்துக கொணடிருக்கிறது எனது வாயினால மட்டுமே உனது நாமததில புகலிடம பெறறிருக்கிறேன். ஏனெனில பிரபுவின மூர்த்தி கருணை மயமானது எனபதில துளசிதாசனாகிய எனககு நமபிக்கை இருக்கிறது.

## 171

தலைவனே! எனனை யமலோகததிலேயே தள்ளி விடுவாயாக! ஏனெனில ஹே ராமா! உன்னைப் போன்ற பவித்ரமான, பிறர இனபதுனபஙகளை உணருகிற சுவாமியிடம் பிடிவாதமாக முதுகைக காட்டிககொணடிருக்கும (உனனிடம் விரோதிததுக்கொணடிருக்கும) மூடன நான. காபபததில இருநத பத்து மாதங்களும நீ எனனைக காபபாறறி எனது தாய தநதையின ரூபத்தில எனனைப

பிறக்க வைத்தாய். இந்த மூடனுக்கு அறிவு தந்தாய். இந்தத் துஷ்டனுக்கு நல்ல பண்புகளை அளித்தாய். இந்தக் குற்றவாளிக்கு ஆதரவளித்தாய்! ஆயினும் இதயத்துக்குள் இருக்கிற பிரபுவிடம்கூட நான் வஞ்சனை செய்கிறேன். எங்கும் நிறைந்திருக்கும் சுவாமியிடமே எனது பாபங்களை மறைக்கிறேன். ஆனால் ஹே ரகுநாதா! இப்படிப்பட்ட கெட்ட சேவகனின்மீது உன் மனம் இன்னமும் விரோதம் கொள்ளவில்லை. உன்னுடைய தாசனென்று கூறிக்கொண்டு வயிற்றை நிரப்புகிறேன். ஆனால் உள்ளத்தை சிற்றின்ப உணர்ச்சியிடம் விற்று விட்டேன். ஹே தயாளனே! என்னைப்போன்ற மோசக்காரனுக்கும் கூடமின்றி நீ அன்பு காட்டுகிறாய். உனது ஒவ்வொரு க்ஷணநேர உபகாரங்களைப் பற்றியும் நன்கு கேட்டு அறிந்து புரிந்த பின்பும் எனது இந்தச் கல்நெஞ்சில் ஸ்ரீசீதாநாதரின் அன்பு நுழையவில்லை. ஹே சுவாமி! எனது புத்தியெனும் தராசில் ஒரு பக்கம் உனது பக்த வத்சலத்தையும் மறு பக்கம் எனது சுவாமி துரோகத்தைச் சிறுதளவு வைத்து நிறுத்துப்பார்த்தால் எனது பக்கத் தட்டே தாழ்ந்திருக்கும். இவ்வளவிற்குப் பின்பும் ஹே தலைவனே! நீ என்னைக் காப்பாற்றி வந்தாய், காப்பாற்றி வருகிறாய், காப்பாற்றி வருவாய் என்றும் நம்புகிறேன். நன்றி! எனது விருப்பங்களை ஸ்ரீராமரே பூர்த்தி செய்வாய் என்பதை துளசிதாசனாகிய நான் அறிவேன்.

## 172

எப்பொழுதும் இந்த ரீதியிலேயே இருப்பேனா? எப்பொழுதாவது கிருபாலு ஸ்ரீரகுநாதரின் சிருபையால் சாதுக்களின் சுபாவத்தை அடைவேனோ? நான் அடைந்தவற்றோடு சந்தோஷமடைவேனா? யாரிடமும்

எதையும் கேட்கமாட்டேனா? எப்பொழுதும் மறறவர் களின் நலத்தில் ஈடுபட்டு மனம, வாக்கு, காயததால் கட்டுப்பாட்டினைக் கடைப்பிடிப்பேனா? எல்லையற்ற துன்பம் நிறைந்த கொடூர வார்த்தைகளை எனது காதால் கேட்டு அந்த வெப்பத்தில் எரியமாட்டேனா? புகழாசை இன்றி மனத்தை ஒருநிலைப்படுத்தி வைத்திருப்பேனா? மறறவர்களின் குணதோஷங்களைப் பற்றி சர்ச்சை செய்யமாட்டேனா? உடன் பிறந்த சிந்தனைகளை விடுத்துச் சுகதுக்கங்களைச் சமமாகப் பாவிப்பேனா? ஹே பிரபோ! என்ன, இந்த துளசிதாச னாகிய நான் இப் பாதையில் சென்று நீங்காத பகவானின் பக்தியை அடைவேனோ?

## 173

என் மனதில் வேறு யாரிடத்திலும் நம்பிக்கை ஏற்படுவதே இல்லை. இக் கலிகாலததில் எல்லாச் சாதனை களெனனும் மரங்களிலும் உழைப்பெனும் பழங்கள் நிறைந்திருக்கின்றன. தவம், தீர்த்தாடனம், உபவாசம், தானம, யக்ஞம, இவற்றில் யாருக்கு எது சிறந்ததாகத் தோனறுகிறதோ அதைச் செய்யட்டும்! வேதங்கள் வெறுமனே நிறைய கூறியிருக்கின்றன. கலிகாலத்தின் வலிமையால் தவம், தீர்த்தாடனம் முதலிய சாதனங் களில் குறை ஏற்பட்டுவிட்டிருக்கிறது. ஆனால் அதன் பலனை அடைந்த பிறகே அதன் பலன்களின் மகிமை குறைந்து விட்டிருக்கிறது என்பதை அறிவாா. அதிகச் சிரமப்பட்டுச் சாதனை செய்ய வேண்டியிருக்கிறது. ஆனால் அதில் குறை ஏற்பட்டுவிடுவதால் கூலி குறை வாகவே கிடைக்கிறது. சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கும் மானிடா தவம், யக்ஞம் ஆகியவற்றைச் செய்கின்றனா. ஆனால் அதனால் எண்ணம் ஈடேறுவதில்லை. யோகச்

சித்திகளால் கனவிலும் சுகம் கிடைக்காது. அதில் நோய்நொடிகள் காணப்படுகின்றன. காமம், கோபம், காவம், பேராசை மற்றும் அறியாமை கலந்து ஞான வைராக்கியத்தை தோற்கச் செய்து விட்டிருக்கிறது. சன்யாசம் பெறுவதால், பச்சை மண்பானையின்மீது நீர் ஊற்றினால் கெடுவது போன்று, மனமும் கெட்டு விடுகிறது. புராணங்களில் முனிவர்களுடைய பல அபிப்ராயங்களும் நெறிமுறைகளும் கூறப்பட்டிருக் கின்றன. அதில் ஆங்காங்கு தகராறுகள்தான் தெரிகின்றன. எனது குரு, ஸ்ரீராமரின் பஜனையைச் செய்வது நலமது என்று கூறி இருக்கிறார். எனக்கும் அதுவே ராஜபாட்டையாகத் தெரிகிறது. துளசி! விசுவாசமும் அன்புமின்றி மீண்டும் மீண்டும் அந்த சாதனங்களிலே ஈடுபட்டுச் சாகிறவர் சாகட்டும்! ஆனால் பிறவிப் பெருங்கடலைக் கடப்பதற்கு ராமநாமம் கப்பலைப் போன்றது. யார் கடலைக் கடக்க விரும்பு கிறார்களோ அவர்கள் அதில் ஏறிக் கடக்கட்டும்!

சன்யாச மார்க்கம் கூரிய கத்திமுனையைப் போன்றது, அதன்மீது ஜாக்கிரதையாக நடக்க வேண்டும். கொஞ்சம் தவறினாலும் புகலிடம் கிடைக்காது. இதனால் ஐம்புலன்களையும் அடக்க முடியாதவர் சன்யாசத்தைப் பெறுவது லாபமானதல்ல மாறாக தீமையையே தரும்.

## 174

ஸ்ரீஜானகிராமரிடம் அன்பில்லாதவர்கள் உற்ற நண்பர்களாயிருப்பினும் அவர்களைக் கோடிக்கணக்கான பகைவரைப் போன்று பாவித்து, அவர்களது நட்பை விட்டுவிட வேண்டும். பிரகலாதன் தனது தந்தையையும்

விபீடணன தனது சகோதரன் இராவணனையும் பரதன் தனது தாயையும் பலியரசன தனது குருவான சுகராசாரியாரையும்* கோபியாகள தஙகள தங்சள கணவனமார்களையும தியாகம செய்துவிட்டனா. ஆயினும அவர்கள யாவரும் மங்களகரமானவாகள என்றே உலகில கருதப படுகிறாாகள. அனபுள்ளம் கொண்டவர்கள மறறும் பூஜிக்கத்தககவா யாவரும, அவர்கள ஸ்ரீராமரிடம் கொண்டுள்ள அன்பினாலேயே அவர்களிடம நடபு கொள்ளபபடுகிறது. இமைகளே கண்களை அழிப்பதாயிருந்தால் நான் வேறெனன கூற முடியும? துளசி! ஸ்ரீராமருடைய சரணங்களில அனபு கொண்டவரே எல்லாவகையிலும நனமை தருபவராகவும் பூஜிக்கத்தக்கவராகவும் உயிரினும் மேலானவராகவும இருக்கக் கூடும.

## 175

யாருக்கு ஸ்ரீராமரிடம அனபிலலையோ அவாகள இவவுலகில கழுதை, நாய மற்றும பனறியைப போனறு வீணாக வாழ்கிறார்கள. காமம, கோபம, காவம, பேராசை, தூக்கம், பயம, பசி தாகம் யாவும எலலோருககும பொதுவானதே. ஆனால தேவாகளும சாதுககளும மானிட சரீரததைப பெருமையாக பேசுவதறகுக காரணம் அவர்கள ஜானகிநாதரிடம் அனபு கொண்டிருபபதே ஆகும். ஒருவர் எவவளவுதான வீரராகவும்

---

* பலியரசனிடம் பகவான் வாமன அவதாரத்தில மூனறடி மண் கேட்டபோது ''இதில ஏதோ சூது இருக்கிறது. தானம் அளிக்க வேண்டாம்'' என்று தனது குரு சுக்ராசாரியார் கூறியபோதும் பலியரசன் கேட்காமல் தானமளித்தான பகவான் ஆகாயத்தை ஓரடியிலும், பூமியை ஓரடியிலும் அளந்துவிட்டு மூன்றாவது அடியில், பலியின் தலைமீது கால வைத்துப் பாதாளத்தை அளந்தார்.

சமர்த்தராகவும் நற்புகழ்வராகவும் நற்குணசாலியாகவும் கம்பீரமுடையவராகவும் இருந்தபோதிலும் பகவானிடம் பக்தியில்லை என்றால் எட்டிப் பழத்தைப் போன்றவரே ஆவார். துளசி! ஒருவர் புகழுடையவராகவும் நற்குலமுடையவராகவும் நற்தொழிலுடையவராகவும் செல்வமுடையவராகவும் நவ்லொழுக்கமுடையவராகவும் அழகிய உருவமுடையவராகவும் இருந்தபோதிலும் பிரபுவிடம் பற்றுக்கொண்டில்லை என்றால் உபயற்ற பதார்த்தமும் குழம்பும் போன்றவரே என்பதை அறிந்து கொள்வாயாக!

## 176

ஏ மூடனே! நீ ஸ்ரீராமரைப் போன்ற சுவாமியிடம் கூட அன்போ உறவோ கொள்ளவில்லை. நீ இவ்வளவு அவமதிப்பைச் செய்த பின்பும் அவர் உன்னைக் கைவிடவில்லை. நீ உடலினை எரித்து, உயிரினை அழிக்கக் கூடிய புதிய புதிய பிரயோஜனமற்ற உறவுகளையும், நட்புகளையும் ஏற்படுத்திக்கொண்டிருக்கிறாய். தனது நலன் மற்றும் தன்னுடைய உறவுகளின் நன்மையையே எல்லோரும் விரும்புகிறார்கள். ஆனால் இருவருக்கும் நன்மையைச் செய்பவர் தயாள குணமுடைய ஜானகிநாதரே ஆவார். ஜீவன்களில் ஜீவனாகவும் சுகங்களின் சுகமாகவும் இருக்கிற ஸ்ரீராமசந்திரரை நீ மறந்துவிட்டாய். அவர் உன்னைப் போன்ற கொடியவனுக்கும் நன்மை செய்திருக்கிறார், எதிர்காலத்திலும் செய்வார். இப்படிப்பட்ட நல்ல சுவாமியிடம் நீ ஏன் விஷமம் செய்துகொண்டிருக்கிறாய். துளசி! இப்பொழுது புரிந்துகொண்டால்கூட உனக்கு நன்மை ஏற்பட்டுவிடும். ஏனெனில் சண்டையிலிருந்து புறங்கண்ட கோழைகூட மீண்டும் வந்து சண்டையிட்டால் வீரனாகி விடுகிறான்.

## 177

ஹே ராமா! நீ என்னை விட்டுவிட்டாலும் நான் உன்னை விடப்போவதில்லை. ஏனென்றால், உன் திருவடிகளை விடுத்து வேறு யாரிடம் நான் அன்பு காட்டுவேன். உலகில் உன்னைப் போன்று சுகமளிக்கும் நல்ல சுவாமியை பற்றி நான் காதால் கேட்டதுமில்லை, கண்ணால் கண்டதுமில்லை, மனதால் கற்பனை செய்யவும்கூட முடியவில்லை. ஹே ரகுநாதா! நான் மூடன், நீ ஈஸ்வரன்; நீ மாயையின் தலைவன், நான் மாயையின் அடிமை, நான் துச்சமான யாசகத்தைச் செய்பவன், நீ நல்ல சொடை வள்ளல். நான் உனது துஷ்டபுத்தி வன, நீயோ என்னைக் காப்பாற்றும் தாயும் தந்தையும் போன்றவன். இந்தத் துளசிதாசனை யாராவது கேட்பதாக இருந்தால் இங்கு விலையேதுமின்றியே அவர்களிடம் விற்கப்பட்டுவிடுவேன. (ஆனால் உன்னைத் தவிர இந்த நீசனை வேறு யார் வாங்குவார்கள்?) எனவே என்றும் நான் உன்னை விடமாட்டேன்.

## 178

ஹே ராமா! நீ என்னை அலட்சியப்படுத்தினாலும் எனக்கு உன் மீதே ஆசை இருக்கிறது. துன்பத்திலுள்ள சுயநல மனுஷன் வைத்தியக்காரனைப் போன்று பேசிக் கொண்டிருக்கிறான். மழையைப் பொழிந்து சாதகப் பறவைக்கு உயிர் அளிப்பதாக இருக்கும் மேகம் சாதகப் பறவையிடம் எதை எதிர்ப்பார்க்கிறது? மேகத்திடம் அன்பைக் காட்டுவதன் காரணமாகவே சாதகப்பறவை புகழப்படுகிறது. அதாவது பலன் ஏதும் எதிர்ப்பார்க்காமலே மேகமானது மழையைப் பொழிந்து சாதகப் பறவைக்கு உயிரளிக்கிறது. ஆனால் அப் பறவையின் அபூர்வ அன்பின் காரணமாக அப் பறவையே புகழப்படு

கிறது. மீனால் புனிதமான மறறும் ஜீவாதாரமான நீருக்குச் சிறிதளவும் லாபமில்லை. ஆனால மீனுக்கு நீரினை விடுதது உயிர் வாழ்வதற்கு வேறு ஸ்தலம் உண்டோ? அதாவது பரமாத்மாவுக்கு இநத ஜீவனால் பயனேதுமிலலை. ஆயினும இநத ஜீவன பரமாதமாவை விடுதது வேறு இடத்தில் புகலிடம பெறமுடியாது.

என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். பார! எபபொழுதும் பிரியமான பெரியோர்களின உதவியினா லேயே, பாதுகாபபினாலேயே காக்கப்படுகிறார்கள். எவ்வாறு ஆங்காங்கே நல்ல நாணயத்துடன் கெட்ட நாணயங்களும் செல்லுபடி ஆகிவிடுகின்றனவோ, அதே போன்று உனது தாபரில் நலலவா, தீயவர் யாவருக்கும் நன்மை ஏறபடடுவிடுகின்றது.

ஹே ராமா! சுகமளிக்கும் உனது நாமத்தின்மீது மடடுமே எனககு நம்பிக்கை இருக்கிறது. ஹே நாதா! இதைச் சொனனால காரியம கெட்டுவிடும். ஏனெனில் எனது குறைகள் யாவும் வெளியாகிவிடும. அதை மனத் திறகுயே வைததிருததல்தான் நலம். ஆயினும் ஹே கருணை மயமானவனே! நீ துளசிதாசனாகிய எனது மனநிலைபபதை அறிநதே இருக்கிறாய.

## 179

ஸ்ரீராமா! நான எங்குச் செல்வேன்? யாரிடம் முறை யிடுவேன்? ஏழையின பேச்சை யார் கேட்கிறார்கள்? மூவுலகங்களிலும் ஆதரவறறவாகளுக்கெலலாம் ஆதரவா னவன் நீயே! உலகில ஒவ்வொரு வீட்டிலும் நிறைய

கடவுள்கள் இருக்கிறார்கள். ஆயினும் யாரும் ஆதரிப்பவ ரில்லை. ஆதாரமற்றவர்களுக்கு உன்னுடைய குணங்களே ஆதாரமாக இருக்கின்றன. அதாவது ஆதரவற்றவர்கள் உன் புகழைப் பாடியே பிறவிப் பெருங்கடலைக் கடந்து விடுகிறார்கள்.

உன்னைத் தவிர கஜேந்திரனைக் காப்பாற்ற கருட வாகனமின்றி நடந்து வேறு யார் வந்தார்கள்? என்னைப் போன்ற குற்றவாளிகளையும் போஷிக்கும் உன்னைப் போன்ற புதல்வனை வேறு எந்தத் தாய் பெற்றிருக்கிறாள்! நீ, என்னைப் போன்ற குரூரமான, கோழையான அற்ப விலை உள்ள தீய புதல்வனையும் வெகு மதிப்புடைய வனாக்கிவிட்டாய்.

ஜடாயுவின் சிராத்தத்தைச் செய்தவனே! என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். என்னை மீட்பது உன் கையிலதான் இருக்கிறது, ஹே பிரபோ! கருணை காட்டு வதில் நீ தாமதம் செய்தால் அந்தத் தாமதம் என்ற தாய் தோஷம், துக்கம் போன்ற புதல்வர்களையே பெற்றெடுப் பாள். அதாவது, நீ சீக்கிரமாக என்மீது கருணை காட்ட வில்லை என்றால் துளசிதாசனாகிய நான், பாவம், துக்கம் ஆகியவற்றின் பிடியில் அகப்பட்டுவிடுவேன்.

## 180

என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன்! ஒரே ஒருமுறை என் பக்கம் பார்த்து என்னை உனதாக்கிக்கொள்வாயாக! ஹே தசரத மகாராஜனின் புத்திரனே! நீ சிதறிப் போனவர்களை எல்லாம் ஒன்று சேர்ப்பவன். சரணாகதி

யடைந்தவர்களைக் காப்பாற்றும் பலமுள்ள சுவாமி உன்னைத் தவிர வேறு யாருமில்லை. உன்னுடைய நாமத்தைக் கூறும்போதே களாதிலமும் செழிப்புள்ளதாகிவிடும். அதாவது, உன்னுடைய நாமத்தின் மகிமையால் மூடமனதிலும் பக்தி பொங்கி எழுந்துவிடும். உனது வாக்கும் செயலும் என் மனதில் பதிந்துவிட்டிருக்கிறது. உலகிலுள்ள பெரிய மனிதர்கள் அத்தனைபேரையும் நான் பார்த்தும் கேட்டும் புரிந்துமிருக்கிறேன். உன்னைத் தவிர கல்லினைக் (அகலிகை) கௌரவித்து சாந்தி அளித்தது யார்? அல்லது பரசுராமரைப் போன்ற முனிவரை இயலபாக ஜயித்தவர் வேறு யார் இருக்கிறார்கள்? மாதா, பிதா மற்றும் பந்துக்களின் நன்மைக்காக மக்கள் மற்றும் வேதத்தின் மரியாதையைக் காப்பாற்றியது யார்? தனது வார்த்தையை தவறாமல் காப்பாற்றி இருப்பவர் யார்? வணங்குபவர்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்பவர் யார்? அன்பினால் பாவிகளையும் துஷ்டர்களையும் சரணடையச் செய்யக் கூடியவர் யார்? கழுகு மற்றும் சபரியின் ஈமக் கடன்களை யார் செய்வார்கள்? ஆதரவற்றவர்களுக்கு ஆதரவாக, திக்கற்றவர்களுக்குத் தயைபுரிபவராக இருப்பவர் யார்? இதையெல்லாம் செய்யக்கூடியவர் பானரம், பட்கோட்டி, அசுரன், கரடி ஆகியவற்றின் ரணபன்ன ஸ்ரீராமரைத் தவிர வேறு யாருமில்லை. ஹே காரூஜனே எத்தனை ஏழைகளுக்கு, மூடர்களுக்கு புற்பாகளுக்கு நீ கருணை காட்டினாயோ அத்தனை பரும சாதுக்களின் சபையில் அமர்ந்திருக்கிறார்கள். வை யாவும உனது உண்மையான புகழாரங்களே குமு. சிறிதளவும் மிகைப்படுத்தப்படவில்லை. ஆயினும் ம நல்லொழுக்கத்தின் கடலே! துளசிதாசனாகிய எனது றை வருவதற்கு மட்டும் ஏன் இவ்வளவு தாமதம் கிறது?

## 181

ஹே கருணைக்கடலே! நீ எவ்வகையிலாவது என் பக்கம் பார்க்கவும். உன்னைத்தவிர எனக்கு வேறு இடம் ஏதுமில்லை. உனதொருவனுடைய உதவிமட்டுமே இருக்கிறது. என் புத்தி கல்லின் கடினத்தன்மையைவிட ஆயிர மடங்கு உணர்வற்றிருக்கிறது. நீ கல்லுக்கு (அகலிகைக்கு) அளித்த கதியைப்பற்றி நான் யாரிடம் கூறுவேன்? (உனது மேற்பார்வையில் யாகம் செய்த) விசுவாமித்திரரைப் போன்று நானும் உனது சரணங்களில் அன்பெனும் யக்ஞத்தைச் செய்ய விரும்புகிறேன். ஆனால் கலிகாலத்தின் பாபமெனும் துஷ்டர்களைக் கண்டு என் மனதில் இப்பொழுது பயம் சூழ்ந்து கொண்டிருக்கிறது. நான் காமம் என்ற பலசாலி வானர அரசனான வாலியைக் கண்டு பயந்து கொண்டிருக்கிறேன். அநாதைகளின் தலைவனே! உனது புஜங்களின் உதவியால் சுக்ரீவனைக் காப்பாற்றியதைப் போன்று என்னையும் காப்பாற்றுவாயாக! மகா அஞ்ஞானமெனும் ராவணன் என்னுடன் இருக்க நான் விபீடணனைப்போன்று இருக்கிறேன். ஹே துளசியின் சுவாமியே என்னைக் காப்பாற்றுவாயாக! நான் மூன்று தாபங்களாலும் அழுத்தப்பட்டிருக்கிறேன். என்னைக் காப்பாற்றுவாயாக!

## 182

ஹே தலைவனே! உனது புகழைக்கேட்டு என் மனதில் ஆனந்தம் பொங்குகிறது. ஆனால் ஹே ராமா! உன்னை மகிழவிக்கக்கூடிய பக்தி முறை எனக்குத் தெரியாது. காலமோ, இடமோ, எனக்கு அநுகூலமாக இல்லை. என்னிடம் நல்ல செயல்களில்லை. நல்ல சுபாவமில்லை, நல்ல தலைவனுமில்லை. என்னிடம் அழகிய செல்வ

யில்லை. நோயற்ற உடலில்லை. பவித்ரமான மனமில்லை. நீண்ட வாழ்நாளுமில்லை. நான் யாரிடத்தில் தண்ணீர் கேட்டாலும் முதலில் அமுதத்தைக் கொடு என்று கேட்கிறார்கள் இதனால் நான் யாரிடம் கூறுவது, யாரிடம் கேட்பது என்றே எனக்குப் புரியவில்லை.

ஹே பரமபிதாவே! என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். நீயே எனக்கு உபாயம் கூறவேண்டும். உனது கடைக்கண் நோக்கினாலேயே தோல்வியுற்றவர்களுக்கும் நல்ல சந்தர்ப்பம் ஏற்பட்டுவிடும். நீ காரணபிதாவால இந்தக் குருடனும் பார்க்கமுடியும். நீ புரிய வைத்தால் மூடனான நான் புரிந்துகொள்வேன். நீ எனக்குப் புரியவைத்து விடுவாயாக!

என்னைப் போன்ற திக்கற்ற மீனகளுக்கு உனது நாமமே ஜீவமாகும். தலைவனிடம் நான் பொய் கூறினால் எனது நாவு எரிந்து போகட்டும்' எல்லாவகையிலும் நான் கெட்டுவிட்டேன். ஆனால் அதிலிருந்து மீள ஒரே வழியாக துளசிதாசனாகிய நான், உயர்ந்த என் தலைவனிடம் என் நிலையைப்பற்றி எடுத்துக்கூறி விட்டேன்.

## 183

ஹே ராமா! நீ அன்பின் முறையை நன்கறிந்தவன் பெரியோர்களின் பெருந்தன்மையை உயர்த்தி அற்பர்களின் அற்பத் தன்மையைப் போக்குபவன் என்று கீர்த்தனைப் பாடல்களிலும் வேதங்களிலும் கூறப்பட்டிருக்கிறது. கழுகின் (ஜடாயு) சிராத்தத்தைச் செய்தாய சபரியின் பழத்தைத் தின்றாய் என்ற விஷயங்களும் சாதுக்களின் நடுவே நன்கு பேசப்படுகின்றன.

நீ யாருக்கு மரியாதை கொடுக்கிறாயோ அவர்கள் லோகத்திலுள்ளவர்களாலும் வேதங்களாலும் மரியாதை செய்யத் தக்கவர்களாகிவிடுகிறார்கள். உன்னுடைய மரியாதையைப் பெறுவது யோகம் மற்றும் ஞானத்தை விட அதிக பலமுள்ளது என்று கருதப்படுகிறது.

இந்தக் கொடிய கலிகாலத்திலும் கருணையுள்ள சுவாமியின் கருணையின் மகிமையைப் புரிந்துகொண்டு எனது உள்ளத்திலே வைத்திருக்கிறேன். துளசிதாசனாகிய நான் பிறருக்கு அடிமையாகிவிட்டால் எனது ஆனந்தம் யாவும் வெறுத்துப்போகும். அதனால் ஹே தீனபந்து! நான் உனது வாசலிலேயே பிடிவாதமாகச் சத்யாக்கிரகம் செய்துகொண்டிருக்கிறேன்.

## 184

ராம நாமத்தை ஜபிப்பதால் உள்ளத்தின் எரிச்சல் தணிந்துவிடும். இக் கலிகாலத்திலுள்ள மற்ற உபாயங்களெல்லாம்,* இருளைப் போக்கச் சித்திர சூரியனைப்

* நீதிக் கதையில் கூறப்பட்டுள்ளதாவது ஒரு மரத்தில் நிறைய கொக்குகள் வசித்துவந்தன அம் மரத்திலிருந்த பொந்தில் வசித்துவந்த பாம்பு தினமும் இரண்டு மூன்று கொக்குகளைத் தின்றுவந்தது இதைத் தவிர்ப்பதற்காகக் கொக்குகள் சேர்ந்து ஒரு உபாயம் செய்தன பாம்பின் பொந்திலிருந்து கீரிப்பிள்ளையின் இடம் வரையிலும் மீன்களைப் போட்டன கீரிப்பிள்ளையும் அம் மீன்களைத் தின்றுகொண்டே பாம்பின் பொந்து வரையிலும் வந்துவிட்டது பாம்புக்கும் கீரிப்பிள்ளைக்கும் நடந்த சண்டையில் பாம்பு மடிந்தது. பின்பு அந்த கீரிப்பிள்ளையும் அங்கிருந்த கொக்குகளை அழிக்க ஆரம்பித்தது பாம்போ தினமும் இரண்டு மூன்று கொக்குகளைத்தான் தின்று சந்தோஷித்துவந்தது ஆனால் கீரிப்பிள்ளையோ நொடியில் நிறைய கொக்குகளை அழித்துவிட்டது. இவ்வாறு உபாயம் செய்தால் கலிகாலத்தில் அபாயமே விளைகிறது எனவே கலிகாலத்தில் ராமநாமத்தைத் தவிர வேறு உபாயமில்லை

பயனபடுதது வ து போன் று உபயோகமறறதாகவே இருககிறது.

மரத்தில அழகாக மலர்நது மலாநது பின் உபயோக மறற காயாகக காய்ப்பதைப்போன்று கர்மங்கள யாவும் துககததிலும பாபத்திலும் மூழ்கி இருககினறன. அதாவது யக்ஞம், யோகம் ஆகியவறறைப பறறிக கேடபதறகும் பார்பபதறகும மிக இனிமையாகத் தோனறுகிறது. ஆனால அவற்றைச் செயவது மிகக கடினமாக இருக்கிறது. நடுவில ஏதேனும் இடையூறு ஏற்பட்டுவிட்டால கடின உழைபபு வீணாகிவிடுகிறது பொய, ஆடம்பரம், பேராசை யாவும் ஆராதனையின மதிப்பை அழிதது விட்டிருககினறன.

மோட்சததின சாதனமான ஞானம் வயிறறை நிரபபு வதறகான உபாயமாகிவிட்டிருககிறது. யோகமோ, சமாதி நிலையோ, ஞானமோ, வைராக்கியமோ இடையூறின்றி இலலை. எலலாம் வாயவீச்சாக இருககிறதேயொழிய செயலில் ஒனறுமிலலை. எலலோரும் அவரவர்களின நடததையையே புகழநது கொணடிருக்கிறாாகள்.

கங்கைக் கரையில புனித பூமியான காசியில் இறக்கும் தருவாயில் சிவபெருமான் ஜீவாகளுககு என்ன உபதேசம் செயகிறாா? அவா ராமநாமத்தின் மகிமையையே கூறுகிறாா. தானும ராமநாமததிலேயே புததியை செலுத்துகினறாா. ராமநாமத்துடனேயே அன்பு காட்டுதலும் ராமநாமததையே கதியெனறு நினைபபதுமே ஆபததுக்களை நீக்கும் சாதனமாகும். ராமநாமததில விசுவாசமும் அனபும கொணடிருந்தால என்றாவது ஒரு நாள் ஸ்ரீராமரது மனம் வழக்கமாக உருகிவிடும எனபதே துளசிதாசனாகிய எனது நமபிககையாகும்.

## 185

ஹே ஹரி! உனக்குப் பிடித்தமான நற்குணங்களை நான் முட்டாள்தனத்துடன் மறந்துவிட்ட போதிலும், என்னை உனது அடிமை என்று கூறிக்கொள்ள நான் கொஞ்சமும் வெட்கப்படவில்லை. எல்லாவற்றையும் தியாகம் செய்து ஜபம், தவம், யோகம் ஆகியவற்றைச் செய்து யாரை முனிவர்கள் பூஜித்துக்கொண்டிருக்கிறார்களோ அவரை என்னைப் போன்ற மூடன், துஷ்டன், நீசன் எவ்வாறு அடையமுடியும்?

பகவான் நிர்மலமானவர், எனது இதயமோ களங்கமடைந்து போராடிக்கொண்டிருக்கிறது. காகம், கழுகு, கொக்கு, பன்றி வசிக்கும் குளத்தில் அன்னம் எவ்வாறு வர முடியும்? என்று எனக்குத் தோன்றுகிறது. அதாவது எனது அழுக்கடைந்த இதயமென்ற குளத்தில காமம், குரோதம் போன்ற காகம், கழுகு, பன்றி முதலியன வசித்துக்கொண்டிருக்கும்போது ஸ்ரீராமரென்ற அன்னம் எவ்வாறு வசிக்க இயலும். யாரிடம் சரணடைந்து முனிவர்கள் தமது மூன்று தாபங்களையும் தணித்துக் கொள்கிறார்களோ அவரிடம் சென்ற பின்பும் என்னைக் காவம், மோகம், பேராசை துன்புறுத்திக்கொண் டிருக்கும். சுவர்க்கத்திலகூட அவை என்னைவிடாது கூடவே இருக்கும். சம்சாரமென்னும் நதியைக் கடக்கத் துறவிகள் தோணியைப் போன்றவர்கள் என்று நான் மற்றவர்களுக்கு எடுத்துக் கூறிக்கொண்டிருக்கிறேன். ஆனால் ஹே தலைவா! நான் அவர்களை விரோதித்துக் கொண்டு உன்னிடம் மங்கலத்தை வேண்டிக்கொண்டிருக்கிறேன். எனக்கு வேறு புகலிடம் இல்லை. எனவே லாயக்கற்றவன்தான் என்றாலும் பலாத்கார மாகவே உன்னுடன் உறவு கொண்டிருக்கிறேன்.

நான உன்னுடைய புகழைப பாடிக கொணடிருககிறேன. எனனை உன் சரணங்களில் வைத்துக்கொளவாயாக!

## 186

நான எவவகையில பிரார்த்தனை செயவேன? தலைவா! எனது நடத்தையைப பறறி சிந்திததாலே, இதயததில தோலவி அடைநததாக நினைத்துப் பயப படுகிறேன.

ஹே ஹரி! எநதச் சாதனைகளினால உனனுடைய தாசனெனறு நினைதது சந்தோஷமடைகிறாயோ அவறறை நான பிடிவாதமாக நீகசி விட்டிருக்கிறேன். எப பாதையில் அபாய வலை விரிக்கப்பட்டு இரவும் பகலும் துக்கமிருக்கிறதோ அப பாதையிலேயே நான சென்றுகொண்டிருக்கிறேன். மனம், வாக்கு, காயத்தால மற றவர்களுக்கு நன்மையைச் செய்தால பிறவிப பெருங கடலைக கடநதுவிடுவேன் எனபதை அறிநதிருந்தும் மற றவர்களின் சுகததைக் கணடு காரணமின்றியே பொறாமைபபட்டு எதிர்மாறாக நடநது கொணடிருக கிறேன். வேதங்களும் புராணங்களும நலலோர்களின நட்பை இறுகப் பிடித்துக்கொள்ள வேணடும் எனற சித்தாநதத்தைக் கூறுகின்றன. ஆனால நானோ எனது எனும் அபிமானம், மோகம், பொறாமை ஆகியவறறின் காரணமாக அதை மதிக்கவிலலை. வாழ்ககைத் தளை என்னும் சாகரத்தில மூழ்கியிருப்பதறகான காரியங் களையே எபபொழுதும் விரும்பிச் செயதுகொணடிருக் கிறேன்.

ஹே தலைவா! இப்பொழுது எப பலததினால் சம்சார பயததைப் போக்கமுடியும் என்பதை நீயே

கூறுவாயாக! நீ உனது கருணைமயமான கடாவைப்படி, என மீது இரக்கம் காட்டும்போதுதான் எனக்கு விடுதலை கிடைக்கும். துளசிதாசனாகிய எனக்கு வேறு யாரிடமும் விசுவாசம் இல்லாமலிருக்கும்போது ஏன வேறு உபாயம செய்து நான துடிதுடிதது இறக்கவேண்டும்?

## 187

இதனால நான உன்னிடம் விரைநது சரணடைந திருக்கிறேன். ஹே தலைவா! என்னிடம் ஞானம், வைராக்கியம், பக்தி ஆகிய சாதனங்கள் கனவில்கூட இல்லை. இரவும பகலும என்னைச்சுற்றி பேராசை, அறியாமை, காமம், காமம், குரோதம் ஆகிய பகைவர்கள் சுற்றி இருக்கிறார்கள். இவற்றோடு சேர்ந்திருப்பதால கெட்ட வழியிலே செல்லுகின்ற எனது மனததை நீ மாற்றினாலதான மாறும். ரசனடியார்களும் வேதங்களும் யாவரையும் அழைதது அழைதது, சிற்றினபம் தோஷங் களின் இருப்பிடம், துனபமயமானது என்று கூறுகின்றனர். ஆயினும், ஹே ஹரி! இதை நான அறிந்திருந்த போதிலும் அவற்றிலதான் அளவற்ற பற்றுக் கொண்டிருக் கிறேன். இதுவும் உனது தூண்டுதலதானன்றோ!

நீ விஷததை அமுதமாகவும நெருப்பை நீராகவும் செய்யக் கூடியவன. படகின்றியே விரும்பியவரை கரை கடக்கச் செய்யக்கூடியவன. என்னுடைய நனமைக்காக உன்னைப் போன்ற திறமையுள்ள கருணைவடிவை எங்கு தேடினாலும் நான அடையமுடியாது. ஹே ரகுநாதா! என் மனம் இதை அறிந்து மற்ற எல்லாவற்றையும் விட்டுத்து உன்னிடமே நம்பிக்கை கொண்டிருக்கிறது. ஏனெனில இந்தத் துளசிதாசனான என்னைச்சுற்றியுள்ள ஆபத்து என்ற வலையை உன்னால்தான நீக்கமுடியும்.

## 188

ஏ, மாயா உலகமே! இப்பொழுது நான் உன்னை அறிந்துகொணடேன். நீ கபடத்தின இருப்பிடம் என்பது இப்போது எனக்குத தெளிவாகிவிட்டது. அதோடு இப்போது எனக்கு பகவானின் ஆதரவும் கிடைதது விட்டது. அதனால் இப்போது நீ என்னைக் கட்டுப்படுத்த முடியாது. நீ பார்ப்பதற்கு அழகாக இருககிறாய. எவ்வாறு வாழை மரத்தை உரித்தால் நடுவில் ஒன்றுமில்லையோ அதே போன்று உன்னை ஆராய்நததில நீ வெறும் மாயை தான் எனபது தெரிந்தது. ஐன்மம் பறபல எடுததும என்னால் உன்னைக் கடகக முடியவில்லை. நீயோ என்னை அறியாமையென்னும் கானல நதியில் மூழ்கடித்து விட்டாய.

ஏ மூடனே! கேள், நீ கோடிக்கணக்கான வஞ்சனை களைச் செய்தாலும ரகுவர பக்தர்களை உனவசமாகக முடியாது. எநத இதயத்தில் நந்தலால பகவான் ஸ்ரீகிருஷ்ணா வாசம செய்யவில்லையோ, அநத இதயத் தில நீ உனது படைபலத்துடன வாசம் செய்துகொள். மாமத்தை அறியாதவனிடம உனது சாமாதகியத்தைக காட்டிக்கொள். உண்மையை அறியாதவர்களே கயிறறைப பாம்பாக நினைத்து பயந்து பயந்து சாவார்கள.

ஏ துஷடனே! நீ உனது சுறறத்தாருடைய நலனை விரும்புவதாக இருநதால் பிடிவாதத்தை விடுத்து நலல வார்த்தைகளைக கேள். நீ துளசிதாசனான எனது பகவான் ஸ்ரீராமரின பக்தாகளை விடுதது, காமமும கர்வமும இருககுமிடத்தில் அவருடைய புகழைப பாடுவாயாக!

## 189

சகோதரனே! நீ எப்பொழுதும் ராமநாமத்தைக் கூறிக்கொண்டே செல்வாயாக! இல்லையென்றால் விடுபடுவதற்கரிதான சமசாரத்தில் நீ வீணாக வீழ்ந்து விடுவாய். நீ ராம், ராம என்று ஜபித்துக்கொண்டே சென்றால், உன்னை யமதூதர்கள் பிடிக்கமாட்டார்கள். நமது பூர்வ ஜென்ம பாவங்கள் நமக்குப் பழைய மூங்கிலினால் முக்கோண ஒழுங்கற்ற பல்லக்கை அளித்திருக்கிறது. அப் பல்லக்கைத் தூக்குபவர்கள் போதையால் நியமமின்றித் தள்ளாடி நடக்கிறார்கள். பாதையிலோ மேடும் பள்ளமும் நிறைந்திருக்கின்றன. இதனால் பல்லக்கு அசையும்போது மிக்க துயரம் ஏற்படுகிறது. பாதையில் கல்லும் முள்ளும் பரந்திருக்கிறது. ஆங்காங்கு கால்களை சுற்றிக்கொண்டு இடையூறு செய்யும் கொடிகளும் இருக்கின்றன. நடக்க நடக்கத் தூரம் அதிகமாகிக்கொண்டே இருக்கிறது. அந்த வழியில் தங்குவதற்காக வாசஸ்தலமே இல்லை, வேறு யாரையும் சந்திக்கவும் முடியவில்லை. கடக்க முடியாத பாதையில் சாப்பிடுவதற்கும் ஒன்றுமில்லை. ஊரின் பெயரைக்கூட மறந்துவிட்டிருக்கிறேன்.

ஹே ராமா! துளசிதாசனாகிய எனக்கு இப்பொழுது அநுகூலமாக இருந்து என் சம்சாரப் பயத்தை நீக்கி விடுவாயாக.

## 190

நீ இயற்கையாகவே அன்பு செலுத்தும் ஸ்ரீராமரிடம் உண்மையான அன்புகொள்ளவில்லை. இதனால்தான் நீ மீண்டும் மீண்டும் உலகில் பிறப்பெடுத்துக் கொண்டிருக்

கிறாய். இப்பொழுதாவது நீ எனது அறிவுரையைக் கேட்பாயாக! கண்ணாடியில முகத்தின் பிரதிபிம்பம் தெரிந்தாலும அது மனத்தில் நிலைக்காததைப்போன்று தாய, தந்தை, மனைவி, குழந்தைகளுக்கு நீ சேவை செய்தாலும் அவர்கள உனக்குச் சொந்தமானவர்களல்லர். மணம் நிறைந்த மலரைக கண்டு எண்ணையிலிட்டு எண்ணை மணமுடையதாக ஆனபின்பு மலரை எடுத்து எறிந்துவிடுவது போன்று தன்னலம கொண்டவர்கள இவ் வுலகில நிறைந்திருக்கிறார்கள். பரரது உடல தூய்மை யாக இருக்கிறது. ஆனால் உள்ளமோ அழுக்கடைந்திருக் கிறது. நீ எண்ணற்றவர்களிடம் நட்பு கொண்டிருந்தாய், கொண்டிருக்கிறாய், கொண்டிருப்பாய. ஆனால் ஸ்ரீராமரைப்போன்று அன்பு கொண்டவர் யாரும் உனக்குக் கிடைக்கமாட்டார்கள். யாரிடத்தில் நீ எவ்வா உறவு முறைகளையும் கொள்ளமுடியுமோ அவரை நீ அறிந்து கொள்ளவே இல்லை. இதன் காரணமாக எது நல்லது? எது கெட்டது? என்பதை நீ அறிந்துகொள்ளவில்லை என்றுதான் சொல்லவேண்டியிருக்கிறது. நீ பொய்யைத் தான உண்மையென்று நம்புகிறாய. பொய்யை உண்மை யென்று நம்புகின்றயார்தான் நலனைக கெடுத்துக்கொள்ள வில்லை. அதாவது கெடுத்துக்கொள்ளமாட்டார்கள். பிரபு ஸ்ரீராமர்தான உண்மையில் காப்பாற்றுபவரென்று வேதங்களும் பண்டிதர்களும் கூறுகிறார்கள். துளசிதாச னாகிய நானும் அதையேதான் கூறுகிறேன். நீ கொஞ்சம் மனக்கண்ணைத திறந்து இது உண்மையா, இல்லையா? என்று பார்ப்பாயாக!

## 191

கோசல பாலகன் ஸ்ரீராமர் மட்டுமே உண்மையில் அன்புடையவர். ஸ்ரீராமரைத் தவிர அன்புக்கு அடிமை

யாதிற தயாளா வேறு யாருமிலலை. உடலிலுள்ள ஐம் புலன்களும் சுயநலங்கொணடவையே. அவை சிற்றினபத தில கைதேரநதனவாகும். துன்பப்படுகிறவர்களையும் பாவிகளையும் அநாதைகளையும காபபாற்றும தயாநிதி ஸ்ரீராமரைப போனறு வேறு யார் உளர்?

ஒலி இரககமற்றது. (ஒலியில மயஙகிய மான அதனருகில வநதபோது மாட்டிக்கொளகிறது. ஆனால அநத ஒலி அதனைக் காப்பாற்றவிலலை.) அகனியும அதற்குச சமமான குணமுள்ளது. (அதனிடம அன்பு கொணடு வரும் விட்டில பூச்சியையும அது எரிதது விடுகிறது.) நீரும அனபில தீரமற்றது. (நீரினறி மீன உயிர்வாழ முடியாது எனபதை அறிநதிருநதும் அதன பிரிவைபபற்றி நீரானது கொஞசமும கவலைப்படுவ திலலை.) சநதிரனும் தோஷமுடையதாகும. (ஏனெனில் தன்னிடம் அன்புகொணட சகோரப பட்சியைபபற்றி கொஞ்சமும கவலைப்படுவதில்லை.) சூரியனும் ஆகாயமும் அனபைப பொருதத வரையில கொடூரமாகவே இருக் கின்றன. (சூரியன பெரியதாக இருப்பினும் நீரிலலா விட்டால தனனிடம அன்புகொணட தாமரையை உலர்த்தி விடுகிறது. ஆகாயம் அதனிடம் அனபுகொணட சாதக பறவையின் மீதே ஆலங்கட்டியை விழச் செயது விடுகிறது.)

ஒருவருடைய மனம் எதில லயிததுவிடுகிறதோ அதுவே அவர்களுககுச சுகமாகத தோனறும். ஆனால சீதாபதி ஸ்ரீராமரைபபோனறு எபபொழுதும எளிமையும நறபணபும கொணடவர வேறு யாருமிலலை. சேவை செய்வதைக கேட்டவுடனேயே அவர்களுக்குச் சௌக கியத்தை அளிப்பவரும், குற்றங்களைக் கணடும் அதைப்

பொருட்படுத்தாதவரும் ஸ்ரீராமரைத் தவிர வேறு யார் உளர்? வேறு எவருடைய தர்பாரில் பிரதிதினமும் திக்கற்றவர்களுக்கு ஆதரவளித்து அன்பு காட்டப்படுகிறது? தோழி! நீயே கூறுவாயாக! ஜடாயுவையும் சபரியையும் தன் தாய் தந்தையருக்குச் சமமாக மதிக்கவும் பாவிகளைப் புனிதமாக்கவும் வானரங்களைத் தனது நண்பர்களாகக்கொள்ளவும் பட்டோட்டி குகனை தனது சகோதரன் பரதனுக்குச் சமமாக மதித்துத் தழுவிக் கொள்ளவும் வேறு யார் உளர்? அபாக்கியவான்களைப் பாக்யவான்களாக்குபவர் யார்? கோழைகளுக்கு அடைக்கலம் அளிப்பவர் யார் உளர்? இவை யாவும் வேதங்களிலும் கீர்த்தனைகளிலும் கூறப்பட்டுள்ளன. கவிஞர்களும் பண்டிதர்களும் இவருடைய புகழைப் பாடிக்கொண்டிருக்கிறார்கள். எவ்வளவுதான் தாழ்ந்தவர்களாயிருந்தாலும், பாவிகளாக இருந்தாலும் ராம நாமத்தை உச்சரித்தாலே ஸ்ரீராமர் அவர்களைச் சோதனை செய்யாமல், நல்லதா? கெட்டதா? என்று சோதிக்காமலேயே பணத்தை முடிபோட்டுக்கொள்வது போல் தன்தாக்கிக் கொள்கிறார். இக் கலியுகத்தில் யாருடைய செயல்களைப்பற்றிக் கேட்பதாலேயே மனம் களங்கமடைந்துவிடுமோ, அப்படிப்பட்ட குணமுடைய துளசிதாசனாகிய என்னைக்கூட ஏழைக் காப்பாளரான ஸ்ரீரகுநாதர் தன்தாக்கிக்கொண்டார்.

## 192

ஏ மூடனே! நீ ஞானஸிந்தாந்தமும் அன்பும் உறவும் கொள்ளாவிட்டால் கொடூர கலிகாலத்தில் தன் நலத்தையும் அடையாமல் உயர்ந்த மோக்ஷத்தையும் அடையாமல் வீணாவாய்.

புத்தகங்களிலும் புராணங்களிலுமே வர்ணாசிரம தாமத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இவை யாவும் ஏட்டளவிலேயே இருக்கின்றன செயலளவில் யாரும் கடைபிடிக்கவில்லை. உயிரற்ற உடலைப் போன்று சிறிதளவும் செயலின்றி யாவும் வேஷமாகவே இருக்கின்றன. வேதங்களில் கூறப்பட்டிருக்கும் சாதனங்கள் யாவும் அறம், பொருள், இன்பம் வீடு இவை நான்கையும் அளிக்கவல்லவை என்பதை அறிந்திருந்தாலும் ஸ்ரீராமருடைய அனபிலவிட்டால் இச் சாதனங்கள் யாவும் நீரற்ற குளம் மற்றும் நதியைப் போன்றவையே என்பதை நீ அறிந்து வைத்துக்கொள்வது நல்லது. முக்தி அடைவதற்கு அநேக மார்க்கங்களும் பலவிதமான முறைகளும் இருக்கின்றன, ஆயினும் துளசி! நான் கூறுவதைக்கேட்டு அவை யாவற்றையும் விடுத்து, இரவும் பகலும் ராமநாமத்தையே ஜபித்துக் கொண்டிருப்பாயாக!

## 193

ஏ ஜீவனே! இப்பொழுதுகூட நீ உன்னையும் ஸ்ரீராமரின் செயல்களையும் புரிந்துகொண்டாயானால் உனக்கு நன்மை ஏற்படக்கூடும். துச்சனான நீ எங்கே? கோசலபதி ஸ்ரீராமச்சந்திரா எங்கே? ஆயினும் ஜனங்கள் உன்னைப்பற்றி என்ன கூறுகிறார்கள். (உன்னை ஸ்ரீராமரின் தாஸன் என்றல்லவா கூறுகிறார்கள்)

ஸ்ரீராமா உன்னிடம் எப்போது சந்தோஷித்துக் கருணைகாட்டினார்? எப்போது கோபித்துக் குறை கூறினார்? கொஞ்சம் விவேகமெனும் நிலைக்கண்ணாடியில் உன் முகத்தைப் பார்த்தபின் நீ சிந்தித்தாய் என்றால் உள்ளத்தில் தோல்வியை ஒப்புக்கொள்வாய்.

ஏனெனில் நன்கு ஆராய்ந்து பார்த்தால் ஸ்ரீராமர் உன்னிடம் எப்பொழுதும் கருணை காட்டிக் கொண்டிருக்கிறார். ஆனால் நீதான் எப்பொழுதும் தவறு செய்து கொண்டிருக்கிறாய் என்பதை அறிவாய். ஆயினும் ஆராய்ந்து பார்த்த பின்பும் இதை நீ புரிந்துகொள்ள வில்லையென்றால் உனக்கு விடிவே கிடையாது.)

அநேக ஜன்மங்களில் நீ செய்த தவறுகளிலிருந்து உன்னை மீட்க அவருக்கு அரை நிமிட நேரமும் ஆகாது. ஹே கருணாநிதியே! என்னைக் காப்பாற்று என்று அன்புடன் கூறும் யாரைத்தான் ஸ்ரீராமர் சாதுவாக்க வில்லை? வால்மீகி, குகன் இவர்களின் கதையையும் வானரங்கள் (சுக்ரீவன், அனுமான், அங்கதன்—தாதி) காட்டுவாசி (சபரி), கரடி (ஜாம்பவான்) முதலியவர் அடைந்த நிலையைப்பற்றி நன்கு அறிந்த பின்பும் ஸ்ரீராமரை அடைய இயலாதவர்களுக்கு யார்தான் ஞானத்தைப்பற்றி உபதேசம் செய்யமுடியும்? எந்தச் சேவையைச் சுக்ரீவன் செய்து, அன்பு செலுத்தும் நியமத்தைக் கடைப்பிடித்து விட்டானென்று அவனுடைய தமயனான வாலியை வேடனைப் போன்று அடித்துக் கொன்றுவிட்டார்? அச்செய்கை யாருக்குத்தான் தவறாகத் தோன்றியது? விபீஷணன்தான் எந்தப் பூஜையைச் செய்துவிட்டாரென்று ஸ்ரீராமர் அவருக்கும் அப் பலனை அளித்தார்? ஏழைகாப்பாளரான ஸ்ரீராமருக்கு தன் அன்பர்களையும், வாக்கையும் காப்பதில் மிகவும் விருப்பம் அதிகம்.

இதனால் நீ ஸ்ரீரகுநாதரின் நாமத்தையே ஜபித்துக் கொண்டிருப்பாயாக! வேறு சாக்ஷை, எதையும் செய்யாதே! ஏனெனில் அவர் ஆனந்தமயமானவர், சுகமளிக்கும் தலைவர், கல்யாணகர்த்தா, திறமையுள்ளவர், கருணையின் இருப்பிடம், சரணடைந்தவர்

களைக் காத்தருள்புரிபவராவார். ஆனந்தக் கண்ணீருடன் உடலும் உள்ளமும் புளகாங்கிதமடைந்தவராய் அன்புடன் ஸ்ரீராமரின் புகழை இனிய குரலில் பாடிவரும் யாருடைய துன்பங்களைத்தான் நீங்கவில்லை? பிரபு ஸ்ரீராமச்சந்திரர் நன்றியுடையவர், எங்கும் வியாபித் திருப்பவர். நீ கடந்தகாலத் துக்கத்தை மறந்துவிடு! ஏ துளசி! நீ ஸ்ரீராமரிடம் கொண்டுள்ள உறவு புதுமையான தன்று.

## 194

ஸ்ரீராமரிடம் அன்பில்லையென்றால் இம் மானிடச் சரீரத்தை அடைந்த பயன்தான் என்ன? ஏ, அவக்குணங் களின் கடலே! துர்திஷ்டம் உள்ளவனே! எச் சரீரத்தை அடைந்து ஞானிகள் சுகமனைத்தையும் தியாகம் செய்து ஸ்ரீராமரின் தாசர்களானார்களோ, அச் சரீரத்தை அடைந்த நீ வயிற்றை நிரப்பிக் கொண்டு பாபங்களைச் செய்து கொண்டிருக்கிறாய். உலகில் ஞானம், வைராக்கியம், யோகம், ஜபம், தவம் போன்ற ஆனந்த மார்க்கங்களுக்குக் குறைவில்லைதான். ஆனால் ஸ்ரீராமரது அன்பில்லாவிட்டால் கானல் நீரின் அலைகளைப்போன்று அவையாவும் வியர்த்தமானவையே ஆகும். உலகைக் கண்டும் புராணங்களையும் வேதங்களையும் கூறக் கேட்டும் ஞானிகளிடமும் குருக்களிடமும் பழகியும் ஸ்ரீராமரின் பாதக் கமலங்களில் அன்பும், விசுவாசமும் கொள்வதே எல்லா சுபிட்சங்களுக்கும் சுரங்கமாகும். இன்றும் நீ இதை அறிந்து மனதில் தோல்வியை ஒப்புக் கொள்வாயானால் நொடியில் உனக்கும் நன்மை ஏற்படக்கூடும். துளசிதாசனாகிய எனது அபிப்ராயத்தை ஏற்று நீ உனது நன்மைக்காக அன்புடன் ஸ்ரீராமரைத் தியானிப்பாயாக!

## 195

ஹே ஸ்ரீராமநாதனே! என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். நீ உனது சுபாவப்படி என்மீது கருணை காட்டுவாயாக! பரமாத்மாவையும் சுவர்க்கத்தையும் அடையும் சாதனங்களையும், அகத்தையும் நலத்தையும் அளிக்கவல்ல நல்ல செயல்கள் யாவற்றையும் குரோதத்துடன் இக் கலிகாலம் தனது தீச் செயல்களில் மூழ்கடித்து விட்டிருக்கிறது.

இம் மனம் எங்கெங்கு தன் நலத்தைக் காண்கிறதோ அங்கெல்லாம் எப்பொழுதும் துன்பமே நிறைந்திருக்கிறது. விருப்பங்களை நிறைவேற்றும் நல்லனவெல்லாம் பயந்து விலகிச் செல்லும்போது அவ் விருப்பத்திற்கு விரோதமானவையெல்லாம் எண்ணற்ற வகையில் எதிரே வந்து நிற்கின்றன. மனம் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டிருக்கிறது. நோயினால் உடல் நலிவுற்றிருக்கிறது. பொய்யினால் சொல்லும் அழுக்கடைந்திருக்கிறது.

ஹே பிரபோ! இவ்வளவுக்குப் பின்பும் துளசிதாசனாரிய எனது உறவும் அன்பும் உன்னிடம்தான் இருக்கிறது.

## 196

ஏ மனமே! நீ ஏன் பலவித உபாயங்களைச் செய்து கொண்டு சுற்றிக் கொண்டிருக்கிறாய்? நீ ரகுவம்ச வீரனான ஸ்ரீராமரை விரோதித்துக்கொண்டிருக்கிறாய். அதனால் உனது துன்பங்கள் யாவும் நீங்காது. கோடி உபாயங்களைச் செய்தாலும், பகவானருளின்றி ஒன்றுமில்லை யென்றால் மூன்று தாபங்களும் தணியாதென்று மாமுனிவர் சுகதேவர் கைகூப்பிக் கூறியிருக்கிறார். நீயே

உனது இயலபான தனமையை விடுதது யோசிததுப பாரேன! பாலின்றி நீரைக கடைந்தால வெண்ணை கிடைக்குமா? இதனைப புரிந்துகொணடு பிரமையை விடுத்து சேவை செயவதறகு எளிதானதும நலல பலனளிககவலலதுமான அவருடைய திருவடிகளைப் பூஜிததுச் சேவை செயவாயாக!

ஏ மூடமனமே! கேள, வேத-சாஸதிர நூலகளும் ரிஷிகளும முனிவாகளும தேவாகளும் சாதுக்களும மறறுமுளள சாநத குணமுடைவாகளும ஒரே அபிபராயத்தைததான கொணடுளளாாகள.

ஏ துளசிதாஸ! ராமநாமமெனனும கங்கைக கரை அருகிலேயே இருந்தாலும தலைவனின கருணை இலலா விட்டால மிருகங்கள் யாவும் தாகத்தால செத்துவிடும. (அதே போனறு பகவானின திருவடிகளைச் சரணடையா விடடால முகதியை அடைய இயலாது.)

## 197

‘‘ஸ்ரீராமரின திருவடிகளிடம எனககு அனபில்லை. எனவேதான துன்பங்களை அனுபவிததுக் கொணடிருக் கிறேன். எனறு வேதஙகளும சிறநத அறிவுகொணட எல்லா முனிவர்களும் கூறியிருககிறாாகள. ஏனெனில் சநதிரனின மடியிலிருநது அமுதத்தைப பருகி அதன ருசிகண்ட மான், சூரிய கிரணத்தினால ஏறபடும கானல நீரைக் கணடு பிரமை கொளளுமா? (அதேபோனறு ஸ்ரீராமரின் திருவடிகளின அன்பில மூழகியவர்கள் சிற றின பச சுகஙகளில மூழ்கமாட்டாாரன்றோ!) கிளி சொல்லு வதைக கொஞசமும புரிந்துகொளள இயலாதது போன்று ஒருவர் பல புராணஙகளைக் கேடடுக்கொணடிருந்தாலும் அதைப புரிந்துகொளளாதவரை அவரது அஞ்ஞானம்

தூர விலகாது. சதையற்ற இலவம்பூவின்மீது ஆசை கொண்ட மூடக் கிளி, அதை மீண்டும் மீண்டும் வீணாகக் கொத்தினாலும் பஞ்சைத்தவிர வேறு ஒன்றும் கிடைக்காமல் ஏமாறுகிறது. அதேபோன்று மனிதர்களும் சாஸ்வதமற்ற இவ்வுலக இன்பத்தில் மூழ்கி அறியாமையில் மூழ்கி விடுகிறார்கள். அவர்கள் வலையின்றியே மாட்டிக் கொள்கிறார்கள்.

என்னிடத்தில் சாதனையோ, சித்தியோ இல்லை. வைதிக வழிமுறைகளையும் நானறியேன். நான் ஜபமும் செய்யவில்லை, தவமும் செய்யவில்லை. என் மனமும் என் வசமில்லை.

கருணையின் கஜானாவான ஸ்ரீராமா நீ, இந்தக் கொடிய உலகத் துன்பங்களிலிருந்து என்னைக் காப்பாற்றுவாயென்ற பெரும் நம்பிக்கை இந்தத் துளசிதாசனுக்கு உண்டு.

## 198

ஏ மனமே! இந்தச் சந்தாபத்தை இப்பொழுது நீ நழுவவிட்டால் பிறகு நீ வருந்த நேரிடும். அதனால் துர்லபமான மானிடச் சரீரத்தை அடைந்து மனம், வாக்கு, காயத்தால் பகவானின் புகழைப் பாடுவாயாக! பெரும் அரசர்களான ஸஹஸ்ரபாஹுவும், ராவணனும் கூட வலிமைபொருந்திய காலனின் பிடியிலிருந்து மீள இயலவில்லை. நான், நானென்று கூறிக்கொண்டு தன தான்யம் சேர்ப்பதில் ஈடுபட்டவர்களும்—இவ்வுலகை விட்டுப் போகும்போது வெறும் கையுடனேதான் செல்கிறார்கள், ஒரு துரும்பைக்கூட எடுத்துச்செல்வதில்லை.

புதல்வா, மனைவி போன்ற உறவுகளையும் நீ உனதென்று நினைத்து அன்பு செலுத்தாதே. ஏ மூடனே, இவர்கள் யாவரும் இறுதியில் உன்னைவிட்டுவிடுவார்கள். இதனால் இப்பொழுதே நீ அவர்களை ஏன் விட்டுவிடக் கூடாது? ஏ மூர்க்கனே! இப்பொழுதாவது விழித்துக் கொள்வாயாக! எல்லாத் துராசைகளையும் மனதிலிருந்து நீக்கிவிட்டுப் பகவானை நாடுவாயாக! ஏ துளசி! நெருப்பில் நெய்யை ஊற்றி நெருப்பை அணைக்க இயலாது, மேலும் மேலும் அது பிரகாசித்து எரியும். அது போலவே சிறந்த போகமும் காமமென்னும் நெருப்பில் ஊற்ற ஊற்ற இன்னும் அதிகரித்துக்கொண்டே போகும், குறையாது.

## 199

ஏ மூட மனமே! நீ எதனால் இன்னும் சுற்றித் திரிந்து கொண்டிருக்கிறாய்? பகவானின் சரணாரவிந்தங்களுக்குச் சேவை செய்வதைவிட்டு நீ கானல் நீரில் மூழ்கி இருக்கிறாய். மிருகம், பறவை, தேவர், மானிடர், அரக்கர் முதலான எத்தனை ஜனமங்கள் மூவுலகிலும் இருக்கின்றனவோ அத்தனையிலும் நீ சுற்றி வந்திருக்கிறாய். வீடு, மனைவி, புதல்வர், சகோதரர், தோற்றுவித்த தாய் தந்தையர் நிறையபேர் உனக்குக் கிடைத்தனர். ஆனால் இவர்கள் யாவரும் நீ நரகத்திலேயே இருக்கும்படியான வழியைத்தான் உனக்குக் காட்டினர். உனக்கு நன்மை ஏற்படும்படியான வழியையோ, உலகப் பந்தங்களிலிருந்து நீ விடுதலை பெறும்படியான வழியையோ இவர்கள் உனக்குக் காட்டவில்லை. நீ இவ்வாறு பலவகைகளில் வஞ்சிக்கப்பட்டிருக்கிறபோதிலும் இப்போதும் நீ சிற்றின்பங்களுக்காகவே அலைந்து கொண்டிருக்கிறாய். ஆனால் ஏ துஷ்டனே! காமமென்னும் நெருப்பில்

போகமெனனும் நெய்யை ஊற்றினால் அது எவவாறு அணையும்? சிற்றின்பம் கிடைக்காதபோது துன்பமேற்பட்டது. ஆனால் கிடைத்தபோதோ பெரும் ஆபத்தே ஏற்பட்டிருக்கிறது. அதனால் கனவில்கூட உனக்கு இன்பம் கிடைக்கவில்லை. இதனாலதான் சிற்றின்பம் கிடைக்கிற போதும் கிடைக்காதபோதும் துன்பமே அளிக்குமென்று வேதங்கள் கூறுகின்றன. ஒவ்வொரு கணமும் உனது வாழநாள் வீணாகிக் கொண்டிருக்கிறது. நீயே இந்த துர்லபமான சரீரத்தை வீணாகப் பாழடித்துவிட்டாய். ஏ துளசிதாஸ்! நீ எல்லா ஆசைகளையும் விடுத்துப் பகவானின் புகழைப் பாடுவாயாக! பார், காலனென்ற சர்பபம் இவ்வுலகத்தை அழித்துக் கொண்டிருக்கிறது

## 200

ஏ ஜீவனே! அதோடு பரமாத்மாவையும் முற்றிலும் நீ மறந்துவிட்டிருக்கிறாய். தாபங்களாலான சரீரத்தையே நீ அடைந்திருக்கிறாய் என்பதை அறிந்துகொள்வாயாக! நீயோ இந்த அழியும் சரீரத்தை எப்பொழுதும் நிரந்தரமானதென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். ஏ மூடனே! உன் தலைமீதே உனது மரணம் ஆடிக்கொண்டிருக்கிறது என்பதை நீ உணரவில்லை. யார்தான் நிலம் மனைவி, தனம், வீடு, நண்பர், புதல்வர் இவர்களைத் தனதாக்கிக் கொள்ளவில்லை? ஆனால் அவர்கள் யாருக்கு உரிமையானார்கள்? யாருடன் சென்றார்கள்? இவ உறவுகள் யாவும் வஞ்சனை நிறைந்தவையே ஆகும். தன பலத்தால் உலகை வென்று யமராஜனைக் கட்டிப் பலமறச் செய்த அரசர்களைக்கூட காலன் விழுங்கிக்கொண்டிருக்கும்போது நீ எம்மாத்திரம்? உண்மைத் தத்துவம் எது? வேதங்கள் எதை உண்மையென்று கூறுகின்றன?

என்பதை ஆராய்ந்து பார்ப்பாயாக! ஏ துளசி! இப்பொழுதும் நீ ஆராய்ந்தறிந்து சிவபெருமானின் மனம் லயித்திருக்கும் ஸ்ரீராமருடைய புகழைப் பாடவில்லை.

## 201

ஏ மனமே! இம் மானிடச் சரீரம் கனவில்கூட மனம், வாக்கால் பிறருக்குப் பயன்படவில்லையென்றால் இச் சரீரத்தைப் பெற்றதால் பெற்ற பயன்தான் என்ன? எச்சிற்றின்பம் சுவர்க்கம், நரகம், வீடு, காடு ஆகியவற்றில் நாமழைக்காமலேயே வந்துசேருகிறதோ அச் சிற்றின்பத் திற்காக, ஏ மனமே! நீ அதிக முயற்சி செய்துகொண்டிருக கிறாய். புரியவைத்தாலும் நீ புரிந்துகொள்ளவில்லை.

ஏ மூடா! நீ அஞ்ஞானவசமாகிப் பிறன் மனைவிக் காகப் பிறரை விரோதித்துக்கொண்டு இஷ்டம்போல காரியங்களைச் செய்திருக்கிறாய். கருவிலிருக்கும்போது அடைந்த சகிக்கமுடியாத துன்பத்தையும் துக்கத்தையும் நீ மறந்துவிட்டாயா? உலகில் பிறந்த ஜீவன்களுக்கெல்லாம் பயம், சம்போகம், போஜனம் யாவும் ஒன்றே. ஆனால் நீயோ தேவர்களுக்கும் துர்லபமான மானிடச் சரீரத்தை அடைந்திருக்கும் பகவானின் புகழைப் பாடாமல் காவத தாலும் அபிமானத்தால் போதை கொண்டு வாழ்நாளை வீணாக்கிவிட்டாய். (இந் நிலையில் உனக்கும் உலகிலுள்ள மற்ற பிராணிகளுக்கும் உள்ள வேறுபாடுதான் என்ன?) துளசி, எனது, உனது என்ற புத்தியை விடாமல், தூய்மை யான மனத்துடன் பகவானிடம் பக்தி கொள்ளாமல் இச் சந்தர்ப்பத்தை நழுவவிட்டுப் பின் வருந்துவதால் பயனென்ன?

## 202

மானிடச் சரீரத்தை அடைந்து நீ எக் காரியத்தைத் தான் பூர்த்தி செய்திருக்கிறாய். வேதத்தின் சாரமான பரோபகாரத்தினம் மீதும் நந்துமகூட இதுவரை நீ தியானத்தைச் செலுத்தவில்லை. இவ் வுலகம் என்ற மரத்திற்கு அஞ்ஞானமே அதன் வேராகும். பயமே அதன் முள்ளாகும். துன்பமே அதனால் அளிக்கப்படும் பழமாகும். அம் மரத்தை அப்புறப்படுத்தினாலும் அது விலகிப் போகாது. ராமபஜனையென்னும் கூரிய கோடாலியால் மட்டுமே வெட்டுறும். இன்னமும் நீ அதை வெட்ட முயற்சி செய்யவில்லை. சந்தேகமெனனும் கடலைக் கடக்க நாமாவளியென்னும் தோணியின் உதவியை நீ நாடுவாயாக. உனது ஆத்மாவினை நீ இன்னமும் விடுதலை செய்யவில்லை. அநேக பிறவிகள் எடுத்து பல கர்ப்பங்களில் விவேகமின்றிச் சுற்றிய பிறகும் சலிக்கவில்லை. பிறரின் செல்வத்தைக் கண்டு நீ உனது மனத்தைப் பொறாமையென்னும் தீயில் எரித்துக் கொண்டிருந்தாய். ஆனால் ஐம்புலன்களை அடக்கி ஏழைகளைக் காக்கத் தயையுடன் கூடிய சாந்தமான மனத்துடன் பகவானுக்குச் சேவை செய்யவில்லை. மனமே! நீ செயலால், சொல்லால் உன் பிரபு, குரு, பிதா, நண்பர் ஸ்ரீரகுநாதரை மறந்துவிட்டிருக்கிறாய்.

கழுக்குக்கு விடுதலை அளித்தவரே துளசிதாசனாகிய எனக்கும் அடைக்கலம் தருவார் என்ற நம்பிக்கை இருக்கிறது.

## 203

ஏ மனமே! நீ காலத்தை விடுத்து லட்சுமிநாராயண ரூபக குருவின் பாதக் கமலங்களின் புகழைப் பாடுவாயாக! அவருக்குச் சேவை செய்தால் ஆனந்தத்தின் இருப்பிடமான பகவான் ஸ்ரீஹரியின் அருள் உனக்குக் கிடைக்கும்.

பங்குனி மாதத்தின் சுக்ல பட்சத்தின் பிரதமை திதி போன்று முதன்மையாக அன்பு இல்லாவிட்டால் ஸ்ரீராமரை அடைவது வெகு கடினமாகும். ஸ்ரீராமர் நமது இந்த இதயத்திலேயே வாசம் செய்கிறார். ஆயினும் அன்பின்றி நீ அவரை அடைய இயலாது. துவிதிய திதியைப் போன்று பேதப் புத்தியை விடுத்துச் சந்தோஷத்துடன் பூமண்டலத்தில் சஞ்சரிப் பாயாக! மோகம், மாயை மற்றும் கர்வமற்ற இதயத்தில் தான் ஸ்ரீரகுநாதர் வாசம் செய்கிறார். ஆகை யால் அவற்றை நீ விட்டுவிடுவாயாக. திருதியை திதியை போன்று மூன்றாவது உபாயம் முக்குணங்களுக்கும் மேலான பரம புருஷர் லட்சுமிகாந்தனான முகுந்தனின் திருவடிகளில் பரமானந்தம் கொண்டு, முக்குணங்களையும் தியாகம் செய்தாலன்றி பகவானை அடைவது மிகவும் அரிதாகும். சதுர்த்தி திதியை போன்று நான்காவது உபாயம் மனம், புத்தி, விருப்பம், அகங்காரம் ஆகிய வற்றின் கட்டளைகளை நிறைவேற்றாமலிருந்தால் தூய சிந்தனை ஏற்பட்டு ஆத்மானந்த சொரூபமான பரமபதத்தை அடைய ஏதுவாகும். பஞ்சமிதிதியைப் போன்று ஐந்தாவது உபாயம், ஐம்புலன்களின் மெய், கண், காது, மூக்கு, வாய்) விருப்பத்திற்கு இணங்காது இருப்பாயாக! இல்லையென்றால் உலக இன்பம் என்ற குளத்தில் வீழ்ந்துவிடுவாய். சஷ்டி திதி போன்று ஆறாவது உபாயம், அறுவகை குணங்களை காமம் கோபம், பேராசை, மோகம், கர்வம், பொறாமை) ஞானகிநாதரின் தொடர்பால் வெல்வது எளிதாகும் ரகுநாதரின் கருணையென்னும் ஜலமின்றி பேராசையென்னும் நெருப்பு அணையாது. சப்தமி திதியை போன்று ஏழாவது முயற்சி ஏழுதாதுக்களாலான தோல், ரத்தம், மாமிசம், எலும்பு, கொழுப்பு, குடல்,

வீரியம்) சரீரததை ஆராயந்து, பரோபகாரததைச் செய்வதே அச் சரீரததால ஏறபடுததககூடிய ஒரே பலன என்பதை அறிநதுகொளவாயாக! அஷடமி திதியைப போன்று எட்டாவது சாதனம் அஷட இயறகைக் குணங களால் (நிலம், நீர, நெருபபு, காறறு, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம்) ஏறபடும விகாரஙகளுககு அறபாற பட்டவர் ஸ்ரீராமசந்திரா. அதாவது இதயத்தில பலவித மான ஆசைகள நிறைநதிருககுமபோது பகவானை எவ்வாறு அடைய முடியும்? என்பதை அறிநது கொள்வாயாக! நவமி திதியைப போன்று ஒனபதாவது சாதனம் ஒன்பது வாயில (இரணடு கணகள், இரண்டு காதுகள் இரண்டு நாசித் துவாரஙகள, வாய், ஆசனவாய, சிறுநீர்த்துவாரம்)களைக் கொண்ட ஊரில வசித்து (இச சரீரததைக கொண்டவர்கள்) நலலவறறைச செய்யாதவர் கள், சகிக்கமுடியாத துன்பத்தால துயருறறுப்பல ஜன்மங் களில அலைநது திரிகிறார்கள் எனபதை அறிநதுகொள்வா யாக! தசமி திதியைப போன்று பததாவது உபாயம, பத்து இந்திரியஙகளையும (பஞ்ச ஞானேநதிரியம் பஞ்ச கர்மேநதிரியம்) நனகறிநது அதனோடு ஒன்றிக் கொள்ளாவிட்டால எலலாச சாதனஙகளும் வீணாகி சாரங்கபாணி பகவான ஸ்ரீராமசநதிரா கிடைகக மாட்டார் எனபதை அறிந்துகொளவாயாக! ஏகாதசி திதியைப போன்று பதினோராவது சாதனம மனததை வசமாககி பரமாத்மாவின சேவையைச செயவாரகள ஏகாதசி விரதத்தின் பலனை அடைநது பிறப்பு இறப்பினினறும விடுதலை பெறுகிறார்கள எனபதை அறிந்துகொள்வாயாக! துவாதசியைப போன்று (பன்னிரணடாவது சாதனம்) மூவுலகஙகளிலும் பயமறறுச சஞ்சரிபபதறகான வகையில் தானம செய்வதாகும், எப்போதும பரோபகாரத்துடன மனததை நிலை

திருந்தி பாராயணம் செய்யவேண்டும். அதனால் வருத்தம் எப்போதும் ஏற்படாது. திரயோதசி திதியைப் போன்று பதிமூன்றாவது மூயற்சி மூன்று அவஸ்தைகளை யும் (நித்திரை, கனவு, அஞ்ஞானம்) கைவிடு, பகவானின் புகழைப் பாடவேண்டும். ஏனெனில் அவர் மனம், வாக்கு, காயங்களுக்கு அப்பாற்பட்டு எங்கும் வியாபித் திருப்பதோடு மற்றதை வியாபிக்கச் செய்பவரும் எல்லையற்றவரும் அவரே. சதுர்தசி திதியைப் போன்று பதினான்கு லோகங்களின் அடியும் முடியும் ஸ்ரீகிருஷ்ண பகவானே. ஆனால் எனது உனது என்ற பேதபாவத்தை விட்டொழிக்காமல் ஸ்ரீரகுநாதர் சம்சாரமெனனும் வலையை அறுப்பதில்லை. பௌர்ணமியை ஒத்த பதினைந்தாம் சாதனம் சித்திபெற்ற பக்தியின் ஆனந்தத்தை, பகவானின் அன்பு பெற்ற தாசர்கள் அறிவதாகும். அவர்கள் சாந்தமுடையவராய குளிர்ந்த தன்மை கொண்டு, அகங்காரமற்றவர்களாய எல்லா சிற்றின்பங்களையும் உதாசீனம் செய்து ஞானரதமாக விளங்குகிறார்கள். அனைவரும் மூன்று தாபங்களையும் ஹோலியில் எரித்துவிட்டு நல்ல முறையில் ஹோலிப் பண்டிகையைக் கொண்டாட வேண்டும். ஏ மனமே! நீ உன் மனதில் பரமானந்தத்தை அடையவேண்டும் என்று விரும் பினால் (மேற்கூறிய) இவ்வழியில் நடப்பாயாக! பரமாத்மா வின் சரித்திரமே ஹோலியின் பாட்டாகுமென்று வேதங் களும் புராணங்களும் பண்டிதர்களும் அபிப்ராயப்படு கிறார்கள். இதை ஆராய்ந்தறிந்து உலக பந்தங்களிலிருந்து விலகிவிடுதல் உனக்கு நல்லது. அதனால் எப்போதும் யமதூதர்களின் வசமாக வேண்டி இருக்காது. சந்தேகத்தை அழிப்பவராகவும் துன்பங்களைப் போக்குபவராகவும் சுகத்தின் இருப்பிடமாகவும் இருப்பவர் பகவான் ஒருவரே. ஆனால் எத்தனைதான்

உபாயஙகளைச் செயதாலும சாதுககளின கிருபை யினறி அவா (ஸ்ரீராமா) கிடைககமாட்டாா. பிறவிப பெருடலைச் கடபபதறகுச சாதுக்களின பவித்ர மான திருவடிகளே தோணியைப போனறதாகும். (சாதுக களின திருவடி எனற தோணியால (அதாவது சாதுக்களின சேவையைச் செயவதால்) ஒருவருக்குக கடும் உழைப பினறியே துனபததைப போக்கவல்ல ஸ்ரீராமா கிடைதது விடுவாா என்பதே துளசிதாசனாகிய எனது கருத தாகும்.

## 204

ஒருவருடைய மனம, சரீரம், வீடு, புதலவா, தனம், மனைவி ஆகியவறறிடம் முயறசி ஏதுமின்றியே மனம லயிததுவிடுவது போன்று ஸ்ரீராமசநதிரரின பாதங களிலும மனம லயிததுவிடுமேயானால அவர்கள உலகப பநதஙகளினறி, அகஙகாரமறறவராய, ஞானத்தில சிறநதவராய, சிற றினபத்தை வெறுப்பவராய இருப்பர்; அவாகள் பலதரபபட்டவர்களிலும தலைசிறநதவராய்க் கருதபபடுவாாகள. அபபடிபபட்டவாகளின முன சுகத்தின இருபபிடமும அறிவு கொணடவருமான கோசலபதி ஸ்ரீராமச்சநதிரா ஏன தோனற மாட்டாா? கூறுங்கள்! (நிச்சயம் தோன்றி வசமாகிவிடுவாா.) ஒருவருக்கு, ராவணனை அழித்த பகவான் ஸ்ரீராமரின கருணை இருநதால்தான அவா எல்லாப பிராணிகளை யும ரட்சிபபவராய், கபடமற்ற மனததுடன, அனபுடன கூடிய பக்தி உடையவராய, உறுதியான கட்டுபபாடுடைய வராய், இருக்கமுடியும் என்பதே துளசிதாசனாகியஎனது கருத்தாகும்.

## 205

ஏ மனமே! நீ கற்பகவிருட்சரூப பகவானைத் துதிக்க விரும்புவதாக இருந்தால் நான் சொல்வது போன்று இப்பொழுதே சிற்றின்பக் குற்றங்களைத் தவிர்த்து மூலப்பொருளான ஸ்ரீராமரின் புகழைப் பாடுவாயாக! சமத்துவம், பொறுமை, தூய சிந்தனை, நல்லவர்களின் சேர்க்கை ஆகிய நான்கையும் உறுதியாகப் பிடித்துக் கொள்வாயாக! காமம், குரோதம், பேராசை, அஞ்ஞானம், கர்வம், மோகம், துரோகம் ஆகியவற்றை முழுமையாகக் கைவிடுவாயாக! செவிகளால் பகவத் கதையைக் கேட்பாயாக! வாயால் ராமநாமத்தை உச்சரிப்பாயாக! உள்ளத்தில் பகவானின் உருவத்தைத் தியானம் செய்து, தலையால் வணங்கி, கைகளால் சேவை செய்வாயாக! கண்களால் கருணைக் கடலான ஜானகி வல்லப ஸ்ரீராமச்சந்திரரைக் காண்பாயாக! இதுவே பக்தியாகும். இதுவே வைராக்கியமாகும். இதுவே ஞானமாகும். இதுவே பரமாத்மாவை சந்தோஷப்படுத்தும் நல்ல விரதமாகும். இதையே நீ கடைப்பிடிப்பாயாக. இவ்வழியில் செல்பவர்களுக்குக் கனவில்கூட பயமில்லை என்பது சிவபெருமானின் அபிப்ராயமாகும் என்பதே துளசிதாசனாகிய எனது கருத்தாகும்.

## 206

சரணடைந்தவர்களின் துன்பத்தைப் போக்க ஸ்ரீ ரகுநாதரை ஒத்தவர் வேறு யாருமில்லை. தன் தொண்டர்களின் வசமிருக்கும் அவரது இயற்கையான சுபாவம் வேறு யாரிடமிருக்கிறது? எக்காரணமின்றியும் பக்தர்களிடம் வேறு யார் அன்பு செலுத்துகிறார்கள்? அவர் (ஸ்ரீராமர்) பக்தர்களின் சொற்ப நற்குணத்தையும்

சுமேரு மலையைப்போல கருதுபவர், கோடிக்கணக்கான தீய குணங்களின் குவியல்களையும் மறந்துவிடுபவர். அவர் பரமதயாளர், பக்தர்களின் சிந்தாமணி, தூய புகழுடையவர், பாவிகளைப் புனிதமாக்குபவர். பகவானை ஸ்மரணை செய்வதில் சுலபமானவர். மற்றும் பக்தர்களின் துன்பங்களைக் கேட்டவுடனேயே தான் சடைய ஆடையைச் சரிசெய்யவும் மறந்து ஓடி வருபவர். இத்தகைய புராணங்களும் வேதங்களும் மற்றுமுள்ள சாஸ்திரங்களுமே சாட்சியாகும். இதைப் பற்றி திரௌபதியும் கஜேந்திரனும் நனகு அறிந்திருக்கிறார்கள். ஏ துளசிதாஸ்! எல்லா ஆசைகளையும் நீக்கிவிட்டு யாருடைய புகழைக் கவிஞர்களும் புலவர்களும் பாடுகிறார்களோ, யாருடைய மனதில் காமம், மோகம், பேராசை, மற்றும் காவமில்லையோ, யார் முனிவரின் மனைவியை (அகலிகை) விடுதலை செய்தாரோ! அக் கோசலநாதரை (ஸ்ரீ ராமச்சந்திரரை) வணங்கு வாயாக!

## 207

ஸ்ரீராமா! உன்னைப் போன்று பூஜிக்கத்தக்க யோக்கியமானவர், சுகமளிப்பவர், சரணமளிப்பவர் வேறு யாருமில்லை. ஸ்ரீலட்சுமிகாந்தனே! ஆனந்த சொரூபமும் துக்கங்களை நசிக்கச் செய்பவரும் பயத்தைப் போக்குபவருமான உனது புகழை முழுமையாகப் பாட முடியாது. வேறு புகலிடம் கிடைக்காது துன்பப்படுகிறவர், பாவிகள், நீசன், வஞ்சகர், துஷ்டர், அற்பர், பயமடைந்தோர் யாவரும் கட்டாயத்தின் பேரிலாவது ஒரே முறை பகவானின் நாமத்தை ஸ்மரணை செய்தாலும், தேவர்களாலும் அடையமுடியாத (அடையத் தவிக்கும்) பகவானின் பாதத்தை அடைந்துவிடுவர். ஏ மூட துளசி!

மோட்சத்தினமீதுகூட ஆசைகொள்ளாத முனி ரூப வண்டுகள், யாருடைய திருவடிகளில் மயங்கிக் கிடக்கின்றனவோ, யார் அநாதைகளை ரட்சிக்கின்றாரோ அந்தப் பரம தயாளரை நீ ஏன் வணங்குவதில்லை.

## 208

ஹே பிரபோ! உன்னிடம் எப்படி என் வேண்டுகோளைக் கூறுவேன்? நான் உன்னிடம் சரணடையும் போது எனது மூன்று வகையான (மனத்தால், செயலால், சொல்லால்) எண்ணற்ற பாபங்களைக் கண்டு வெட்கித்து எனது தலை தாழ்ந்துவிடுகிறது. பகவான் பக்தரென்னும் வேஷமுள்ள முகத்தில் திரையைச் செய்து கபடமென்னும் பசுந் தழைகளால் போர்த்துகிறேன். பின் வேடனைப் போன்று உனது நாமமென்னும் கண்ணியை விரித்து இனிய சொற்களால சிறந்தபமென்னும் பறவைகளைச் சிக்க வைத்துக் கொண்டிருக்கிறேன். என்னுடைய ஒவ்வொரு ரோமத்திலும் கோடிக்கணக்கான வஞ்சனைகள் நிறைந்திருக்கின்ற போதிலும் சாதுக்களில் முதன்மையான இடத்தையே நான் வகித்துக்கொண்டிருக்கிறேன். நான் ஒரு காட்டுமனிதன், அகங்கார மலையின் மீதமர்ந்திருக்கும் மூடன். ஆயினும் எல்லாமறிந்தவர்களிடையில் என்னைச் சிரோண்மணியாகப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறேன். ஹே ராமா! உண்மையோ, பொய்யோ தெரியவில்லை. ஆனால் பலர் என்னை, உனது தாசன் என்று கூறுகிறார்கள். நானும் என்னை உன்னுடையவனென்று கூறிக்கொண்டிருக்கிறேன். ஹே தேவா! உன் பதவியைக் கௌரவித்து இந்தத் துளசிதாசரை உனதாக்கிக் கொள்வாயாக! பின்னடைய வேண்டாம்!

வேடன பறவைகளைச சிகக வைககவேணடி மூஙகிலா லான தட்டியைச செய்து அதனமீது பசுந தழைகளைப போாத்துகிறான. இங்கே பகவான் பக்தியின வேஷம், திலகமுதலிரை முதலியன தட்டியாகும், வெளி வேஷத்தில வைராக்கியம் கொணடு, உளளததில் சிற்றினபததில் ஈடுபட்டிருப்பதே பசுந தழைகளாகும். இஙகு கூறப்படும் ராம நாம ஜபமே கணணியாகும். இனிய சொறகளே சிகக வைக்கின்றன.

## 209

ஹே தலைவனே! எனககு வேறு யாருடைய ஆதரவும கிடையாது. ஹே கருணாநிதியே மனம, வாககு, காயத்தால உனது காலணிகளே எனது ஆதாரமெனறு உணமையாக உறுதி பூணடிருககிறேன. என மனம் கோபம், காமம, மோகம, பறறு ஆகியவற்றின இருப்பிடம என்பதை நனகு அறிவேன. இதனால நான ஞான, விஞ்ஞானததைபபறறி பேச முடியாது. என உளளத்திலுள்ள ஆசைகள், சங்கலபங்கள, சிற்றினப வேடகை ஆகியவற்றைக காணும்போது எவவகையிலும எனக்கு மோட்சம கிடைக்குமென்ற நமபிக்கை எனக்கு இலலை. வேதங்களில கூறப்பட்டுள்ள காமம, தாமம ஆகியவை யின்றி மோட்சத்தை அடைவது கடினம். ஆயினும என மனத்தில மோட்சத்திற்குச் செலலவேணடுமென்ற ஆசையிருக்கிறது. உனனையன்றி வேறு சித்தர், தேவர், மானிடர், அரக்கர் ஆகியோருக்குச் சேவைசெய்வது மிகவும் கடினமாகும். ஏனெனில் அவர்கள் யாவரும ஹடயோகம செய்து, உயிர்ததியாகம செய்து, நைவேத்தியம அளித்தாலதான் மனமிரங்குகிறார்கள். (ஆனால் இதை என்னால செய்ய முடியாது.) பக்தியோ

மிகவும் தூலபமானது. சிவபெருமான், சுகதேவ முனிவர் ஆகிய முனிரூப வண்டுகள் உன் சரணாரவிந்தங்களில் உள்ள மதுவென்ற அமுதத்தைப் பருக ஆவலுடன் காத்திருக்கிறார்கள். உன்னுடைய நாமம் பாவிகளைப் புனிதப்படுத்துகிறது என்பதைக் கேள்விப்பட்ட பின்பும் என் மனதில் காமம் நிறைந்திருக்கும் காரணத்தால் ஆராய்ந்தறிந்து பிரமையிலேயே மீண்டும் வீழ்ந்து விடுகிறேன் மகாராஜனே! நான் பயங்கர சம்சாரமென்ற இருளில் வீழ்ந்து கிடக்கிறேன். நான் நரகத்திற்குத்தான் யோக்கியமானவன். ஆயினும் என்னிடம் ஏதேனும் பலம் இருக்கிறது என்றால் அது உன்னுடைய பலமே ஆகும். பலத்தால்தான் வேடன், கழுகு, ஆஞ்சநேயா ஆகியோரின் குலத்தை நினைத்துத் துளசிதாசனாகிய நான் பிறவி என்னும் படுகுழியில் விழுவதற்கும் பயப்படவில்லை.

## 210

ஹே ரகுவம்சத் திலகமே! எனக்கு உனது திருவடிகளைத் தவிர வேறு புகலிடம் எங்கே இருக்கிறது? பாவிகளைப் புனிதப்படுத்துபவனான நீ புகலிடமற்றவர்க்குப் புகலிடமானவன். நீ பெற்றிருக்கும் அலாதியான புகழைப் போன்று வேறு யாரா பெற்றிருக்கிறார்கள்?

ஹே ராமா! நீ எனது குற்றங்களை மனதிலிருத்திக் கோபங் கொண்டிருப்பதன் காரணமாகத்தான் எனது பிரார்த்தனைக்குச் செவிசாய்க்காமல் முகத்தைத் திருப்பிக் கொண்டிருக்கிறாய். ஆயினும் ஹே கருணைக்கடலே! பயமின்றிக் கூறுகிறேன், எனது வார்த்தையைக் கேட்ட பின்பும் என் பக்கம் பார்க்காமல் உன்னால் எவ்வாறு இருக்கமுடியும்? உனது இருப்பிடத்தில் வசிக்க வேண்டுமென்பதே எனது பிரதான விருப்பமாகும். ஆயினும் ஹே

ராமா! அவ வாசையைக காமம் முதலானவை சூழ்ந்து கொண்டிருக்கின்றன.

புண்யததால மட்டுமே கிடைக்கககூடிய ஒரே பவனான முகதியும சொாககமும துர்லபமானவை. ஆனால நாமததினால யமபுரியின அருகில எவ்வாறு நான் நெருஙகமுடியும்? ஹே கோசலபதி! எனக்கு வேறு புகலிட மிலலை. நான எஙகு செலவேன? நான் ஒரு ஏழை; தஙகுவதற்கு இடமில்லாததால மனம தளர்ந்திருக்கிறேன். தலைவனே! இப்பொழுது தயவுசெய்து கஜேந்திரன், கழுகு, வேடன முதலானோர் இருககும ஊரில் நமக்கு வதறகு இநத துளசிதாசருககும இடமளிகக வேண்டு கிறேன்.

## 211

ஹே ரகுவம்சமணி! எப்பொழுதாவது வேடன, கழுகு கஜேநதிரன, அஜாமிலன முதலான துஷ்டர்களும் நற்கதி அடைவதற்குக காட்டிய கருணையை எனக்கும காட்டுவாயா? ஹே தலைவனே! என்னையும அவர்களைப போலவே கருதிக காக்கவேண்டும். பல கர்ப்பஙகளில பிறபபெடுததுப பலவிதமான துஷ்ட காரியஙகளைச செய்திருக்கிறேன். ஆனால அதை மனதில ஏற்றுககொள்ள வேண்டாம்.

நீ ஏழைகளின் காப்பாளன், வெற்றிகொள்ள முடியாதவன, எஙகும் வியாபித்திருப்பவன், சாமர்த்திய மானவன். சரணடைந்தவர்களைக் காப்பவன, மிருதுவான குணமுடையவன். மேறகூறிய உனது குணஙகளை பின்பற்றுவாயா? அஞ்ஞானம், காவம், அகஙகாரம், காமம முதலான துஷ்டர்களின் கூட்டத்தை அடியோடு ஒழித்து

எனது எண்ணற்ற துக்கங்களைப் போக்குவாயா? யோகா ஜபம், யகஞம், விஞ்ஞானம் ஆகியவற்றைவிட உயர்ந்த எளது எல்லையற்ற தூய பக்தியைக் கண்டு எனது உள்ளத்தில் பரமானந்தத்தை நிரப்புவாயா? அற்பர்களின் சிரோன்மணியாக எவ்வகைச் சாதனமுமற்றுக் கடமனம் படைத்தவனான இந்தத் துளசிதாசனைக் கண்டு நீ பயப்படுவதாக இருந்தால், ஹே தலைவா! நீ வேத வியாக்யானத்தில் கூறப்பட்டுள்ள உனது கீர்த்திப் பாடல்களையும் தெளிவான புகழையும் எவ்வாறு உலகில் பரப்புவாய்?

## 212

ஸ்ரீரகுநாதா ஆபத்துக்களைப் போக்குபவர், எல்லையற்ற கருணையுடையவர், ஏழைக்காப்பாளர், மற்றும் பாவிகளைப் புனிதமடையச் செய்பவர். கருணையற்றவர்கள், துஷ்டர்கள், அற்பர்கள், ஏழைகள், மற்றும் அளவற்ற பாபங்கொண்ட பாவிகளையுமகூட ஸ்ரீராம நாமத்தை ஸ்மரணை செய்தவுடனேயே வைகுண்டபதத்திற்கு அனுப்பிவிட்டார். கஜேந்திரா, தாசி பிங்களை அஜாமிளன் போன்ற துஷ்டர்களை யார்தான் எண்ண முடியும்? துளசிதாஸ! ஜானகிரமணா ஸ்ரீராமா யாருக்குத் தான் முக்தி அளிக்கவில்லை?

## 213

பகவான் ஸ்ரீ ஹரியைப் போன்று ஆபத்துக்களைப் போக்கி அளவற்ற துக்க சாகரத்திலிருந்து கரையேற்றக் கூடியவர் வேறு யாருமில்லை. கஜேந்திரன் (யானை) தன் பலத்தை இழந்திருப்பதை உணர்ந்து தாமரை மலரைப் பிடித்துச் சரணடைந்ததும் அதன் ஈனக் குரலைக் கேட்டுச் சக்ரதாரி பகவான் கருடனையும் விட்டு

விடுவிரைந்தார். துரௌபதியை எல்லோர் முன்னிலை யிலும்—நிர்வாணமாக்க துச்சாதனன் முயன்றபோது "ஹே பிரபோ என்னைக் காப்பாற்று" என்று கூறிய வுடனேயே பலவிதமான புடவைகளால் அவருடைய மானத்தைக் காப்பாற்றினீர். இதை அறிந்த தேவர்கள், மானிடர், முனிவர், பண்டிதர் முதலானோர் அவருக்குச் சேவை செய்துகொண்டிருக்கிறார்கள். நிருக அரசனை* மீட்ட துளசிதாசரின் பகவான் யாருக்குத்தான் அபய மளிக்கவில்லை?

## 214

பிரபோ! நீ உன்னுடைய கௌரவத்திற்காகப் பவித்ர மானவர்களை விடுத்துப் பாவிகளிடமே அன்பு காட்டு வதில் என்ன நியாயம் இருக்கிறது?

பூதனா* தன் மார்பகங்களில் விஷத்துடன் கொல்வதற்காகச் சென்றபோதும் தயையுடைய

---

* சத்ய யுகத்தில் நிருகனென்னும் அரசனிருந்தான் அவன் பிரதினமும் கோ தானம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தான். ஒருநாள் தானம் அளித்த பசுவில் முதலில் ஒரு பிராமணனுக்கு அளிக்கப்பட்ட பசுவும் சேர்ந்து கொண்டிருந்தது இதை அறியாத அரசன் அதை மற்றொரு பிராமணனுக்கு அளித்துவிட்டான் முதலில் தானம் பெற்ற பிராமணன் அடுத்த தானம் பெற்ற பிராமணனிடம், அவனைத் திருடனென்று நினைத்துத் தன் பசுவின் அடையாளத்தைக் கூறி அவனிடம் சண்டையிட்டான். இறுதியில் இருவருமே அரசனிடம் முறையிட்டனர். இருவரையும் அரசன் சமாதானப்படுத்தியும் கேளாமல், அரசனை 'பச்சோந்தியாகப் போவாய்' என்று சாபமிட்டுச் சென்றனர். அரசனும் வெகுகாலம் வரை துவாரகாபுரியில் ஒரு கிணற்றில் பச்சோந்தியாக வாழ்ந்துவந்தான். பகவான் கிருஷ்ணாவதாரத்தில் அந்தப் பச்சோந்தியை கிணற்றிலிருந்து மீட்டு அழகிய சரீரத்தை அளித்து வைகுண்டத் திற்கு அனுப்பிவிட்டார்.

* பூர்வ ஜன்மத்தில் வாமன அவதாரத்தில் பகவானின் குழந்தை ரூபத்தைக் கண்டு பூதனா அக் குழந்தைக்குப் பாலூட்ட வேண்டுமென்று ஆசைப் பட்டாள். பாவத்தின் காரணமாக மறுபிறப்பில் ராட்சசியாகப் பிறந்தாள் விஷப்பாலூட்டிக் கிருஷ்ணரைக் கொல்ல வேண்டுமென்ற கம்சனின் கட்டளையை நிறைவேற்ற, பகவான் கிருஷ்ணருக்குப் பாலூட்டச் சென்ற போது, அக் கெட்ட எண்ணத்தைப் பகவான் அறிந்திருந்தபோதும் அவளுடைய முற்பிறப்பின் ஆசையை அவர் நிறைவேற்றினார்.

ஸ்ரீகிருஷ்ணர் அவளையும் தாயைப் போன்று வைகுண்டபதத்தை அளித்தார். அவர் காம—மோகங் கொண்ட கோபியரிடம் காட்டிய அன்பை அளவிட முடியாதது. அதனால் உலகப் பிதாவான பிரம்மாவும் அவர்களுடைய பாதத் துகள்களை சிரசின் மீது ஏற்றுக் கொண்டார்.

சிசுபாலன்* பிரதிதினமும் நூறு வசவு மொழிந்து கொண்டிருந்தபோதிலும் ராஜசபையில் அவனைக் கொன்று தன்னிடம் சேர்த்துக் கொண்டார்—முக்தியை அளித்துவிட்டார். மூடபுத்தி கொண்ட வேடன் மிருக மென்று நினைத்து குறிவைத்து அவருடைய பாதத்தில் அம்பு செலுத்தியபோது, வேடனைத் தனது உயர்ந்த உலகுக்கு அனுப்பி வைத்து தனது சுபாவத்தைப் பறைசாற்றினார். பாபத்தின் உருவமான துளசிதாசரையே தன்னிடத்தில் வைத்துக் கொண்டிருக்கும்போது புண்ணியம், பாவம் இரண்டையும் சேர்த்துச் செய்தவர்களைப்பற்றி யார் கூறுவார்கள்?

## 215

அன்பான உள்ளத்தைக் கண்டு அறபர்களிடமும் அன்பு செலுத்தும் சுபாவம் கொண்டவர் ஸ்ரீரகுநாதர் தாழ்ந்த மற்றும் பாவியான நிஷாதனிடம் (குகன்) என்ன கௌரவம் இருந்தது ஆயினும் அவனுடைய

* தற்பொழுது சந்தேரி என்றழைக்கப்படும் சேதி நாட்டரசனும் கிருஷ்ண பகவானின் அத்தை மகனுமான சிசுபாலன், பகவான் ஸ்ரீகிருஷ்ணரைத் திட்டி பிரதிதினமும் நூறு வசைச் சொற்களைக் கூறிக்கொண்டிருந்தான். நூறுவசைச் சொற்கள் வரைதான் பொறுத்துக்கொள்வதாக தன் அத்தைக்கு வாக்களித்திருந்தார். ஒருநாள் பாண்டவ ராஜசபையில் நூற்றுக்கும் அதிகமான வசைச் சொற்களை பொழிந்த காரணத்தால் பகவான் தன் சக்ராயுதத்தால் அவன் தலையை வெட்டிவிட்டார் அவன் ஜோதியாகிப் பகவானின் வாயில் நுழைந்துவிட்டான்

அன்பை உணர்நத ஸ்ரீராமா அவனை மகனைப்போன்று மார்பில தழுவிக் கொணடாா. பிரம்மாவால் ஹிம்சை மயமாகப படைக்கப்படட கழுகு (ஜடாயு) எவ்வகை தயாளததைக் கொண்டிருநதது ஆயினும் ஸ்ரீராமா் அதைத் தநதையைப போல் பாவித்துத் தன கைகளால் நீரினை ஊற்றினாா.

இயறகையாகவே கொடிய குணம கொணடவரும் தாழநத குடியைச் சோநதவளுமான சபரி எல்லா அவகுணங்களுக்கும் இருபபிடமாக இருநதவள். ஆனால அவள கொடுத்த பழஙகளை ஸ்ரீராமா மிகவும ருசித்துச் சாபபிட்டாா. அரககா குலததைச் சேர்ந்தவனும் பகைவனுமான வீபீடணன தனனிடம் சரணடைய வநதிருககிறான எனபதையறிநது, தன் உடல நிலையை யும் மறநது அவரே எழுநதுசென்று அவனை பரதனைப போன்று பாவித்து மார்போடு தழுவிககொணடாா. வானரஙகளிடம் பாராட்டும்படியாக என்ன நற்செயலகள் இருக்கின்றன? அவற்றை நினைததாலே நஷ்டம் ஏறபடும். ஆயினும் ஸ்ரீராமா அவற்றைத தன் நண்பா களாக்கிக் கொணடதோடு தனனுடன் அழைதது வந்து போற்றினார். ஸ்ரீராமா எபபொழுதும் கருணை யுடையவா, மிருதுவானா, ஏழைகாப்பாளா, நிருபம தானமளிபபவா. எனவே ஏ துளசிதாஸ்! நீ வஞசகமும், போக்கிரித்தனமுமில்லாமல இப்படிப்பட்ட பிரபு ஸ்ரீராமரை வணஙகு.

## 216

பரமாத்மாவை விடுதது நீ வேறு யாருடைய பஜனை யைச் செய்யமுடியும் ஸ்ரீராமரைப்போன்று பகதா களிடம் அன்பு கொணடவா வேறு யாருமில்லை.

ஹிரண்யன் மனம், வாக்கு, காயத்தால பிரம்மாவின பக்தனாக இருந்தான். அவன தன் புதல்வன் பிரகலாதனுக்குத் துன்பம் தரக் கருதி மரணத்தின் வாயிலை அடைந்தபோதும் பிரம்மாவால அவனைத் தடுக்கமுடியவில்லை, மரணப் பிடியிலிருந்து காப்பாற்ற முடியவில்லை.

ராவணன சிவபெருமானின் பக்தனென்பதையும் பலமுறை தன தலைகளைத் துண்டித்துச் சிவபெருமா னுக்கு அர்ப்பணித்திருக்கிறானென்பதையும் உலகமறியும். ஆயினும் அவன் ஸ்ரீராமரிடம் பகைகொண்டபோது சிவபெருமான் அவனுடைய கனவிலும் அதைத் தடுக்க வில்லை. இதனால ராவணன கொல்லப்பட்டான், சிவபெருமானால் அவனைக் காப்பாற்றமுடியவில்லை.

பிரம்மா மற்றும் சிவபெருமானின் நிலையே இவ்வாறிருக்கும்போது மற்ற தேவதைகளைப்பற்றி என்ன கூறட்டும்! அவர்கள யாவரும் சுயநலத்தின் நண்பர்களாவர். பயமடைந்து தன்னிடம் சரணடைந்த வர்களை ஒருபொழுதும் யாரும் காப்பாற்றவில்லை. சேவை செய்ததால் யாராதான செல்வத்தைக் கொடுக்க மாட்டார்? இதுவே உலக நியதி. ஆயினும் துளஸிதாஸ்! ஏழை பக்தர்களிடம் ஸ்ரீராமரின அன்பு மட்டுமே இருக்கிறது. அதாவது ஸ்ரீராமா மட்டுமே எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பக்தர்களைக் காப்பாற்று கிறார்.

## 217

ஹே தலைவனே! என்னைப் போன்றவனைக் காப்பவா வேறு யாராவது இருப்பாரானால் மீண்டும் மீண்டும் அழுது எனது துன்பங்களை உன்னிடமே ஏன்

செவிமடுப்பேன்? உன்னைத் தவிர ஏழைகளிடம் அன்பு கொண்டவர் யார்? வேறு யாருக்குப் 'பதிதபாவனன்' என்ற பேர் இருக்கிறது? மகாபாவியான அஜாமிலனுக்கு வைகுண்டபதத்தை அளித்தது யார்? சிவன், பிரம்மா, இந்திரன் முதலான உலகக் காப்பாளர்கள் இருந்த போதிலும் பயமென்னும் நதியில் மூழ்கிய கஜேந்திரனுக்கு வேறு யாரும் உதவவில்லை. நீதான் விரைந்து வர வேண்டி இருந்தது. சபையில் அநேக அரசர்கள் வீற்றிருந்தும், அர்ஜுனனின் மனைவி திரௌபதி "பிரபோ, என்னைக் காப்பாற்று' என்று கூறியபோது யாரும் அவளுக்கு வஸ்திரம் அளிக்கவில்லை. நீதான் புடவையை அளித்துக் கொண்டிருந்தாய். ஹே கருணைக் கடலே! உனது கருணை மிகுந்த புகழை எனது ஒரு வாயால் எவ்வாறு கூறுவேன்?

ஹே கோசலநாதனே! அவதாரமெடுத்து பக்தர்களுக்காக எதைத்தான் நீ செய்யவில்லை? என்னை பாபி யென்று நீ ஒதுக்குவதாக இருந்தால் உன்னைப்போன்ற ஒருவரிடம் என்னை ஒப்படைத்துவிடு. இல்லாவிட்டால் இந்தத் துளசிதாசனாகிய நான் உனது சரணங்களை விடுத்து எங்கே, எவ்வாறு போகமுடியும்?

## 218

ஹே பகவான், கலியுகப் பாபங்களையும் பயங்களையும் நாசப்படுத்தவல்ல, எல்லா வகையிலும் மங்களங்களை நிறைந்த உனது சரணங்களின் தரிசனத்தை எனக்கு எப்போது அளிக்கப்போகிறாய்?

குளிர்காலத்தில் தோன்றும் அழகிய, பசுமையான செந்தாமரை மலரின் நிறத்தை ஒத்த உனது சரணங்களை, லக்ஷ்மிதேவி தனது அழகிய ஒப்பற்ற கைகளால்

வருகிக் கொண்டிருக்கிறார். கங்கையின் தந்தையும், சிவபெருமானின் அன்புக்கு பாத்திரமானவரும், பிரம்ம சாரியின வேஷங்கொண்டு பலியரசனை கொன்றவரும், பிராமணரின பத்தினி (அகலிகை) நுருக அரசன, மற்றும வேடன (வால்மீகி) ஆகியோரின் சகிக்கமுடியாத துக்கங் களையும், தோஷங்களையும் போக்கியவரும் சித்தர்கள், தேவர்கள மற்றும் முனிவர்களால் வணங்கப்படுபவரும், எல்லோருக்கும் சுகத்தையும், அடைக்கலத்தையும் அளிப்பவருமான உன்னை உள்ளத்தில் ஒருமுறை தியானம செய்யும மானிடா தானே முக்தியடைவதோடு பிறரையும் முகதியடையச் செய்பவர்களாகிவிடுகிறார்கள். ஹே ரகுநாதா! அறிவு மிகுந்த கருணைக்கடலான நீ சரணாகதியடைந்தவர்களின துக்கத்தைப் போக்குபவன். இந்தத் துளசிதாசர் உனனுடைய சரணங்களின தரிசன ஆசையெனும் தாகத்தால இறக்க விரும்புகிறார்.

## 219

இன்று காலையிலேயே உனது வாசலில நின்று ஒரு கவள அன்னத்திற்காக மட்டுமே கெஞ்சிக் கொண்டிருக் கிறேன. தாங்கமுடியாத பயங்கர பஞ்சத்தின உருவமான இக் கலிகாலத்தில் எல்லா உபாயங்களும சாதனங்களும கெடுதி விளைவிப்பனவாகவே இருக்கின்றன, தீயவர் சேர்க்கையால ஐம்புலன்களின் செய்கைகளும கெட்டு விட்டன. மனம் என்னும் தாழ்ந்த மணிதனின் உயர்ந்த ஆசைகள நிச்சயமாக குஷ்டரோகத்தில் அரிப்பெடுப் பதறகு ஒத்திருக்கிறது. என் மனத்தில் பயமேறபட்டதால கருணை வடிவமான சாதுக்களின மண்டலிக்குச் சென்று 'என்னைப் போனறவர்களுக்கு யாராவது இருக்கிறார் களா?' என்று விசாரித்தேன், சாதுக்கள் "கோசலபதி

ஸ்ரீராமர் இருக்கிறார்'' என்று பதிலளித்தார்கள். கருணைக் கடலாக ஸ்ரீராமரைத் தவிர வேறு யாரால் ஏழ்மையையும் தரித்திரத்தையும் நாசம் செய்ய முடியும்?

தசரதகுமாரனான நீ வீரர்களின் மற்றும் கொடையாளிகளின் சிரோரனமணி. ஹே ஏழைக் காப்பாளனே! நான பிறப்பிலிருந்தே பசியுடனிருக்கும் பிச்சைக்காரன. பிறபபிலிருந்து பசியுடனிருக்கும் துளசி தாசருக்குப் பக்தியெனும் அமுதத்தினை ஒதத நலல உணவை அளிதது வயிறு நிறைய சாப்பிடச் செய்வாயாக!

## 220

ஹே கோசலேநதிர! எனனைக் காப்பாறற வேண்டு கிறேன். உனது நாமத்தை விடுதது எனக்கு வேறு புகலிடம் கிடையாது, உதவுபவரும் யாருமில்லை. என்னை நானே கவனிததுக்கொண்டு என்னுடைய நனமைக்காக உன்னிடமே நான சரணடைநதிருக்கிறேன். ஏனெனில் எனனைக் கவனிக்க வேறு தாய தந்தை யாருமில்லை. இதனால் ஹே ராமா! எனக்கு உனது நாமமே குரு, தேவதை, தலைவன், நண்பன் மற்றும் நம்பிக்கையுமாக இருக்கிறது

ஹே ராமா! உனனுடைய ராஜ்யததில் அழுககடைநத மனமுடைய கலிகாலததின வஞ்சனை நிழல் படுவதில்லை. ஆனால் பயங்கொள்ளிச கலிகாலம கோபங்கொணடு எனனைப போன்ற பிணததிறகுக்கூட காயம் ஏற்படுததி மேன்மேலும் துனபம விளைவிததுக் கொண்டிருக்கிறது. நரி தவளையைக் கொனறு சிங்கத்தின் பகையைத் தேடிக் கொளவதுபோன்று இநதக கலிகாலம் நான உன

தாசனெனபதை அறிநதும் வீணாக என்னைக் கொடுமை யாகத துன்புறுத்திக் கொண்டிருக்கிறது.

வைகுண்டததில சுகமாக வசிக்கும் பரிசுத்தது அரசன் கூட கலியுகத்தின் எண்ணற்ற அநியாயங்களையும் உபததிரவத்தையும் கண்டும், கேட்டும் பச்சாதாபபபட்டுக் கொண்டிருக்கிறார்.

ஹே கருணைக்கடலே! இநத தாசன படும் துன்பததைக் கொஞ்சம் பார்க்க வேண்டுகிறேன். ஹே தீனதயாள தேவா! உன திருவடிகளின் தரிசனத்திற்காக உன்னிடம நான சரணடைந்திருக்கிறேன். என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். நீங்கள அந்தக் கலிகாலத்தை அழைததுத் தடுக்க வேண்டாம், அடிக்கவும் வேண்டாம். இதறகு அவசியமே இல்லை. அனுமாரிடம் மட்டும் ஒப்படைததுவிட்டால போதும். அவர பசுவின முகததைச் சிங்கம் முறைததுப பார்ப்பதுபோல் பார்ப்பார். வாயுகுமாரனின சிவந்த முகத்தையும் பயங்கரமான புருவங்களையும் கோபததினால் சிவந்த விழிகளையும் கணணுற்றவுடனேயே சஞ்சல மனம் படைத்த கலியின் உற்சாகம் குறைந்துவிடும். எனது இந்தக் கோரிக்கையைக் கேட்ட ஸ்ரீராமர் சிரித்துக்கொண்டே தனது தம்பி லட்சுமணனிடம் இதைப்பற்றிக் கூறினார். லட்சுமணனும் சிரிததுக்கொண்டே 'சரியாகத்தான சொல்லுகிறார்' என்று கூறினார். போதும், இப்போது எனது எண்ணங்கள் நிறைவேறிவிட்டன. ஸ்ரீராமர் இந்த ஏழைக்கு நியாயம் வழங்கிவிட்டதை அறிந்த முனிவர்களின வீடுகளில ஆனந்தம் பொங்கியது. சங்கடம், பயம், இந்த இவ் உலகின் தொந்திரவுகள், மொத்தப பாவங்கள் யாவும் நீங்கிவிட்டன. இந்தத் தாசனிடம ஸ்ரீராமர் கொண்டுள்ள

நிர்ககுண, பவித்ரமான, மறறும மாயையறற அன்பையும் விசுவாசத்தையும் கணடு முனிவர்கள், ஹே துளசிதாஸ்! புகழ்பெறற மகானான பகவானுககு வெற்றி உண்டாகட்டும்! என்று கூறினார்கள.

ஒரு நாள பரிக்ஷிதயெனும அரசன வேட்டையாட அடர்ந்த காட்டிற்குச் சென்றான. அங்கு கரிய உருவங்கொண்ட ஒருவன் உலகையுடன் ஒரு பசுவையும ஒரு நொண்டி மாட்டையும் விரட்டிக்கொண்டு சென்றதைக கண்டான. விசாரித்ததில அவன் கலிகாலமென்றும் பசு பூமியென்றும மாடு தர்மமென்பதையும அறிந்த அரசன கலிகாலததைக் கொலல வாளை உருவினான். கலியுகம் பயந்து அரசனின காலகளில வீழந்தான். சரணடைநத அவனைக் கொல்லாமல விடுததுப பதினானகு ஸ்தானங்களில் அவன இருக்க அரசன் அனுமதி அளிததான். அதில பொன்னும் ஒன்றாகும். அரசனின் தலையில பொன்னாலான மகுடம் இருநதது. எனவே கலியும அவரது தலையிலமர்ந்து அவருடன சென்றுவிட்டான். அக கலியினால அரசன தியானததிலிருநத முனிவரின் கழுததில இறந்த பாமபொன்றைப போட்டுவிட்டான். இதனால கோபமடைந்த முனிவரின் புதலவன அன்றிலிருநது ஏழாவது நாள பாமபினால தீணடபபட்டு அவ்வரசன் இறநதுவிடுவான் என்று சாபமிட்டான். கலியுகததிறகு ஏன கருணைகாட்டினேனென்று வருந்தபபட்டான் அந்த அரசன.

## 221

ஹே தலைவனே! நான ஒரு ஏழை, இரவும் பகலும உனது கருணையையே எதிர்பார்த்துக கொணடிருக்

கிறேன். ஹே தீனதயாளா! உனது கிருபை எப்போது கிட்டுமென்று தெரியவில்லை.

பாபத்தின் மொத்த உருவமும் அவகுணங்களின் இருப்பிடமுமான கலிகாலத்தைக் கண்டவுடனேயே நற்குணம், ஞானம், வைராக்கியம், பக்தி மற்றும் நல்ல சாதனங்கள் யாவும் வியாகூலமடைந்து ஓடிவிட்டன. அளவற்ற அநியாயங்கள் மற்றும் தீயபழக்கத்தின் காரண மாக இந்த பூமி சூரியனையுமவிட அதிக வெப்பமடைந்து விட்டிருக்கிறது. என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். தலைவனே! நான் எங்கே போவேன்? எங்கும் தங்குவதற்கு இடமில்லை. புத்தி பேதலித்துவிட்டது.

ஹே தந்தையே! என்னுடையதும் (சரீரம்) என்னிட மில்லை. எல்லாக் கொடுமையாலும் தீய பழக்கத்தாலும் துளசிதாசனென்னும் நெல்வயல் பிளவுபட்டுக் காய்ந்து கொண்டிருக்கிறது. கரிய மேகமான நீ கருணையென்னும் மழையைப் பொழிந்து இதைச் செழிப்படையச் செய்வாயாக!

## 222

ஹே கிருபாநிதி! என்னை உனக்கு அர்ப்பணிக் கிறேன். யாரிடம் முறையிடுவேன்? உன்னை ஒத்த நற்குணக்கடலும், சேவகர்களை ரட்சிக்கும் தலைவனும் எனக்கு வேறெங்கும் கிடைக்கமாட்டார்கள்.

எங்கெல்லாம் பேராசையால் உந்தப்பட்டு சஞ்சல மான மனத்துடன் எனது நன்மையை விரும்பி செயல் படுகிறேனோ, அங்கெல்லாம் சூரியனைக் கண்டவுடன் பிரமையில் மூழ்கி மரப்பொந்தில் நுழைந்துவிடும்

ஆந்தையைப்போல ஏமாறறததுடன திரும்பிவிடுகிறேன. காலம், இயற்கை, காமம யாவும் விசித்திரமான பலனகளை அளிப்பவை எனபதைக சேட்டு நான தலையிலடிததுக கொணடு வாளா இருநதுவிடுகிறேன். ஏனெனில இவை மூன்றும ஒரேமாதிரியாகத தாஙக முடியாதவையாக இருக்கின்றன. நானோ எபபொழுதும இதனுடைய பயஙகர ஜுவாலையில எரிநதுகொண்டிருக்கிறேன.

ஹே தலைவனே! இதுவரை நான அநாதையாக இருநதேன. உனனுடைய தாசனாகவிலலை. துக்கத்தின பாத்திரமாக இருந்தேன். அதுவும் நியாயமானதே. ஆயினும் ஹே சரணாகதிகளின ரட்சகனே! இபபொழுது உன்னுடையவனென்ற போதும துனபத்தை அனுபவித்துக கொணடிருப்பது ஏனெனறு புரியவிலலை.

ஹே மகாராஜனே! ஹே கமலககணணனே! நான் பாபத்திலும் துக்கத்திலும் மூழகி இருக்கிறேன். ஹே பிரபோ! ஹே ராமா! நீ பரிபாலித்தால்தான இநதத துளசிதாசரின பரிபாலனம் நடக்கும்.

## 223

ஹே தலைவனே! எபபொழுதாவது என்னை உனனவ னென்று நினைபபாயோ? ஏழைகளின விருப்பஙகளைப பூர்த்தி செய்யும் சிரோன்மணி ஸ்ரீராமா! நீ உனது பெயரின கீர்த்தியைக காபபாற்றுவதில் எபபொழுதாவது தியானம் செலுத்துவாயோ? நீ நலவொழுக்கக் கடல், அழகுடையவன், எலலாவறறையும செய்ய யோக்கிய மானவன, திறமையுடையவன மறறும உத்தமகுணங்களின சுரங்கம்.

ஹே பிரபோ! நீயே காப்பாற்றினாய், காப்பாற்றிக் கொண்டிருக்கிறாய், நீயே காப்பாற்றுவாய். எப்போ தாவது இந்தச் சரணாகதியின் அன்பைப் புரிந்துக் கொள்வாயா?

வேதங்களும் புராணங்களும் நீ ஏழைகளின்மீது கருணைகாட்டுபவன், பிரதிதினமும் அவர்களுக்கு மங்களத்தை வழங்குபவன் என்று கூறுகின்றன. இதை இவ்வுலகம் அறியும். என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். எனது முறை வரும்போது மட்டும் உன்னுடைய சுபாவத்தையே நீ மறந்துவிட்டாயோ என்று கூறவேண்டி யிருக்கிறது. இப்பொழுது நீ துன்புறுவோரா ஏழைகள் மற்றும் அநாதைகளுக்கு நன்மை செய்வது வெட்கமென்று நினைக்கிறாயோ? இல்லை. இந்த துளசிதாசரைப் போன்ற மகாபாவிகளை ரட்சித்தால் பெரும்பழி ஏற்படு மென்று நினைக்கிறாயோ? எதுவாயினும் இறுதியில் இந்தச் சரணாகதியின் சம்சாரப் பயத்தைப் போக்குவா யென்ற நம்பிக்கை இருக்கிறது.

## 224

என்ன, எப்போதாவது என் மனம் ஸ்ரீராமரிடத்தில் லயிக்குமா? கெட்டவழி, போக்கிரித்தனம், துர்ப்புத்தி, தீச் செயல், வஞ்சம், கபடம் ஆகியவற்றை அது எப்போது தான் விடுமோ? அறியாமையினால் விஷத்தை அமுத மாகவும் அமுதத்தை நெருப்பாகவும் அது நினைத்துக் கொண்டிருக்கிறது. அது இந்த எதிரிடையான நியமத்தை யும் சுயநலத்தையும் விடுத்துப் பிரபு ஸ்ரீராமச் சந்திரனின் சரணங்களில் அன்பு செலுத்துமா? அது ராமநாமத்தின் அழகிய மற்றும் அர்த்தமுள்ள மிருதுவான மோதகத்தை ஸ்ரீராமரின் அன்பெனும் பாகுடன் சாப்பிடுமோ,

(அதாவது உளளன்புடன ஆாததததோடு ராமநாம ஜபத்தைச் செயயுமோ)

இவவாறு உன சுவாமியின புகழபாடி, அவரை மகிழ்வித்தால, ஏ மனமே! நீ உன் வாயால் எதைக் கேடடாலும் அவரிடமிருநது அதை அடைவாய். இவவாறு செய்வதால நீ சுகமெனும் கடடிலில நிததிரை செயவாய. அதோடு உன மனதிலிருககும் எரிச்சல் விலகி விடும. துளசிதாஸ! ஸ்ரீராமரின அருளினால உன இதயததில ஸ்ரீராமபகதியின சகாபதம், யுகம் ஆரமபிதது விடும.

## 225

ஸ்ரீராமரைப போனற வேறு தலைவா கிடைத் திருபபவருககும் சுயபலம் பெறறிருபபவாகளுககுமே பிறரிடம நமபிககை ஏறபடும். அறியாமை, காமம், காவம் ஆகியவறறினால கலிகாலததை உணராமலிருபபவருக்கும அலலது எலலாவகையிலும தளர்ந்திருக்கும மககளின சாபபாளரான ஸ்ரீராமரின சுபாவத்தைக கேடடபினனும் நினைவில்லாமல இருபபவர்களுககுமே ஸ்ரீராமரை விடடுப பிறரிடம் நமபிக்கை ஏற்படும. ஆனால் என வலிமையை நான நன்கறிநதிருக்கிறேன. மறறும் ஸ்ரீராமரை ஒதத வேறு யாருடைய புகழையும நான கேடடதிலலை. கல, மலைவாசி, படசி, மிருகம், ராட்சதன் ஆகியவறறில யாருடைய செயலதான உத்தமமானது? தாய் தந்தையருடனிருககும் பாலகனைப் போல துளசிதாசனாகிய நானும் கவலையற்று ஸ்ரீராம நாமமாகிய கற்பகவிருடசத்தினடியில இருக்கிறேன.

## 226

யாருக்கு வேறு நம்பிக்கை இருக்கிறதோ, அவர்கள் அதைக் கடைபிடிக்கட்டும்! இந்தக் கலியுகத்தில் துளசிதாச னாகிய எனக்கோ ராமநாமமென்னும் கற்பகத்தருவே நற்பலன்களை அளிப்பதாக இருக்கிறது. கர்மம், உபாசனை, ஞானம் இவை மூன்றும் வேதங்களால் ஒப்புக் கொள்ளப்பட்டு இருப்பதோடு எல்லா வகையிலும் தூய்மையானவையும் ஆகும். ஆனால் ஆவணி மாதத்துக் குருடனைப் போன்று எனக்குப் பச்சை நிறமே தென்படுகிறது. அதாவது நான்கு புறங்களிலும் ராம நாமத்தின் மகிமையே தென்படுகிறது.

முன்பு நான் நாயைப் போன்று இவ்வயை நக்கிக் கொண்டிருந்ததால் வயிறு நிறையவில்லை. ஆனால் இப்போது நான் ராமநாமத்தை ஸ்மரணை செய்த உடனேயே அமுதம் பரிமாறப்பட்டிருப்பதைக் காண்கிறேன். எனது இம்மை சுகத்திற்கும் முக்திக்கும்கூட ராம நாமமே சாதனமாகும். மனிதனோ, யானையோ* என்பதை நான் அறியவில்லை. ராமநாமத்தின் மகிமை யால் வானரப் படைகள் கற்களினால் பாலத்தை அமைத்துக் கடலைக் கடந்தன என்பதைக் கேள்விப்

* மகாபாரத யுத்தத்தில் துரோணாச்சாரியரைக் கொல்ல வேண்டுமென்று நினைத்தார் பகவான். பீமசேனன் அசுவத்தாமன் என்ற யானையைக் கொன் றிருந்தான். யுதிஷ்டிரர் பொய் சொல்லமாட்டாரென்று கருதிய துரோணர் யுதிஷ்டிரரிடம் யார் இறந்தது என்று கேட்க ''அசுவத்தாமன் கொல்லப் பட்டான் மனிதனோ யானையோ'' என்று கூறினார் யுதிஷ்டிரர் மனிதன் என்ற சொல்லை உரக்கமாகவும், யானை என்ற சொல்லை மெதுவாகவும் கூறினார். அன்புப் புதல்வனின் மரணச் செய்தியைக் கேட்ட துரோணர் மூர்ச்சித்து வீழ்ந்து விட்டார். அந் நேரம் அவர் தலை வெட்டப்பட்டது அப்போதிருந்து மனிதனோ யானையோ என்ற பதப் பிரயோகம் வழக்கில் ஏற்பட்டது

படடிருக்கிறேன். அந்த நாமத்திற்கு இவ்வளவு பெரிய மகிமை இருக்கும்போது அதை விடுத்து இம்மை சுகம், முக்தி என்று கூறி சிக்கலில் ஏன் மாட்ட வேண்டும்? ஒருவருக்கு எங்கு அன்பும் விசுவாசமும் இருக்கிறதோ, அங்கு அவருடைய வேலை நிறைவேறுகிறது.

ராமநாமத்தின் இரண்டு எழுத்துக்களே எனது தாய் தந்தையாவர். அவரிடத்தில் நான் குழந்தையைப்போல அடம் பிடித்துக்கொண்டிருக்கிறேன். இதில் நான் ஏதாவது மறைத்துக் கூறுவேனேயாகில் சிவபெருமானே சாட்சியாக இருக்கட்டும். எனது நாக்கு எரிந்து விழுந்து விடட்டும். நன்மையைப் பற்றி ராமநாமத்தினாலேதான் நான் அறிந்துகொண்டேன்.

## 227

ஹே ராமா! எனக்கோ உனது நாமம் மட்டுமே நன்மைசெய்வதாக இருக்கிறது. இதை நான் எனது சுயநலம் கொண்ட நண்பர்களுக்கும் உயர்ந்த எண்ணம் கொண்ட நண்பர்களுக்கும் கை தட்டிக் கூப்பிட்டுக் கூறுகிறேன்.

நான் பிறந்த உடனேயே எனது பெற்றோர் என்னை கைவிட்டுவிட்டனர். பிரம்மாவும் என்னை அபாக்கியவானாகவே படைத்துவிட்டார். ஆயினும் சிலர் என்னைப் போன்றவர்களை, ராமருடைய தாசர் என்று எதனால் கூறுகிறார்களோ தெரியவில்லை. ராமநாமத்தை ஸ்மரணை செய்யாமல் வயிற்றுக்காகவே அலைந்தேன். என்னைப் பார்த்து துக்கமும் துக்கமடைந்தது.

ஆனால் இப்போது உனது நாமத்தின் அநுக்கிரகத்தினால் கருவேலமரத்திலிருந்து மாம்பழம் எனக்குக்

கிடைத்துக் கொண்டிருக்கிறது. அதாவது என் காமத்தின் காரணமாக நான் கஷ்டமான பழத்தைப் பெற்றிருக்க வேண்டும். ஆனால் ராமநாமத்தின் அனுக்கிரகத்தால் அந்தக் கீழ்ச் செயல்களுக்கும் நற்பலன்களே கிடைத்துக் கொண்டிருக்கின்றன.

எல்லாலகும் துக்க மயமாக விளங்கியதோ, அதையே இப்பொழுது நான் ராமநாம மயமாகப் பார்க்கின்ற காரணத்தால் அது ஆனந்தமயமாகக் காட்சியளிக்கிறது. சாதுக்கள் பல வகையான முயற்சிகளைச் செய்தே இம்மையும் மறுமையும் பெறுகிறார்கள் என்பதைக் கேள்விப் பட்டிருக்கிறேன். ஆனால் ஒரே முடிச்சியில் பல சுருக்குகள் இருப்பதுபோல் ராமநாமம் ஒன்றே எல்லோருக்கும் புகலிடமாகும். சாதனங்கள் பலவாயினும் எல்லாவற்றுக்கும் ஆதாரம் ராமநாமமே ஆகும்.

## 228

யாருக்கு ஸ்ரீராமச்சந்திரரைவிட அவருடைய நாமத்தின்மீது அதிக பிரியம் இருக்கிறதோ, அவர்களுக்கு இந்தக் கலியுகத்திலும் ஆரம்பம், மையம், முடிவு யாவும் நன்றாகவே இருக்கின்றன. ராமநாமத்தின் மகிமையை அறிந்து காமம், கோபம், பேராசை, அறியாமை, கர்வம் யாவும் வெட்கமடைகின்றன. ராமநாம ஜபத்தில் பற்றுதல் கொண்ட கனவான்களின்மீது உச்சி வெயிலும் நிழல் கொடுத்துவிடும். யாராவது ராமநாமத்தின் மகிமையால் கலலின்மீது தாமரை தோன்றியிருக்கிறது என்று கூறுவார்களானால் அதுவும் சரியே. ஏனெனில் அந்த நாமத்தைக் கேட்பதாலும் ஸ்மரணை செய்வதாலும் காட்டுவாசியான சபரி புண்யத்தின் எல்லையையடைந்து பாக்யவதியாகி

விட்டாள். வால்மீகியிடமும், அஜாமிளனிடமும் எந்த சாதனையைச் செய்வதற்கும் உபகரணங்கள் எதுவும் இருக்கவில்லை. ஆனால் ராமநாமத்தின் மகிமையால குந்துமணிகளை உருட்டியே ரத்னத்தை அடைந்து விட்டார்கள். ராமநாமத்தின பிரபுத்துவம் ஸ்ரீராமரைவிட அதிகமானது. ஏனென்னில் அது கிராமத்தை நகரமாக்கி விட்டது, மூர்க்களை சமாததனாக்கிவிட்டது. அந் நாமத்தை ஜபித்தே துளசிதாசரைப் போன்ற நேர்மை யற்றவர்களும் பறைசாற்றி நேராகிவிட்டார்கள்.

## 229

என்னை வேறொருவருடைய தாசன் என்று கூறுவேனாகில் எனது நாக்கு அழுகிவிடும். ஹே ஜானகி-ஜீவனே! நான ஜன்ம ஜன்மமாக உனது கவளத்தாலேயே வளர்க்கப்பட்டிருக்கிறேன். மூவுலகிலும் முக்காலங்களிலும உன்னைப் போன்ற நலல மனம் படைத்தவரைக் காண விலலை. உன்னிடம் கபடமாக நான நடநதால யுக, யுகங்களுக்கும் கொடிய நரகத்தில உழலுவேன். என்ன ஆயிற்று, இக கலியுகமானது என் மனத்தோடு சேர்ந்து அதனை வாழ்க்கைச் சுழலில் சிக்கிய வணடாககிவிட்டதா? ஸ்ரீராமருடைய தர்பாரின சேவகனாக இருக்கிறேன் என்ற நினைவின பலத்தினாலேயே துளசிதாசனாகிய நான் ஆனநதமாக இருக்கிறேன.

## 230

எக காரணமுமின்றி எந நோக்கமுமின்றி நன்மை செய்பவர் வேறு யார இருக்கிறார்கள்? உன்னைத் தவிர ஏழைக ரக்ஷகாபபாளர் வேறு யாருமில்லை என்று வேறு யார் புகழப்படுகிறார்கள்? உன்னுடைய கருணை மயமான

புருஷத்தையே பகதாகள பாாத்துக் கொணடிருக் கிறார்கள்.

பிரம்மாவினால படைககபபடட சிறியோா முதல பெரியோா வரை யாவரும் அவரவாகள தனனலத்தையே விரும்புகிறாாகள. கபடக காடடுவாசி, படகோடடி, குரஙகு கரடி, ஆகியவறறைக காபபாற்றும் சோபை வேறு எநத தயாளரிடம இருககிறது? குரோதததுடன சோமபலாக இருநதும யாருடைய நாமததைக் கூறினால பாவங்களும, கெடட குணஙகளும் விலகிவிடும்? எலலா நாட்களிலும் சுவாமி துரோகியான துளசிதாசரைப போனற தீய சேவாகளையும் தனனிடம் சோததுக கொணடிருபபவா யார்?

## 231

எனக்கென்று யாா இருககிறாாகள, யாரிடம கூறுவேன்? ராஜாவாகவேணடும எனற ஏழையின ஆசையைப போனறு எனது மனோரதம் அபபடியே இருக்கிறது. எனவே இநத மனோரதத்தை யாரிடம கூறிப் பரமானநதத்தை அடைவேன?

யமலோகததின மோசமான நிலைமையையும, பல காபபஙகளில பிறபபெடுக்க வேணடிய மறறும சகிகக முடியாத எலலா நிலைமையையும சகிததுககொணடேன, மேலும சகிததுக் கொள்வேன். ஆனால ஹே பிரபோ! அறம, பொருள, இனபம, வீடு ஆகியவறறை நான அடைவது கடினமாகவும் அதை அளிபபது உனககு எளிதாகவும இருக்குமென்றாலும அதை நான விரும்ப மாட்டேன.

உனது விளையாட்டுப் பொருளாக, பட்சியாக, மிருக மாக, மரமாக வேலையாளாக இருக்கவே விரும்புகிறேன். இவவர்நிருந்தால் நான நரகத்திலகூட சுகத்தின் அனுபவத்தையே அடைவேன். அவவாறின்றி மோட்சத்தையே அடைந்தாலும் துக்கத்தால் வெந்து கொண்டிருப்பேன. இந்தத் தாசனுடைய உள்ளத்தில இந்த ஆசைதான இருக்கிறது. 'நான துளசிதாசருடைய இந்த ஆசையை நிறைவேறறுவேன' என்று எனக்கு வரககுக கொடுக்க வேண்டும் அல்லது மனதிலேயாவது வைத்துக்கொள்ள வேண்டுமென்று உன் தாழ்பணிந்து வேண்டுகிறேன.

## 232

நான — உன்னை விடுத்து — வேறு தீன பந்துவை எங்கடைவேன்? நான யாரிடம் எனது ஏழ்மையை முறையிடுவேன்? உன்னைத் தவிர வேறு யார் பிறருடைய துக்கத்தால துக்கமடைவார்?

நான எங்கெல்லாம் என மனதை அலைய விடுகிறேனோ அங்கெல்லாம் தயையற்ற தலைவர் களையுமே காணகிறேன். இதைக் கேட்டும் அறிந்தும் நான மௌனமாகவே இருக்கிறேன். ஏன், யாரிடமும் எதையாவது கூறி எனது பலவீனத்தை வெளிப்படுத்த வேண்டும். பசுக குளம்பு நீரில் மூழக யோக்யமான காரியங்களைச் செய்துவிட்டு சொற்களால கடலாழத்தை அளந்துக கொண்டிருக்கிறேன.

எனது மனம் அளவற்ற காம ஆசையுடன இருக்கிறது. ஆனால வாயால உன்னுடைய தாசனென்று கூறிக்

கொண்டிருக்கிறேன். ஹே பிரபோ! நீ துளசிதாசனாகிய எனது உள்ளத்திலுள்ள எல்லா விஷயங்களையும் அறிந்தவன். ஆயினும் என் நிலைமையை உனக்கு ஞாபகப்படுத்துகிறேன். நான் கூடத்தை விட்டு உன்னுடைய வாசலில் உன் புகழைப் பாடிக்கொண்டிருக்கும்படியாகச் செய்துவிடுவாயாக!

## 233

என் மனத்தின் மனோரதமும் ஒரே மாதிரியாகத் தான் இருக்கிறது. முனிவர்களது மனத்துக்கும் துர்லப மான புண்ய பலனை என் மனம் விரும்புகிறது. ஆனால் பாவம் செய்வதில் அது திருப்தியடையவில்லை. இந்தக் காமபூமியான பாரதகண்டத்தில் ஜன்மம் ஏற்பட்டிருக் கிறது. ஆனால் கலியுகத்தில், தீய சேர்க்கையும் கோபமும் காமமும் கொண்ட அறிவைக் கொண்டு கோடிக்கணக்கான தீய செயல்களைச் செய்துக் கொண்டிருந்தால் பரமபதமும், சாந்தியும் எவ்வாறு கிடைக்கும்?

துளசிதாஸ்! சாதுக்களுக்கும், குருவுக்கும் சேவை செய்து கொண்டு வேத புராணங்களைக் கேட்டதால் வாத்தியம் இசைக்க ஆரம்பித்தவுடனேயே இன்னராக மென்று புரிந்துகொள்வதுபோல், நிலைக்கண்ணாடியில் முகத்தின் ஒளி தெளிவாகத் தெரிவது போல், ஸ்ரீராமருடைய சுபாவம் கற்பக விருட்சத்தைப் போன்று தெரிந்துவிடுகிறது.

## 234

இப்படிப்பட்ட உத்தமமான—மானிட—ஜன்மம் வீணாகவே கழிந்துவிட்டது. முக்தியடைவதற்கான

நரகாரியங்கள் எதையும் நான் செய்யவில்லை. மாறாக பிரதிதினமும் தீயசெயல்களே வளரலாயிற்று. பிள்ளைப் பருவமோ, உண்பதிலும் விளையாடுவதிலுமே கழிந்து விட்டது. இளமைப் பருவத்தை யுவதிகள் வென்று விட்டனர். நோய் நொடி, பிரிவு, பயம் உழைப்பு இவற்றில் பரிபூரணமாக முதுமையும் வீணாகவே கழிந்து கொண்டிருக்கிறது. மோகம், குரோதம், அறியாமை, பயம் ஆகியவற்றின் வசமாகியதால் சாதுமண்டலியும் பிடிக்கவில்லை. எப்போது ஸ்ரீராமருடைய புகழைக் கூறியதோ, கேட்டதோ இல்லை. அதோடு ஸ்ரீராம ருடைய சரணங்களில் அன்பைச் செலுத்தியதுமில்லை. இப்பொழுது சகிக்க முடியாத உலகத் துன்பங்களைக் கேட்டு எனது உள்ளம் பச்சாதாபத்தால் எரிந்து கொண் டிருக்கிறது.

ஹே பிரபோ! நீ உனது பெயருக்கேற்றவாறு, வழக்கப்படி இந்தத் துளசிதாருக்கு என்ன செய்ய முடியுமோ அதைச் செய்யும்படி கேட்டுக்கொள்கிறேன்.

## 235

இப்படியே அநேக ஜன்மங்கள் கழிந்துவிட்டன. பிராண நாதரான ஸ்ரீ ரகுநாதரை ஒத்த சுவாமியின் சரணங்களை விட்டு மற்றவர்களுடைய சரணங்களின் சேவையைச் செய்துகொண்டிருந்தேன். மூர்க்கர்களையும் கபடர்களையும் பயந்தாங்கொள்ளிகளையும் துஷ்டர் களையும் மற்றும் கலியுக பாபங்களில் மூழ்கியிருந்த வர்களையும் புகழ்ந்தே எனது தொண்டை வறண்டு விட்டது. அவர்களையே பகவானுக்கும் மேலாக நினைத்தேன்.

சுகத்திற்காக எப்போதும் கோடிக்கணக்கான உபாயங்களைச் செய்தும், கால்கள் வலிக்கவில்லை. ஆயினும் எனது உள்ளம், பாதையில் கிடக்கும் அழுக்கடைந்த நீரைப் போலவே எப்பொழுதும் அழுக்கடைந்திருக்கிறது. தூய்மையடையவில்லை. இந்நிலையைப் போக்க நான் எண்ணற்ற உபாயங்களை நினைத்தேன். ஆயினும் துளசிதாசனான எனது மனக்குழப்பம் சிரோண மணியினை அறியாமல், ஈஸ்வரஞானம் பெறாமல் விலகாது.

## 236

ஏ, ஜீவனே! நீ ஜானகிநாதரை அறிந்துகொள்ளா விட்டால் உனது எல்லாக் கர்மங்களும் தர்மங்களும் துன்பத்தையே அளிக்கும். புத்திசாலிகள் இப்படித்தான் கூறுகிறார்கள். வேதங்களிலும் புராணங்களிலும் கூறப்பட்டுள்ள அனைத்து தேவர்களும் சித்தர்களும் பெரிய பெரிய முனிவர்களும் யோகிகளும் முதலில் பூஜையை ஏற்றுக்கொண்டுதான் அதற்குப் பதிலாக அதன் நன்மை தீமைகளை அனுமானித்து இன்பமளிக்கிறார்கள்.

தன் நாமத்தைத் தவறுதலாக ஸ்மரணை செய்த போதும் பாபத்தை போக்கக் கூடியதாக வேறு யாருடைய நாமமிருக்கிறது? அஜாமிலன், கஜேந்திரன், கழுகு முதலான கோடித் துஷ்டர்கள் யாரால் ஏாக்கப் பட்டார்களோ, எந்த பிரபு தன் பக்தர்களின் மலை போன்ற தோஷங்களை மறந்துவிட்டு தூசியைப் போன்ற நற்குணங்களிடம் நாட்டம் செலுத்தினாரோ, துளசிதாஸ்! மூடனே! இப்போதும் நீ எல்லா ஆசைகளையும் விடுத்து அந்த சுவாமியை ஏன் ஜபிக்கவில்லை?

## 237

நாவே! நீ ஸ்ரீராமருடைய புகழை ஏன் பாடுவதில்லை? இரவும் பகலும் மற்றவர்களின் இகழ்ச்சியைக் கூறிக்கூறி வீணாக உலகப் பற்றை வளர்த்துக் கொள்வதேன்? மானிடரின் வாயெனும் அழகிய புனிதமான கோவிலில் இருந்துகொண்டு அதனை வெட்கமடையும்படிச் செய்யாததே! சந்திரனுக்கருகில் இருந்தும் அமுதத்தை விடுத்துச் சூரிய கிரணத்தால் ஏற்படும் கானல் நீருக்காக ஏன் ஓடுகிறாய்? (இங்கு நலம் புத்தகங்களே சந்திரன், பகவானுடைய புகழே அமுதம். உலகப் பற்றே கானல் நீர்.)

கலியுகமெனும் அலிக்கு (மலர் வைக்க) போகக் கதையெனும் சந்திரனைக் காது கொடுத்து கேட்க நீ மிகவும் பிரியப்படுகிறாய். அதை விடுத்து (பிறரினப் சர்ச்சையை விடுத்து) பகவானின் அழகிய புகழினை வாணனை செய்து காதின் களங்கத்தைப் போக்குவாயாக!

அறிவெனும் பொன்னையும் யுக்தியெனும் அழகிய மாணிக்கத்தையும் சேர்த்து ஆபரணமாக்கி, அதை அடைக்கலமடைந்தவர்களுக்குச் சுகமளிக்கும் ரவிகுல,—கமல—திவாகர் பேரரசர் ஸ்ரீராமருக்கு அணிவிக்க வேண்டும். வாத, விவாதத்தின் ருசியை விடுத்து ஈசுவர பஜனை செய். அதோடு அவருடைய சுவை நிறைந்த சரித்திரத்தில் மனதைச் செலுத்து. இதனால் துளசிதாசர் பிறவிப் பெருங்கடலை நீந்திவிடுவார். அதனால் உனக்கும் மூவுலகிலும் புனிதமான புகழ் கிடைக்கும்.

## 238

ஹே தலைவனே! தமது நலன் உன்னிடமதான் இருக்கிறது என்பதைப் புரிந்துகொண்டால் ஜனங்கள் உடலில் தலையிருக்கிற உணர்விருக்கும்போதே முண்டங்களைப் போல ஏன் சண்டை போடுவார்கள்? ஹே ராமா! எனது துர்க்குணங்களையும் உனது குணங்களையும் கண்டும் கேட்டும் எனது புத்தியும் மனமும் கவலைப் படுகின்றன. (அதாவது எனது துர்க்குணங்களைக் காணும்போது மனமுடைந்துவிடுகிறது. உனது நற் குணங்களைக் கேட்கும்போது உனது சரணாரவிந்தங்களில் அடைக்கலம் புக ஆசை ஏற்பட்டுவிடுகிறது) ஹே, தயாளனே! இந்தத் துளசிதாசனாகிய எனது சுபாவத்தையும் நான் கூறுவதையும் என் நினைவையும் எல்லாமறிந்த உன்னைத் தவிர வேறு யார் புரிந்து கொள்ள முடியும்?

## 239

யாரைப் பகவான் உறுதியாகத் தனதாக்கிக் கொண்டாரோ அவர்களே நற்பண்புடையவர்களாகவும் பவித்ரமானவர்களாகவும் கல்வி, கேள்விகளில் சிறந்தவர்களாகவும் இருக்கின்றனர். பாண்டவர்களின் பிறப்பையும் செயல்களையும் கேட்ட சனமார்க்கம் பயந்துவிட்டது. ஆனால் அப் பாண்டவர்களே (பரமாத்மாவின் கருணையினால்) மூவுலகிலும் பூஜிக்கத் தகுந்தவர்களாயினர். அவர்களுடைய புனிதமான புகழைக் கேட்டு கேட்டே ஜனங்கள் (பிறவிப் பெருங்கடலை) கடந்துவிடுகிறார்கள். ஆனால் நுருக அரசன் வேதங்களில் கூறப்பட்டுள்ளபடி தர்ம பரிபாலனம் செய்துவந்த போதிலும், எந்த தோஷமுமின்றியே பச்சோந்தியாகிக் குளத்தில் விழுந்து

விட்டான், ஆனால நீ அவனது கையைப பிடிததுக் கரையேற றினாய. அனைத்துப பிரம்மாண்டததையும் பஸபமாக்க வலல பிரமமாஸதிரத்தினால பாகூித அரசன்* காபபத்தில அழியவிலலை. ஆனால மரணமறற, வஜ்ராயுதத்தால்கூட அழிக்க முடியாதவன (நமுசியெனும் அரக்கன்)* கடல நுரையினால மரணமடைநதான். அஜாமிலனெனனும பிராமணன மறறும் இந்திரனால் செய்யப்படாத காரியமதான் எனன? இருவருமே பெரும் பாவஙகளைச செய்தவர்கள். ஆயினும பரமாதமா அநத இருவருக்கும பேருதவி செயது அவாகளது மன இருளைப போக்கிவிட்டார். வேசி மறறும் காமதேவனால உலகில பாவம் செயவதிலிருநது யாரும தபபவிலலை. ஆனால அவாகளது வாழ்க்கையை பவித்ரமானதெனறு கருதிப பகவான அவர்களுக்குத தன் இதயக கோவிலில் இடமளித்தாா. எப பழக்கததினால பிரபு சந்தோஷமடைவாரோ, தெரியவிலலை. ஆனால் துளசிதாசனாகிய நான் ஸ்ரீ ரகுநாதரின் கருணையை எதிா நோக்கிக் காத்திருககிறேன.

---

* பாண்டவர்களைச் சநததியறறவாகளாககும எணணஙகொண்டு அசுவத்தாமன் பரிகூித் அரசனைக் கர்ப்பத்திலேயே அழிக்க பிரம்மாஸ்திரத்தை உபயோகித்தான ஆனால் கிருஷ்ணபகவானின் சக்ராயுதத்தால் கர்ப்பததிலிருந்த பரீகூித் அரசன காப்பாற்றப்பட்டான

* விபரசித்தனின புதலவன நமுசியெனும் அரக்கன கடுந தமிருந்து பிரம்மாவிடம ஆயுதத்தாலோ, உலர்ந்த மற்றும் நனைந்த பொருளாலோ இறக்காத வரத்தைப் பெற்றான். பின்பு தேவர்களைக் கொடுமைபடுத்த ஆரம்பித்தான். இந்திரன் கோபமடைந்து வஜ்ராயுதத்தை உபயோகித்தபோதும இவனைக் கொலல முடியவில்லை. இறுதியில் 'இவன ஆயுதத்தால் இறககமாட்டான கடல் நுரையால் கொலலுங்கள்' எனற அசரீரி கேட்டது இறுதியில் கடல் நுரையினால அவன் கொல்லப்பட்டான்

## 240

ஹே ராமா! நீ யாரமீது சநதோஷமடைநதாயோ அவாகளே புணயாதமாவுடையவாகள, புனிதமான வாகள. வேசி, கழுகு, வேடன் முதலானோரா வைகுணடததை அடைநதனா. அவாகள பிரயாகையில் வரடடியில தன உடலை எரிததுககொண்டது எப்போது? நுருக அரசனின காலசள தாம மாாகத்திலிருநது ஒருபோதும விலகாதபோதும எவ்வளவோ கஷ்டங் களை அனுபவிகக வேணடியிருநதது என்பதை இவவுலகம அறியும.

கஜேநதிரன எநத சிடசையைப பெறறதெனறு ஒரு முறை ஸமரனை செயதவுடனேயே நீ கருட வாகனததை யும விடுத்து சகராயுதத்துடன் ஓடிவநதாய? தேவாகள், முனிவா, பிராமணர், முதலான உயர்ந்த குலததை விடடு நீ கோகுலததில ஒரு கோபியின வீடடில வளாநதாய? நீ துரியோதனனின வைபவததைப பொருட்படுத்தாமல் விதுரனின* வீடடில உணவருநதினாய. நீ உனது பக்தர் களுககு நனமையைச் செயவதே நலலதெனறு நினைக் கிறாய. இநத நியமததைச சிறிதளவு அாசுனனுக்கு உணாத்தியிருககிறாய.

---

* ஒரு முறை துரியோதனன பகவன கிருஷ்ணரை அழைததிருநதான அவனுடைய கபடத்தை அறிந்த கிருஷ்ணா அவரிடம் நேரே செல்லாமல் விதுரனின வீட்டிற்குச சென்றார். விதுரனின மனைவியிடம் உணவளிக்கும்படி கேட்டார். விதுரனின மனைவியும் சிறிதளவு உணவையும சில வாழைப்பழங் களையும் கொணடு வந்து பேரானந்தத்தில மூழ்கியவளாய வாழைபபழங்களை உரித்துக் கொடுக்கும்போது பழத்தைக் கீழே போட்டு விடடு கிருஷ்ணருக்குத் தோலைக் கொடுத்துக் கொணடிருநதார் பகவானும அன்புடன் அதைச சாப்பிட்டுக கொண்டிருந்தார விதுரன வந்தவுடன இதைக கணடு மனைவியை விலக்கித்தானே பழததை அளிக்க ஆரம்பிததான அதைச சாப்பிட்ட பகவான் தோலில இருந்த சுவை பழத்தில இல்லையென்று கூறி அதைச் சாபபிட மறுத்தார

ஸ்ரீராமா இயற்கையாகவே அன்பின் வசமானவர். மற்ற சாதனங்களெல்லாம் நீரின் மிருதுத் தன்மையை ஒத்தவையே. (நீர் பட்டவுடன் சிறிது நேரம் சரீரம் பளபளப்பாகத் தோன்றும். ஆனால் சிறிது நேரத்திலேயே தண்ணீர் உலர்ந்தவுடன் சரீரம் வறண்டுவிடும். அதே போன்று அந்நிய சாதனங்களால் கிடைக்கும் க்ஷணநேர சுகமும் ஆசையெனும் காற்றுப் பட்டவுடனேயே பறந்து விடும்.)

## 241

ஏன் என்னைப் போன்ற துஷ்டர்களுக்குப் பிடிவாத மாக இன்னும் முக்தி அளிக்காமலிருக்கிறாய்? எந்தப் பாவியாவது எவ்வகையிலாவது உன் நாமத்தை உச்சரித்த உடனேயே அதைக் கேட்டு நீ ஆதரவுடன் முன் சென்று அவர்களை ஏற்றுக் கொள்கிறாய். யம தூதர்கள் அஜாமிலனைப் பாபத்தின் இருப்பிடமென்று அறிந்து மனதில் கோபத்துடன் அதட்டித் துன்புறுத்தியபோது நீ அவனை விடுவித்துவிட்டாய் அந்த யமதூதர்கள் கோபமடைந்து கையைப் பிசைந்துகொண்டும், பற்களைக் கடித்துக்கொண்டும் போய்விட்டார்கள். கௌதமரின் மனைவி (அகலிகை) கஜேந்திரன், கழுகு (ஜடாயு) விருட்சம் (யமலார்ஜுனன்) வானரம் மற்றும் இது போன்றவர்களிடம் நீ காட்டிய அன்பு யாவரும் அறிந்ததே! எப்போதெல்லாம் அவர்களுக்குத் தேவை ஏற்பட்டதோ அப்போதெல்லாம் நீ உனது சாது சமாஜத்தை விட்டுவிட்டு அவர்களிடம் சென்றுவிட்டாய். இப்பொழுதும் உனது வாசலில் பாவிகளுக்கு ஆதரவு உள்ளது. இருப்பினும் எனது கூக்குரல் மட்டும் உனக்கு ஏன் கேட்கவில்லை? இங்கு எத்தனை பாவிகள் புனித மடையவில்லை? ஆனால் உலகில் எத்தனை போ பாவி

களாக இருந்தார்களோ, பாவிகளாக இருக்கிறார்களோ பாவிகளாக இருப்பார்களோ அத்தனை பேரையும் ஒரு தராசில வைத்தால என்னைவிட தாழநதுவிட மாட்டார் கள. இப்பொழுது வரை உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருநதேன். ஆனால நீ என் பக்கம் பார்வையைச் செலுத்தவிலலை. நடிகர்களுக்குச் சரியான வருமானம இலலாதபோது துணியில ஒரு பொம்மையைச் செய்து மூங்கிலில கட்டிக்கொண்டு இந்த அனாதையைப பாருங்கள் என்று சுற்றித்திரிவார்கள். அப்போது மற்றவர் கள வெட்கமடைந்து எதையாவது அவர்களுக்குக் கொடுப்பார்கள். அதைப போலவே நானும் உனது நாமத்தின பொம்மையைச செய்து கட்டிக்கொண்டு திரிவேன். ஏனெனிலெனனால இவவளவு கஷ்டத்தையும் சகிக்க முடியவிலலை.

## 242

ஹே ஸ்ரீராமச்சந்திரா! உன்னை ஒதத தீனபநதுவோ என்னை ஒதத வேறு ஏழையோ யாருமிலலை. தலைவனே! உலகில என்னைப போன்ற துஷ்டசிரோன்மணியும் இலலை, உன்னைப போனறு பாபத்தைப போக்குபவரும் யாருமிலலை. மனம, வாக்கு, காயத்தால பாபத்தில் மூழ்கி இருக்கிறேன. நீ கருணையின் இருப்பிடம், பாவி களுக்கு மோட்சத்தை அளிப்பவன.

ஹே பிரபோ! நான ஒரு அநாதை, நீ அநாதைகளை ரட்சிப்பவன என்ற உண்மையை எப்போதும் என் மனதை விட்டு நீக்க முடியாது. நான துக்கத்திலிருக்கிறேன, நீ துக்கத்தை அழிப்பவன. உனது புகழை வேதங்களும் புராணங்களும பாடி இருக்கினறன. நான பயமடைந்து இருக்கிறேன, நீ எலலா பயத்தையும போக்குபவன.

அப்படியிருக்க என்ன காரணத்தால் என்மீது கருணை காட்ட மறந்துவிட்டாய்?

ஹே ஸ்ரீராமா! நீ ஆனந்தத்தின் இருப்பிடம், சோர்வினைப் போக்குபவன். நான் துயரத்திலிருக்கிறேன். நான் மூன்று வகையினாலும் ஏற்படும் துன்பத்தை அடைந்திருக்கிறேன். எனது துன்பத்தைப் போக்க வேண்டுகிறேன். இதையெல்லாம் உன் மனதில் ஆராய்ந்து உனது பெருமையை உணர்ந்து இந்தத் துளசிதாசரையும் உனது அடைக்கலத்தில் வைத்துக்கொள்வாயாக!

## 243

ஹே தலைவனே! வேதங்களும் புராணங்களும் கூறுவதைப் போன்று உன்னைத் தவிர தன்னலமற்று நன்மை செய்பவர்கள் வேறு யாருமில்லை என்பதை அறிந்தே உனது சரணங்களில் மனதைப் பறி கொடுத்திருக்கிறேன். நான் எங்கெல்லாம் பிறந்தேனோ அங்கெல்லாம் எனக்குத் தாய், தந்தை, புதல்வர், மனைவி சகோதரர் மற்றும் உறவினர்கள் கிடைத்தனர். ஆனால் எல்லோருடைய அன்பும் சுயநலமுடையதாகவே இருந்தது. மற்றும் எல்லோரும் கபடமனம் படைத்தவர்களாகவே இருந்தனர். ஏனெனில் யாரும் பகவத் தியானம் செய்யும்படி எனக்கு உபதேசம் செய்யவில்லை. நான் மானிடப் பிறப்பெடுத்து தேவர், முனிவர், மானிடர், ராட்சதர், ஆதிசேஷன், கின்னரர் ஆகிய யார் முன்னால் தான் தலை வணங்கவில்லை?

ஹே ஹரே! நான் எனது பாபங்களின் காரணமாக மூன்று தாபங்களாலும் பீடிக்கப்பட்டுத் திரிந்தேன். ஆனால் யாரும் கருணையுடன் என்னைச் சாந்தப்படுத்த

விலலை. சுகததிறகாக நான பல முயறசிகள செயதேன. ஆனால பகவானின திருவடிகளிடம விரோதித்துச் சொணடிருநததால எபபோதும எனககுத துனபமே கிடைத்தது. உலகில விபததுககளின வலை விரிததிருப பதைக் கணடு, நீரில இலலாத படகைப போனறு நகர முடியாமல் இருபபது போனறு தளாநதுவிடடிருககிறேன.

ஹே தலைவா! எனது நிலையையும கொஞசம் கேடக வேணடுகிறேன. நான எனது ஆனநததின இருபபிட மான சுவாமியை மறநதுவிடடதாலேயே எனககு இநத நிலைமை ஏறபடடிருக்கிறது. ஹே பிரபோ! இப்பொழுது நீ கோபததை விடுத்து அடைககலம் புகுந்த இந்தத் துளசிதாசருககு கருணை காடடு. ஏனெனில் இபபோது இந்தத தாசன உனனிடம சரணடைநதிருக்கிறான.

## 244

ஸ்ரீரகுநாதா! என இதயக கமலததிலிருககும உன்னை விட்டுப பயததால வியாகூலமடைநது அங்குமிங்கும் வெளியே சுறறிக கொணடிருநததால் நான் எனது ஞானததை வீணாகச் செலவு செய்துவிடடேன. இது கொஞ்சமும் அறிவறற மான், தன் உடலிலிருக்கும அழகிய கஸதூரியின ரகசியததை அறியாமல் அநத வாசனை எஙகிருநது வருகிறதென்று அறிய மலைகளிலும், மரங்களிலும பொநதுகளிலும தேடிக கொணடிருப்பது போனறிருககிறது. ஏரியில அழுக்கற்ற நீர நிறைந்த போதிலும மேலே தோனறும சிறிதளவு நீர்பபாசியையும் புலலையும் கண்டு அந நீரைப பருகாமல் தாகத்தால் இதயத்தை எரித்துக் கொணடிருக்கிறேன். இவ்வாறே நீரின்றியே தாகத்தைத் தணிய வைக்க விரும்புகிறேன.

(அதாவது இநயக் கடலில பரமாத்மாவின நிரமல ஜலம் நிறைந்திருக்கினற போதிலும, அறியாமையினால, ஆத்மானந்தத்தினால தாகத்தைத தணிய வைக்காமல் கானல் நீரைபபோன்ற உலக இனபங்களினால தாகததைத தணியவைக்க விருமபுகிறேன.) உடலில் மூனறு தாபங்களின பயஙகரம் பரவி இருப்பதால் சகிக்க முடியாத தரித்திரம் துன்புறுத்திக கொண்டிருககிறது.

எனது வீட்டில ராமநாமமென்னும் கறபக விருட்சத்தை விடுதது சிற றின்பமெனனும் கருவேலமரத் தோட்டத்தில மனததைச் செலுத்திக கொண்டிருக் கிறேன. உன்னை ஒதத ஞானக களஞ்சியமும் என்னை ஒத்த மூடனும வேறு யாருமிலா. இவ விஷயம புராணத தில் கூறபபட்டிருககிறது. ஹே துளசிதாசரின பிரபு ஸ்ரீராமா! இதைபபறறி உளளததில நன்கு சிநதனை செய்து எது நலலது என்று தோனறுகிறதோ அதையே செய்யவும.

## 245

இநத மூடமனம எனனை நனறாகவே சாவநாசம் செயதுவிட்டது. ஹே கருணைமயமானவனே! கேள, இதனால உலகில நான பிறபபெடுதது எடுத்துச் என் கஷ்டஙகளைச சொலலி அழுதுகொணடிருந்தேன். குளுமை பொருநதிய, மதுரமான, அமுதம் போன்ற பரமானநதத்தின அருகே இருநதும் நான என வாழ நாளை நிறைய வீணாககிவிட்டேன. பேராசையினால பலவிதமான முயறசிகளை வீணாகசசெயது என மூட மனம நீரைக கடைந்தது. சிற றின்பமெனனும நீரைக கடைந்து பரமானநதமெனனும நெய்யை எடுகக விரும்பினேன். கர்மததின சேற்றினை மனதில் நனகறிந

திருநதும் அதிலேயே மனத்தைப பளபளபபாக்க அழுக்கிலேயே அழுகைக கழுவ நினைக்கிறேன. தாகததைத தீர்க்க கங்காதேவியை விடுதது இந்த மூடன மீணடும் மீணடும் வியா கூலததுடன ஆகாயததைப பிழிநது கொணடிருநதேன. (உண்மையான சுகத்திற காகத துனபமயமான சிற றினபததில மூழ்கி இருநதேன்.)

ஹே பிரபோ! இபபொழுது இநதத துளசிதாசர்மீது கருணை காடட வேணடுகிறேன். ஏனெனில் நான எனது தோஷஙகளைக கொஞசம்கூட மறைககவில்லை. ஹே தலைவனே! படுக்கையை விரிபபதிலேயே இரவு முழுவதும கழிநதுவிட்டது. ஒருபோதும நலல தூக்கம தூங்கவில்லை. தந்திரம செய்வதிலேயே வாழ்நாள் முழுவதும் கழிந்து விடடது. ஆதமசுகத்தை அனுபவிக்கவிலலை.

## 246

வேதஙகளிலும, பிரசித்தமான இநத உணமையைக கேடடறிநத பினபு உலகிலும் அறியாமையில் மூழகிய எனது வியாகூலப புத்தி ஒருபோதும ஸ்திரமடைவ திலலை என்று தெளிவாகிறது. ஹே ராமா! சிறியோா, பெரியோா, நல்லோா, தீயோா, பரமஞானவா, மெலிந்தோா ஆகிய எலலோருடைய பராமரிப்பும் உனனுடைய பராமரிபபிலதான நடநது வருகிறது. இநதப புத்தி என வசத்தில இருநதிருக்கு மானால ஒரே நிலையில் இருநதிருககும். உலகின சந்தோஷத்தையும் பயத்தின துன்பத்தையும் சகித் திருககாது. யார், யார் எதை விருமபுகிறாரகளோ, அவர் கள அதையே பெறுகிறாாகள. எவ்விதத்திலும் எந்தவித மான அபிலாஷையும் பாக்கி இருபபதிலலை. காமம, காலம், சுபாவம, குணம், குறறம, உயிா, உலகம யாவும் எநத மாயையைக கணடு பயபபடுகின்றனவோ அந்த

மாயையே பயத்துடன் உனது புருவத்தை நோக்கிப் பார்த்துக்கொண்டிருக்கின்றது. மும்மூர்த்திகளையும் திக்பாலர்களையும் யோகீஸ்வரர்களையும் முனீஸ்வரர் களையும் நீ விடுவித்ததால்தான் இந்த மாயை அவர்களை விடுகிறது. நீ பிடிக்கவைப்பதால் பிடித்துக்கொள்கிறது. மரத்தாலான அரசர் முதல் ஆண்டான் வரையிலான சதுரங்கக் காய்களைக் கொண்ட சதுரங்கத்தைப் போன்றது இந்த மாயையின் ராஜ்யம். ஹே மகாராஜனே! இந்தச் சதுரங்கப் பந்தயம் உன்னாலேயே ஆரம்பிக்கப் பட்டது. அதற்குமுன் இது கிடையாது. துளசிதாசனின் ஹே தலைவனே! இந்தச் சதுரங்கத்தின் வெற்றி, தோல்வி இரண்டும் உன்கையில்தான் இருக்கிறது. இதை சரஸ்வதி பல ரூபங்களிலும், பல வாயிலிருந்தும் வெளிப்படுத்தி இருக்கிறார்.''

## 247

ஏ நாவே! நீ இதை அறிந்து விசுவாசத்துடனும் அன்புடனும் ராமநாமத்தை ஜபிப்பாயாக! ராமநாமத்தை ஜபித்தால் உனது இதய தாபம் தணியும். ராம நாமத்தோடு தொடர்புகொண்டு ராமநாமத்தையே உச்சரித்துக் கொண்டிருந்தால் துஷ்ட கலிகாலத்தின் பாபங்களையும் பயத்தையும் துன்பத்தையும் போக்க முடியும். ராமநாமத்தின் மகிமையாலேயே கணபதி* வணங்கப்படுகிறார். தான் செய்தவை அனைத்தையும் மறைக்காமல் தானே கூறி இருக்கிறார்.

---

* முதலில் கணபதி மிகவும் தீயவராக இருந்தார் பல முனிவர்களையும் கொன்றுவிட்டார். இதனால் சிவபெருமான் இவரது தொந்தரவினால் வருந்தி முறை ஸ்ரீராமரிடம் முறையிட்டார் ஸ்ரீராமரும் கணபதிமுன் தோன்றி சகஸ்ர ராமநாமத்தை ஜபி என்று கூற, கணபதியும் அவ்வாறே செய்ததினால் மங்கல மூர்த்தியாகிவிட்டார்.

இந்த நாமம் பிறவிக கடலைக் கடகக உதவும் தோணியாகும். மறறும காசியில் முகதியைப் பெறுவதறகும் மூலகாரணமாகும். ஏனெனில சிவபெருமான ராமநாம தாரக மநதிரததை உபதேசிபபதனமூலமே ஜீவனகளை முகதியடையச் செயகிறாா. இதை பகவான சிவபெருமான தனது துணைவி பாாவதிதேவியுடன மிகக மரியாதை யுடன ஜபிததுக கொணடிருக்கிறாா. வாலமீகி வேடனாக இருநதபோது, ஆழஙகாணமுடியாத குறறக கடலாக இருந்தாா. ஆனால (மாறுதலாக) மரா—மரா' எனறு ஜபித்த மகிமையால் அவா முனிவர்களாலும தேவா களாலும் பூஜிககபபடடாா.

அகததிய முனிவரும் ராமநாமத்தின பலததினால் தான விந்தியமலையை நகாத்தவும் சமுத்திரத்தை வறற வைககவும் முடிநதது. பிறகு அப பிராமணருககு (அகததியருககு) பயநதே கடல தனது தோலவியை ஒப்புககொணடு உபபுகரிபபதாயிறறு (அதாவது அகததிய முனிவரோ மற்ற பிராமணாகளோ அதை உபபுகரிககிற தெனறு நினைத்து மநதிரததுடன பருகாமல இருக்கும். பொருட்டே) ஆதிசேஷன், சுகதேவா, பண்டிதா, வேதங கள் யாவரும அவரவாகளது அறிவுக்கேற்றவாறு வணஙகி அந நாமததை வர்ணனை செய்யும்போது ராமநாமம் மகிமை பொருநதியது எனறு கூறி இருக்கிறாாகள்.

---

விநதியமலை தனனுளிருக்கும் மரஙகளைச் சூரியனின் கொடுமையான கிரணஙகளிலிருந்து காப்பாற்ற தன உயரத்தை அதிகமாக்கிக கொண்டே போயிற்று அனைததுத் தேவர்களும் அகத்திய முனிவரிடம் முறையிட அவரும் ராமநாமத்தை ஜபித்து அம்மலையின சிரசின்மீது கை வைத்து ' நான் திரும்பி வரும்வரை நீ இது மாதிரியே இருக்ககடவாய்'' எனறு கூறினார். அதன் பிறகு அநத இடத்திற்கு அகத்தியரும திரும்பவில்லை; மலையும அன்று இருந்தது போலவே இருந்துவிட்டது.

ராமநாமத்தில் அன்பு கொள்வதென்பது துளசிதாச னாகிய எனக்குக் காமதேனு மற்றும் கற்பகவிருட்சத்தைப் போன்றது. இந்த ராமநாமம் அறியாமையென்னும் இருளைப் போக்கவல்ல சூரியனைப் போன்றது.

## 248

ஹே ராமா! காப்பாற்று, காப்பாற்று! ஹே மங்களத் தின் சொரூபமான ராமபத்ரனே! ராமச்சந்திரா! காப்பாற்று! உனது நற்புகழைக் கேட்டு உன்னிடம் அடைக்கலம் புகுந்திருக்கிறேன். ஹே தீனபந்து! நீ ஏழ்மை, தரித்திரம், பொறாமை, தோஷம், துன்பம், அளவற்ற பயம் ஆகிய பாவங்களைப் போக்குபவன். எப்போதெல்லாம் உலகம் பந்தமெனும் வலையினால் — காமம் மற்றும் காலத்தினால்—வியாகூலமடைந்த தீய அரசர்களால் பூமிபாரம் அதிகமாகிறதோ அப்போதெல் லாம் நீ சரீரத்தைப் பெற்று (அவதாரமெடுத்து) பூபாரத் தைக் குறைத்து முனிவர்களையும் தேவர்களையும் வாழ வைத்து ஆசிரம, மற்றும் வர்ண விதிகளை ஸ்தாபித்தாய்.

ராவணன் யாரையும் மகிழ்ச்சியாக இருக்கவிடாமல், அவனது சிறைச்சாலையில் மரணமற்ற தேவர்களும் மரணமடைய ஆரம்பித்ததும், அந்த நேரத்தில் ஹே திரிலோகநாதனே! நீதான் இந்திரன், குபேரன் முதலான தேவர்களுக்கு அடைக்கலமளித்து பயத்தைப் போக்கினாய் என்பதற்கு ஜனங்களும் நான்கு வேதங்களுமே சாட்சி யாகும். உன்னுடைய கருணையினால் உனது ராஜ்யம் (ராமராஜ்யம்) நான்கு தர்மமும் (சத்யம, தவம, கருணை, தானம்) நிறைந்து செழிப்படைந்தது. ஹே கருணை மயமானவனே! அகலிகை, வேடன், ஜடாயு, வானரம், மலைவாசி, சபரி, ராட்சதர் முதலானவர்களை உன்

எண்ணமே முக்தியடையச் செய்து மற்றவர்களுக்கும் அவர்களே முக்தியளிக்கும்படியாகச் செய்துவிட்டது. ஆயினும் கஜேந்திரனைக் காப்பாற்றியவனே! ஹே நலவொழுக்கக் கடலே! உனது தாமததைக் கண்டு இந்தத் துளசிதாசன் வேதனையால் இறக்க விரும்புகிறேன்.

## 249

உலகில் எத்தனை தலைவர்களிருக்கிறார்களோ அத்தனை பேரையும் நன்கு தெரிந்து புரிந்துகொண்டேன். அவர்கள் கொஞ்சத்தில் சந்தோஷமடைந்துவிடுகிறார்கள், கொஞ்சத்தில் கோபம் கொள்கிறார்கள். அவர்கள் அன்பிற் சிறந்தவர்களோ, பண்புடையவர்களோ இல்லை. நியமத்தில் தூய்மையற்றவர்கள். ஏனெனில் அவர்களைக் காலம், கர்மம், மாயை ஆகியவை தமதாக்கிக் கொண்டிருக்கின்றன.

ஹே தலைவனே! தம் தலைவர்களின் பலத்தின் பிரமையில் மகாமூடர்களும் அரக்கர்களும் தலைமேல் ஏறிக்கொண்டு மக்களை வெல்வதில் சமர்த்தர்களாகி விட்டனர். அவர்களது தலைவர்களோ முதலில் சந்தோஷமடைந்து வரத்தை அளித்துவிட்டுப் பின்பு கோபமடைந்து அவர்களுடைய வீட்டையே நாசப்படுத்திவிட்டனர். யாரும் தனது செயலுக்காக வெட்கமடையவில்லை.

ஹே ராமா! சேவை செய்பவர்களிடம் நீ எச்சரிக்கையாகவே இருக்கிறாய். அதாவது முதலில் கருணை காட்டி விட்டுப் பின்பு கோபப்படுவதில்லை. சாமர்த்தியசாலியாகவும் திறமைசாலியாகவும் நற்குணங்களின் இருப்பிடமாகவும் தூய்மையாகவும் நீதான் இருக்கிறாய். அழகிய வதனத்தையும் மாறுபாடற்ற ஒரே ரூபத்தையும் உடைய

உனது விசேஷ சரீரத்தின் ஞாபகம ஏறபடுகிறது. உனனை ஒதத கருணையுடன சரணாகதி அடைநதவாகளைக் காப்பவரும எனனை ஒதத ஏழ்மைப பிணியால் வாடுகிற வரும் வேறு யாருமிலலை, தேவா! தயையில்தான எலலா தர்மஙகளும் அடஙகி இருக்கின்றன. நீ கறபகவிருட்சம். எனது மனம் அநதக கறபகவிருட்ச நிழலையே நாடுகிறது. எனனை உனக்கு அர்ப்பணிக்கிறேன! கலியுகத்தின் அதர்மததினால் இநதத துளசிதாசன நிமமதியற றிருக கிறேன்.

## 250

ஹே தலைவனே! எனககு வேறு தலைவரோ, வேறு இருபபிடமோ இருககுமேயாகில உனனை அடிககடி கூபபிட்டுக் கோபமடையச் செய்திருககமாட்டேன. எனனைப போன்ற சோம்பேறியையும் அபாக்யவானை யும் கருணை மயமான நீயே வளர்த்து ஆளாககினாய. எனனைப பொறுததவரை ஸ்ரீராமச்சநதிரரே எனது தலைவா, அயோத்தியே எனது இருபபிடம. திகபாலா களுககோ, சூரியனுக்கோ, விநாயகருககோ, பாாவதி தேவிக்கோ யாருககும நான சேவை செயததிலலை. பிரம்மா, விஷ்ணு, சிவபெருமான ஆகியோரையும் நான எனனைக காபபாற்றுபவர்கள் என்று நினைககவிலலை. எனது யோகம, க்ஷேமம், நியமம், அனபு, உறுதியாவும் ஸ்ரீராமநாமத்திலதான இருக்கிறது. எனககு உன்னுடைய அன்பு அமுததைப போன்றும வேறு சாதனஙகள விஷததைப் போனறும தோன்றுகின்றன.

ஹே அநாதைகளின தலைவனே! நான என்னுட னிருககும் (காம, குரோத முதலான) விஷயங்களைபபற்றி யாரிடம் கூறுவேன? ஏனெனில திருடாகளும காவலகாரா களும உனனிடமே இருக்கிறாாகள. ராஜராஜேஸவரனே!

நீ உனது காரியத்திலோ, தேவர்களின் காரியத்திலோ மற்றும் ஏழை எளியவர்களின் காரியத்திலோ எப்போதாவது தாமதம் செய்திருக்கிறாயோ? பின் ஏன் எனது விஷயத்தில் மட்டும் இவ்வளவு தாமதம் ஆகிக் கொண்டிருக்கிறது. உன்னுடைய (ஏழைகளைக் காக்கும்) நியமத்தைக் கேட்டு உன்னிடமே எனக்கு விசுவாசமும் அன்பும் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் கலிகாலத்தின் தீய செயல்கள் எங்கே என்னைப் பகவத்பிரீதியிலிருந்து அகற்றிச் சிறதின்பங்களில் செலுத்தி விடுமோவென்று பயப்படுகிறேன். ஹே ராமா! என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். "ஹே துளசி! நீ என்னுடையவன், உள்ளத்தில் தோல்வி ஏற்படுமோ என்று நினைத்து பயப்படாதே" என்று நீயே கூறிவிடு. அல்லது பிறர் வாயிலாகவ (ஹனுமார் வாயிலாக) கூறிவிட்டாலகூட நலமாக இருக்கும்.

## 251

ஹே ராமா! சிவபெருமான், ஹனுமார், லட்சுமணா, பரதர் ஆகியோர் உனது சுபாவம், குணம், நல்லொழுக்கம், மகிமை மற்றும் பிரபாவத்தை நன்கறிந்திருக்கிறார்கள். அவர்களது உள்ளமெனும் அழகிய பூமியில் ராமஅன்பெனும் கற்பகவிருட்சம் காட்சியளித்துக் கொண்டிருக்கிறது. அது சுகமெனும் அழகிய பூக்களையும் சுவையுள்ள பழங்களையும் அளிக்கிறது. நீ உனது சுபாவப்படி (சிவபெருமானை) தலைவனாகவும் (ஹனுமாரை) தோழனாகவும் (லட்சுமணர் மற்றும் பரதரை) அன்பு சகோதரனாகவும் கருதுகிறாய். ஆனால் அவர்கள் உன்னைத் தனது தலைவரென்று நினைத்து உன்னிடம் பயப்படுகிறார்கள். தலைவன் மற்றும் சேவக

உறவின் நியமம், பேரன்பு, நியாயம் ஆகியவற்றைக் காப்பாற்றுவதில் அவர்கள் சிறிதும் தளரவில்லை. அதாவது நீயும் அவர்களை அலட்சியப் படுத்தவில்லை. சிவபெருமானோ, அனுமாரோ, லட்சுமணரோ, பரதரோ கூட தன் நிலையிலிருந்து தவறவில்லை.

சுகதேவர், சனகாதி, முனிவர்கள், பிரகலாதன், நாரதர், முதலானோர் ஸ்ரீ ராமரின் பக்தியை பெரும் வைராக்கமுடையவனே அடையமுடியுமென்று கூறுகிறார்கள். ஆனால் சாமான்ய ஞானமின்றி பக்தி வராது. அதை அடைவது உன் கையிலேதான் இருக்கிறது ஹே தலைவனே! இதை அறிந்தே புத்திசாலிகள் உனது கால்களில் வீழ்கிறார்கள்.

ஆறு சாஸ்திரங்களின்* அபிப்ராயங்களும் ஒன்றுக் கொன்று முரணாகவே இருக்கின்றன. புராணங்களின் அபிப்ராயமும் ஒரே மாதிரியாக இல்லை. வேதங்களோ இவ்வளவே இல்லை, இதுவே இல்லையென்று கூறிக் கொண்டிருக்கின்றன (அதாவது பரமாத்மாவின் உண்மை சொரூபத்தை வேதங்களிலிருந்தும் சாஸ்திரங்களிலிருந்தும் புராணங்களிலிருந்தும் சரியாக அறிய முடியாது.) இதனால் மிக நலமுதும் மற்றவர்களால் கூறப்படுவதுமென்ன' 'ஸ்ரீராம நாமத்தைச் ஜபிப்பதால் துளசிதாசரைப் போன்றவர்களும்—முட்டாள்களும்— கரையேறிவிடுகிறார்கள் என்பதே.

---

* ஆறு சாஸ்திரங்கள்—மதங்கள்

1 கணாதரால் ஏற்படுத்தப்பட்ட நியாயம்
2 கௌதமரால் ஏற்படுத்தப்பட்ட நியாயம்
3 கபிலரால் ஏற்படுத்தப்பட்ட சாங்கயம்.
4 பதஞ்ஜலியால் ஏற்படுத்தப்பட்ட யோகம.
5. ஜைமினியால் ஏற்படுத்தப்பட்ட பூர்வமீமாம்சம
6 வியாசரால் ஏற்படுத்தப்பட்ட உத்தரமீமாம்சம

252

ஹே தந்தையே! என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். நான் எனது செய்கையினாலேயே மிகவும் கெட்டுப் போய்விட்டேன். இந்தப் பேராசை கொண்ட பொய்யனையும் ஒருமுறை சரிப்படுத்திவிடு. ஏனெனில் நீ நன்மையைச் செய்ததாலேயே மற்றவர்களும் நன்மையடைந்திருக்கிறார்கள்.

என்னுடைய உடல் நோயுற்றிருக்கிறது. மனம் தீய செயல்களால் அழுக்கடைந்திருக்கிறது. குரல் மற்றவர்களை நிந்தித்துக் கூறுவதாலும் பொய் சொல்வதாலும் அழுக்கடைந்துவிட்டிருக்கிறது. சாதனங்களுக்கும் சாதனமின்றி சித்திபெற முடியாது என்ற விதி இருக்கிறது. ஆனால் ஹே கிருபாநிதியே! உன்னுடைய கருணை கெட்டுப் போனவர்களையும் சரி செய்துவிடுகிறது. நீ ஏழைகளைக் காப்பாளன், ஏழை எளியவர்களுக்கும் அநாதைகளுக்கும் நன்மை செய்பவன்.

ஹே தீனபந்து! நீ ஆதரவற்றவர்களுக்கு ஆதரவளிக்கிறாய். ஆனால் நான் இவற்றில் ஒன்றிலுமில்லை. கர்வத்தினால் என்னை நான் ஏழையாகவோ, எளியோனாகவோ, அநாதையாகவோ, ஆதரவற்றவனாகவோ, ஒருபோதும் கருதவில்லை. இதனால் மூன்று தாபங்களாலும் பீடிக்கப்பட்டிருக்கிறேன். எதை விதைத்தேனோ அதையே அறுவடை செய்து கொண்டிருக்கிறேன். நற்சாது மாதிரி வேடம் பூண்டிருக்கும் போதிலும் நான் கலிகாலத்தை விட அதிக போக்கிரித்தனமுடையவன். பரலோகத்தின் பக்கம் எனது புத்தி செல்லாமல் உலக இன்பங்களில் மூழ்கி நன்கு மகிழ்ந்திருக்கிறது.

ராஜராஜேஸ்வரனே! இப்பெரிய துஷ்டசமுதாயத்தில் இவ்வளவு நாட்களையும் வீணாகக் கழித்துவிட்டு இப்பொழுது எவ்வகையில் உனது நாமத்தில் நான் அடைக்கலம் பெறுவேன்? ஹே ராமா! நீ உனது நாமத்தின் மகிமையை நன்கறிவாய். என்னைப் பிறப்பித்தவரும் எனக்கு உனது நாமத்தைத் தவிர வேறு வழியைக் காட்டவில்லை. நீ கோபப்படும்படியான எனது தீய செயல்கள் கோடிக்கணக்கிலிருக்கின்றன. ஆனால் நீ சந்தோஷமடையும்படியாக இந்தத் துளசிதாசனிடம் வெட்கமின்மை மட்டுமே இருக்கிறது.

## 253

ஹே ராமா! என்னை உனது அடைக்கலத்தில் வைத்துக்கொள்ளவும்! ஏனெனில் நீ எப்பொழுதும் (திக்கற்றவர்களுக்கு) அடைக்கலம் அளித்து வந்திருக்கிறாய். உன்னைப் போன்ற தயாள குணமுடையவர் மூவுலகிலும் முக்காலங்களிலும் இல்லை என்பது பிரசித்தமான விஷயம்.

ஹே பிரபோ! உன்னைத் தவிர சரணடைந்த ஏழை எளியவர்களைக் காப்பாற்றுபவர் வேறு யார் இருக்கிறார்கள்? நீ சோம்பேறிகளையும் துரதிர்ஷ்டமுள்ளவர்களையும் பாவிகளையும் செல்லமாய் வளர்த்து, போஷித்து அவர்களைச் சந்தோஷமடையச் செய்தாய். இதற்குப் பின்னும் ஹே தலைவனே! நீ அவர்களிடம் கடனிலிருந்து விடுதலை பெறவில்லை. சுவாமி! நீ இப்படிப்பட்ட திறமையுடையவன், நான் எவ்வாறிருப்பினும் நான் உன்னுடையவனே, கலிகாலத்தின் நடத்தையைக் கண்டு என் மனதில் பெரும் வெறுப்பு ஏற்படுகிறது.

என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். சந்தோஷித்து, சிரித்துக்கொண்டே அல்லது எவ்வகையிலாவது 'துளசி நீ என்னுடையவன்' என்று ஒரே ஒரு முறையாவது நீ ஏன் கூறமாட்டேன் என்கிறாய்? ஹே ஸ்ரீராமசந்திர மகாராஜனே! நீ இவ்வாறு கூறும் க்ஷணத்திலேயே எனது எல்லாத் துன்பங்களும் வேரோடு அழிந்துவிடும், எல்லா சுகமும் எனக்குக் கிடைத்துவிடும்.

## 254

ஹே ராமா! உனது நாமமே எனது தாய், தந்தை, உறவு, சிநேகம், குரு—நலவா, நல்ல மனங்கொண்ட நண்பா. யாவும், உனது நாமத்தில் நான் கொண்டுள்ள அன்பின் உறுதியே எனது நிலையான செல்வமாகும். எண்ணற்ற சரித்திரரூப தயிர்க்கடலைக் கடைந்து சிவபெருமான் உனது நாமமெனனும் வெண்ணெயை எடுத்திருக்கிறார். நாமத்தின் பலம் மற்றும் பெருமை நாற்பலன்களின் (அறம், பொருள் இன்பம், வீடு ஆகிய வற்றின்) சாரமாகும். இதனால் கடடத்தை அகற்றி ராமநாமத்தைப் பாராயணம் செய்யவேண்டும். இதுவே உத்தமமான யகஞமாகும். ராமநாமம் லோக இன்பத்தை யும் பரலோகத்தையும் அளிக்கவல்லது. ராமநாமத்தைப் போன்று நன்மையை அளிக்கக்கூடியது வேறெதுவுமில்லை. இதைத் துளசிதாசர் இயற்கையாக கூறியிருப்பாரானால் உண்மையாக அதை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். ஹே சீதாமணாளனே! உனது நாமம் நிதயமயமானது! மனக்குழப்பத்தையும் குழப்பவல்லது.

## 255

ஹே ராமா! உனது நாமம் சாதுக்களுக்குக் கற்பக விருட்சத்தைப் போன்றது. ஸ்மரணை செய்யும்போதே.

மூன்று தாபங்களையும் போக்கிவிடுகிறது. அதோடு எல்லா மனோரதங்களையுமகூட நிறைவேற்றிவிடுகிறது. அது எல்லா நற்செயலகளென்னும் தாமரைகள் நிறைந்த பொய்கையாகும். அது லாபத்திற்கே லாபமாகும். சுகத் திற்குகூட சுகமாகும். எல்லா செலவமுமாகும். பாவி களைப் புனிதமாக்கும். பயத்திற்கு பயமாகும். கலிகாலத திறகு கலிகாலமாகும.

அது உயர்ந்தோர், —தாழ்ந்தோர், ஏழை— பணக்காரர் யாவருக்கும் சுலபமானது. அதோடு தனது வீட்டைபபோனறு சுகமளிக்கவல்லது.

ராமநாமததின அனபு நாற்பலனகளின (அறம், பொருள், இனபம், வீடு) சாரமாகுமெனறு வேதங்களும் புராணஙகளும் சிவபெருமானும பறைசாற்றியிருக்கிறார் கள். இவ்வாறு ராமநாமததினமீது யாருக்கு அனபும் விசுவாசமும் இல்லையோ அவர்களைக கழுதையாகவே நினைக்கவேண்டுமெனறு எனககுத தோனறுகிறது.

ராமநாமததைப போனற தாய், தநதை, மித்திரர், நனமை செய்பவர், உறவினர், குரு, எஜமானர் யாரு மிலலை. அந்த நாமம், புத்திசாலி, நலலொழுக்கம், மற்றும சந்திரனைப் போன்று அழகுள்ளது. நிக்கற்றவர் களினமீது தயை காட்டும் ஸ்ரீராமா! என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். உனது நாமத்திடம் எனக்கிருக்கும் அனபு, நிலைத்திருக்குமபடியான வரமளிக்கவேண்டு கிறேன். அதுவே இந்தத் துளசிதாசனுக்கு பெரிய வரமாகும்.

## 256

ஹே ராமா! என்னால சொல்லாமலும் இருகக முடியாது. கூறினாலும் நகைபபிறபிடமாகவே இருக்கும். உன்னைப போன்ற அழகிய தலைவரின பாதுகாபபைப் பெறறும நல்லதையும கெட்டதையுமுடைய இநதச் சேவகன காலம் மறறும காமத்தினால ஏறபடும் கொடிய துன்பங்களைச் சகிததுககொண்டிருக்கிறேன, சிநதனை செய்கிறேன, ஆயினும ஒன்றும தோனறவிலலை. எல்லா ஜனங்களும் பலவிதமான உயரவை எங்கிருந்து பெறுகிறார்கள்?

ஹே தலைவா! உனது மகிமையைக கேட்டறிநத பின் என்னைப பாராதது (எனது செயலகளைக கணடு) தோலவியை ஒப்புககொண்டு முகததைச் சிறியதாககிக கொளகிறேன, இதனால எனது உள்ளம் எரிய ஆரம்பிததுவிடுகிறது. எனககு எநத நண்பனுமில்லை, நல்ல சேவகனுமில்லை, நலல மனைவியுமிலலை, தனது தாய தந்தை யாவும நீயே என்று துளசிதாசனாகிய நான உண்மையைததான கூறுகிறேன. ஹே பிரபோ! என்னிடமிருப்பதே கொஞசமாகும், அது அழிந்துபோனாலும பரவாயிலலை. ஆயினும் ஹே ராமா! நான என்னை உனககு அரபபணிதது சபதம் செய்து கூறுகிறேன். உனது நாமம எவவாறு இருகக வேண்டுமென்று நினைககிறேனோ அதேபோன்று இருக்கட்டும! அதில களங்கம் ஏற்படவேண்டாம்.

## 257

ஹே தீனபநது! நீயும விரட்டிவிட்டால் இநதத் திககற்றவனுக்கு வேறு புகலிடம கிடைககாது. எல்லோரும் தனது நலனைக கருதுபவர்களாகவே இருக்கிறார்கள்.

ஆனால் தனது பக்தர்களின் நலனைக் கருதுவோராக வெகு சிலரே இருக்கிறார்கள். ஆயினும் ஹே ராமா! உனது திருவடிகள் எல்லோருக்கும் நன்மையாகவே இருக்கின்றன. (பக்தர்களுக்கு மட்டுமல்லாமல் பக்தர்களல்லாதவர்களுக்கும் நன்மையளிக்கின்றன.)

ஹே கிருபாகரா! நீ கல் (அகலிகை) மிருகம் (கரடி, வானம்) பட்சி (ஜடாயு) ராட்சதர் ஆகிய கண்ணர்டிகளைப் பொன்னாக்கிவிட்டாய். தண்டக வனம்* உனது பாதங்கள் பட்டவுடனேயே புனிதமடைந்துவிட்டது. அங்கிருந்த வாடிப்போன மரங்கள் யாவும் பூக்கவும் காய்க்கவும் ஆரம்பித்தன. ஹே தேவா! பாவிகளையும் புனிதப்படுத்தக்கூடிய உனது நாமம் உன்னுடன் விரோதித்துக் கொண்டிருப்பவர்களுக்கும் அநுகூலத்தைச் செய்கிறது. (பகையுணர்ச்சியோடுகூட ராமநாமத்தைக் கூறுபவர்களும் புனிதமடைந்து விடுகிறார்கள்.) இந்த உலகிலுள்ள சகிக்க முடியாத துக்கங்களையும் தோஷங்களையும் போக்கக்கூடியவர் உன்னைத் தவிர வேறுயாருமில்லை. நீ நல்லொழுக்கக் கடல், உன்னிடம் உயர்ந்த—

* ஒருமுறை பஞ்சமேற்பட்டபோது முனிவர்கள் யாவரும் தங்கள் ஆசிரமங்களைவிட்டுக் கௌதம முனிவருடைய ஆசிரமத்தில் சென்று தங்கி இருந்தனர். பஞ்சம் நீங்கியவுடன் தங்கள் ஆசிரமத்திற்குச் செல்ல முனிவர்கள் கௌதமரிடம் விடைபெற நினைத்தபோது அவர்களை அங்கேயே இருக்கும்படி வேண்டினார். இதைத் தவிர்க்க அனைவரும் ஒன்றுசேர்ந்து மாயையினாலான பசு ஒன்றைச் செய்து கௌதமரின் நிலத்தில் மேயவைத்தனர். கௌதமர் அதை விரட்டியபோது கீழே விழுந்து இறந்துவிட்டது. யாவரும் கௌதமர்மீது பசுவதை தோஷத்தைச் சுமத்திவிட்டு அங்கிருந்து சென்றுவிட்டனர். தனது தவ வலிமையால் இதை அறிந்த கௌதமர் கோபித்து அவர்கள் செல்லும் இடமெல்லாம் புனிதமிழந்து அழிந்துவிடும் என்று சாபமிட்டார். அதிலிருந்து அந்த இடம் தண்டகவனம் என்ற பெயருடன் இருந்தது. மரஞ்செடி கொடிகளெல்லாம் காய்ந்திருந்த அவ்விடத்தின்மீது ஸ்ரீராமரின் பாதங்கள் பட்டவுடனேயே அவ்விடம் செழிக்க ஆரம்பித்தது.

தாழ்ந்த எதைப்பற்றியும் பேசுவது இனபத்தை அளிக்கிறது துளசிதாசரின் துன்பத்தைப் போக்குவதில் உன்னை ஒத்து நீயே இருக்கிறாய் வேறு யாருமில்லை.

## 258

நான் நன்கறிந்தே உன்னை மறந்துவிட்டிருக்கிறேன் நீ கருணையின் இருப்பிடமாக இருக்கின்றபோதிலும் என்மீது கருணை காட்டவில்லை என்று கூறுவதற்கு நான் காவமடைந்துவிட்டிருக்கிறேன். மரியாதையற்றவனாகி உன்மீது குற்றங்களைச் சுமத்திக் கொண்டிருக்கிறேன். யாருடன் உறவுகொள்ள யோகிகளும் முயற்சி செய்து கொண்டிருக்கிறார்களோ அவருடன் சிறிதளவு அன்பு ஏற்பட்டபோதும் அபாக்யவானான நான் அதைக் கெடுத்துக்கொண்டேன். எனது அறிவுக்கேற்ற வகையில் தேடினேன். ஆயினும் என்னைப்போன்ற குற்றத்தின் இருப்பிடமான வேறு யாரையும் பதினான்கு புவனங்களிலும் காணவில்லை. வஞ்சியின் பின்னால் கட்டப்பட்டிருக்கும் நாய், எப்படி சிலநேரம் இப்படி அப்படி இழுபட்டாலும் இறுதியில் வஞ்சியின் பின்னாலேயே இழுக்கப்படுகிறதோ, அதைப் போன்று சில நேரங்களில் நான் மாயாமோகத்தின் பெரிய தனத்தை க்ஷண நேரத்தில் விட்டுவிடுகிறேன். பின் அதே க்ஷணத்தில் அதைப் புகழவும் ஆரம்பித்துவிடுகிறேன்.

ஹே தலைவா! நான் கோடிமுறை சபதம் செய்து உன்னிடம் கூறுகிறேன் என்னைப் போன்ற எஜமான துரோகி வேறு யாருமில்லை. பொய்யன் பேராசைக்காரன், வஞ்சககாரனான என்னை உன் வாயிலிருந்து தூர அகற்றிவிடு. இலவையெனறால அமுதம்போன்ற

நீறை பனறிடைப போனறு அசுததமாக்கிவிடுவேன. (உனனுடைய நறபுகழைக களங்கமடையச் செயது விடுவேன.) எனனை உனது அடைக்கலத்தில் வைத்துக கொளளவும அலலது கொன்றுவிடவும். இவற்றில் எதையும நீ செய்யவிலலையென்றால நான உன்னிடம் எதையும பிரார்த்தனை செய்யமாட்டேன நீ தாமதப் படுத்தினால நான உனது நாமத்தின மகிமையெனும கப்பலை மூழகடித்துவிடுவேன. ஏனெனில நான் ராம நாமத்தை ஜபித்துக கொண்டுதான் இருக்கிறேன். ஆனால் ஒன்றும் நடக்கவிலலை, இதனால சிறந்தங்களில் கூறப்பட்டுள்ள ராமநாமத்தின மகிமையாவும பொய்யானதென்று உலகம கூறிவிடும எனறு மீண்டும மீண்டும கோடிட்டுக கூறுகிறேன்.

## 259

நீ எனது நிலையை மாற்றியமைத்தபோதிலும எனது செயலகளால மீண்டும அது களங்கமடைந்துவிடுவதாக இருந்தால எனனை உனக்கு அர்ப்பணித்துக் கூறுகிறேன். வேதங்கள் இதைப்பற்றிக் கூறுவது இருக்கட்டும, உலகம என்ன கூறும? ஸ்ரீராமரால் சரிசெய்யப்பட்ட நிலைமையை துளசிதாசர்தான் கெடுத்துவிட்டாரென்று கூறும்.

ஹே பிரபோ! நீ உதாசீனம செய்தாலும், இநத சேவகனின குற்றங்களின வல்லமை பெருகினாலும், ஹே தீனபந்து! இருவகையிலும் இந்த ஏழைதான் துன்பத்தில எரியவேண்டும்.

இதயத்தினமீது வஜ்ரத்தின அடிவிழுந்தாலும் தாங்கக்கூடிய அளவுக்கு உள்ளத்தைத் திறந்து வைத்துக்

கொண்டேன். ஏனெனில் சலிகாலம் அழுத்திக்கொண் டிருக்கிறது. நான் துன்பத்தைச் சகித்துக் கொண்டிருக் கிறேன். என் கஷ்டத்தைச் சகித்துக் கொண்டிருக்கிறேன் என்று தாங்கள் நினைப்பீர்கள். அடிமைத் தனத்தில் துக்கத்தைச் சகியாதவர் யார்?

ஆயினும் ஹே தயாளனே! நீ உனது புகழைக் காத்தே தீரவேண்டும். அதாவது என்னை விடுதலை செய்தே ஆக வேண்டும். ஏனெனில் இறுதியில் என் நிலையைக் கண்டு உன் மனம் தாங்காது. உனது மனம் இளகிவிடும். நற்காரியங்களைச் செய்பவனும், தர்மமுடையவனும், சாதுவும், சேவகனும் முற்றுந்துறந்தவனும் அவரவர் கர்மங்களுக்கேற்ப பலனை ஏன் அனுபவிச்சமாட்டார்கள்? ஆனால் நீயே பாராமுகமாக இருந்தால் என்னைப் போன்ற தூய்புத்தியுடையவர்களையும் பயந்தாங்கொள்ளி களையும் கொடுமையானவர்களையும் பலமிழந்து படுகுழி யில் வீழ்ந்தவர்களையும் யார் ஏற்றுக்கொள்வார்கள்? ஹே தயாளனே! சமயம் கிடைத்த போதும் எல்லோருடைய நிலையிலும் மாறுதலேற்படுகிறது. ஆனால் உன்னைத் தவிர வேறு யாரும் என்னை எப் போதும் விரும்பமாட்டார்கள். ஹே ராமா! மனம் வாக்கு காயத்தால் சபதம் செய்து கூறுகிறேன். இந்தத் துளசி தாசனை நீ கர்ப்பாற்றினால்தான் நான் காப்பாற்றப் படுவேன்.

## 260

எஜமானரே விரகத்தியடையும்போது சேவகனும் தன் நிலைமையை இழந்துவிடுகிறான் என்றால் என் நிலைமை என்னவாகும். நானோ பறைசாற்றிக்கொண்டே

அழிந்துகொண்டிருக்கிறேன். இந்த உலகத்திலேயே இருக்க எனக்கு இடமில்லையென்றால் பரலோகத்தை நான் எவ்வாறு எதிர்பார்க்கமுடியும்?

நானோ ராமநாமத்தின் அடைக்கலத்தில்தான் இருக்கிறேன். ஆயினும் முதலைகளுக்காமம் கூபாவம், காலம், காமம், கோபம், பேராசை, மோகம் ஆகிய வற்றின் கோரப்பிடியில் இந்த ஏழை சிக்கிக் கொண்டிருக் கிறேன். ஹே மகாராஜனே! கட்டுப்படுத்த சோதிக் கணக்கான போர் வீரர்கள் இருக்கிறார்கள், ஆனால் விடுவிக்கவோ நீ மட்டும்தான் இருக்கிறாய்.

ஹே பிரபோ! என்னைக் காப்பாற்று, காப்பாற்று! நான் பாபத்தின் மூன்று தாபங்களாலும் எரிந்து கொண்டிருக்கிறேன். ஜனங்களில் மகிழ்ச்சியை அறிந்து விசுவாசமும் அன்பும் இவ்வாசலிலேயே இருக்கிறது; நான் சூடான பாலினால் சுடப்பட்டதால மோரையும் ஊதி ஊதிக் குடித்துக் கொண்டிருக்கிறேன். நான் ஜபித்து ஜபித்து தளர்ந்துவிட்டேன். உற்றார் உறவினரிட மிருந்தும் பிரிந்துவிட்டேன். நான் உனது எச்சில் பொருளையே விரும்புகிறேன். பாவில் குளிக்க விரும்ப வில்லை. நான் உனது திருவடிகளில் வீழ்ந்து கிடக்கவே விரும்புகிறேன். எனக்குச் சுவர்க்க போகங்கள் விருப்ப மில்லை. நான் நல வழியில் நடந்து வேற்றிடத்தில் எனது நன்மையை நாடினேனில்லை. இங்கு நீ என்னை விரும்பாவிட்டாலும் நீயே எனக்கு நன்மையைச் செய்யக் கூடியவன் என்பதை நான் நன்கறிவேன். இதை நன்கறிந்த துளசிதாசனாகிய நான் மீண்டும் மீண்டும் மனதை சமாதானப்படுத்தியபின் என் தலைவனான உன்னிடம்கூறி நிம்மதி அடைந்திருக்கிறேன்.

261

ஹே ராமா! எனது முயற்சியால் கோடி யுகங்கள் வரையிலும் உயர்ந்த நிலையை அடையமுடியாது ஆனால் நீ செய்ய நினைத்தால் கண்சிமிட்டும் நேரத்தில் என் நிலை சரியாகிவிடும். நீ பெரும் சாமர்த்தியசாலி ஹே கிருபாகரா! நான் என்ன சொல்லட்டும்! விலைமதிப்பற்ற ரத்னத்திற்குப் பதிலாக சிறந்திப்பமெனும் இலந்தை பழத்தை நான் பெற்றுக்கொண்டிருக்கிறேன். எனது மனம் கலக்கமடைந்துவிட்டிருக்கிறது, செயலும் கலியுக பாபங்களால் வலுவடைந்திருக்கிறது. எனது நாவும் ராமநாமத்தை ஜபிக்கவில்லை. அது கண்டவாறு பிதற்றிக் கொண்டிருக்கிறது. தீய பாதையில் தீய செயல்களைச் செய்துகொண்டிருந்தேனேயொழிய மறந்தும் நல்லதைச் செய்யவில்லை; குழந்தைப் பருவத்தில் விளையாடும் போதுகூட நல்ல விளையாட்டாக விளையாடவில்லை. பிறர் செய்வதைப்பார்த்து செய்ததாலோ, காவத்தாலோ, அல்லது நல்லவர்களின் சேர்க்கையாலோ ஒரு நல்ல காரியத்தைச் செய்துவிட்டால் அதை மட்டும் உலகுக்கு நன்கு பிரத்யட்சமாகும்படி அறிவித்தேன், பாபங்களை மறைத்துவிட்டேன்; மனதில் உலக இன்பங்களில் பற்று, பகை, கோபம் கொண்டு ஐம்புலன்களாலும் இவற்றையே பூஜித்தேன்; அதையே ஆதரிக்கவும் செய்தேன். முற்காலத்திலும் எதிர்காலத்திலும் இப்பொழுதிருக்கும் நிலையையும் ஆராய்ந்து பார்த்த பின்பும் என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை என்பதை அறிந்துகொண்டேன். இவ்வுலகம் கூறுகிறது, துளசி உன்னுடையவனென்று; இந்த துளசி தாசனாகிய நானும் உன் மீதே விசுவாசமும் அன்பும் கொண்டிருக்கிறேன், உண்மையோ, பொய்யோ, ஹே ரகுநாதஸ்வாமி! நான் உன்னையே நம்பி இருக்கிறேன்.

## 262

சொல்லவும் முடியவில்லை, சொல்லாமல் இருக்கவும் முடியவில்லை. பெரியவர்களிடம் என் துன்பத்தைக் கூறினால் பெருமகிழ்ச்சி ஏற்படுகிறது. பிரபுவின் பெருந்தன்மையையும் எனது அற்பத்தன்மையையும்; அவரது புனித தன்மையையும் எனது பாபங்களின் வலுவையும் அறிந்து என் மனம் வெட்கமடைந்து பயப்படுகிறது. ஆனால் சுவாமியின் தயாள குணத்தையும் ஏழைக் காப்பாளராக இருப்பது முதலான இயல்புகளையும் கேட்டு இம் மனம் தெளிவடைகிறது. தலைவனே! உனது குணங்களின் கதையைப் பாடுவதாலும் இரு கைகூப்பி தலைவணங்குவதாலும் நீசர்களிடமும் நீ அன்பு காட்டிச் சாமர்த்தியமாக அவர்களின் விருப்பங்களைப் பூர்த்தி செய்துவிடுகிறாய். உன்னுடைய தாபாரில் காலத்தால் அழிவுதான் ஏற்படும். ஏழ்மையாலும் பணிவாலும்தான் நற்பலன் ஏற்படும். ராவணனைப் போன்ற திடத்தவர்களும் விபீடணனைப் போன்ற மெலிந்தவர்களும் வேறு யாருமில்லை. ஆனால் அங்கு நீ அன்பிற்கு அடிமை யானதை அறிந்துகொண்டேன். அதாவது நீ பக்த விபீடணனை உனதாக்கிக் கொண்டாய்; ராவணனை அழித்துவிட்டாய். இங்கு புத்திசாலித்தனமாக நடக்க முயற்சிப்பது ஆயிரக்கணக்கான மூடத்தனத்துக்கு ஒப்பாகும். இங்கு நேர்மையாக சத்ய பாவத்துடன் நடந்தால் மட்டுமே மனதின் சளங்கம் தூர விலகும். கழுகு, அகலிகை மற்றும் சபரியை எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருப்பதால சுவாமியிடம் காட்டும் அன்பு ஒருபோதும் குறையாது. உனது நாமம் கற்பக விருட்சத்தைப் போன்று எல்லா அபிலாசைகளையும் நிறைவேற்றி விடுகிறது. அதைப் பாராயணம் செய்தால் கலியின் பாபங்களும் கபடமும் வலிமை இழந்துவிடும்.

ஹே கருணாநிதி! ஸ்ரீசீதாமணாளனின் பகதியெனும் கங்கையில் மீனாகச் சுற்றித் திரியும்படியான—இருக்கும் படியான வரத்தை அளிக்க வேண்டுமென்று இந்தத் துளசி தாசன் வேண்டுகிறேன்.

## 263

தலைவனே! நீ உன் சேவகனின் உள்ளத்திலுள்ளதை உள்ளவாறே நன்கு அறிந்து கொள்வாயாக! என்னு மனமெனும் அழகான பெண் கற்புடைய மங்கையைப் போன்று உன்னைக் கணவனாகப் பாவித்து அன்பு செலுத்த வேண்டுமென்ற நியமனத்துடன் உன்னையே நம்பிக் கொண்டிருக்கிறாள். நான் பாவ புண்ணியத்துடன் வீழ்ந்து கிடக்கிறேன்.

மற்றவர்களுடைய நடப்பையும் என்னுடைய செயல் களையும் ஆராய்ந்தேன்; ஹே சுவாமி! எனக்கு நன்மை யைச் செய்ய நீ இருக்கும்போது நன்மை தீமையைப் பற்றிய கவலை எனக்கெதற்கு? இதை நான் சீதாபதியின் மீது சபதம் செய்து கூறுகிறேன். ஞானம் மற்றும் மொழியின் தலைவனான நீ உள்ளும் புறமும் அறிந்தவன் என்றிருக்கும் நிலையில் மனதிலுள்ளதையும் வாயிலிருந்து வெளிவந்த மொழியையும் உன்னிடம் எப்படி மறைக்க முடியும்? மனதில் ஒன்றை நினைத்துக்கொண்டு வேறொன்றைப் பேசுவதை உன்னிடம் மறைக்கமுடியாது.

இந்தத் துளசி உன்னுடையவன், நீயே இந்தத் துளசி யைக் காப்பாற்றுபவன்; நான் கபடமாக எதையாவது கூறுவேனாகில் நெய்யில் விழுந்த ஈயாவேன் எவ்வாறு நெய்யில் விழுந்த ஈ உடனேயே இறந்து விடுகிறதோ அவ்வாறே நான் சாவநாசமடைந்து விடுவேன்.

## 264

ஏ மனமே! முதலில் நான் கூறுவதைக் கேள். பிறகு உனக்கு எது நலமாகத் தோன்றுகிறதோ அதையே செய். நீ உனது அகக் கண்களாலும் புறக் கண்களாலும் மூவுலகிலும் பார்த்து முக்காலங்களிலும் பகவானைப் போன்று உனக்கு நன்மையைச் செய்பவர்கள் இருக்கிறார்களா என்பதைச் சொல்.

நீ சரீரமென்னும் வீட்டில் வாழ்ந்து புதிய புதிய நட்பினை அனுபவித்து இருக்கிறாய். கபடம் நிறைந்த அன்பினை ஆராய்ந்து அறிந்துகொண்டாய். நண்பர்கள் கூட்டத்தில் நடக்கும் கொடுக்கல் வாங்கலும் வஞ்சனை நிறைந்ததாகவே இருக்கிறது. காரியம் நடக்கவேண்டு மென்றால் அப்போது காலில் வீழ்ந்து வேண்டுகிறான். தேவர்களும் பெரும் சாமர்த்தியசாலிகளே. நீ இதை உணர்ந்திருக்கிறாயோ, இல்லையோ தெரியவில்லை. அவர்கள் முதலில் கோடிமடங்கு பெற்றுக்கொண்டு பின்பு ஒரு மடங்கு அளிக்கிறார்கள்.

ஸ்ரீ ரகுநாதரின் அன்பின்றி செய்யும் கர்மம், தானம் யாவும் களைப்பையே பலனாக அளிக்கும். அப்படிச் செய்வது சாம்பலில் ஹோமம் வளர்ப்பது மற்றும் உவர் நிலத்தில் மழை பொழிவது போன்றதாகும். யார் ஆதியிலும் முடிவிலும் இடையிலும் நல்லவராக இருக்கிறாரோ, யார் எல்லோருக்கும் நன்மையைச் செய்கிறாரோ, யாருடைய புகழ் உலகத்திலும் வேதங்களிலும் பரவியிருக்கிறதோ அந்தச் சீதாபதி ஸ்ரீ ராமச்சந்திரரைப் போன்ற நல்லொழுக்கத்தின் இருப்பிடமான சுவாமி வேறு யாருமில்லை.

ஏ துஷ்டனே! இப்படிப்பட்ட சுவாமியை நீ மறந்து விட்டிருக்கும்போது உனக்கு நிம்மதி எப்படிக் கிடைக்கும்? யார் உயிரினங்களின் வாழ்க்கையாக, உயிரின் உயிராக பரோபகாரியாக, எல்லையற்ற அன்புடன் நீசர்களையும் புனிதப்படுத்துபவராக இருக்கிறாரோ அந்த ஸ்ரீ ராமரை நீ அவமதித்துக் கொண்டிருக்கிறாய்.

துளசி! கோசலபதி கிருபாளு ஸ்ரீ ராமர் உனக்காகச் சித்ரகூடத்தில் செய்த லீலைகளில்* மனதைச் செலுத்தி ஸ்மரணை செய்வாயாக

## 265

ஹே பிரபோ! நான் சரீரத்தைப் புனிதமாகவும் மனதில் ஆசைகளையும் வைத்துக்கொண்டிருக்கிறேன். ''நான் ஜானகிவல்லப ஸ்ரீ ரகுநாதரின் சேவகன்'' என்று வாயினால் கூறிக் கொண்டிருக்கிறேன். ஆயினும் எந்த துர்ப்பாக்கியத்தால் என் தலைவருடன் நல்ல சம்பந்தம் ஏற்படவில்லை என்பதை என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை. நான் விரும்புவதோ நீரை, ஆனால் பெறுவதோ நெருப்பை, சாந்தி கிடைப்பதற்கு பதிலாக மூன்று தாபங்களே கிடைக்கின்றன. இதுபோன்றே அமுதமும் என்னிடம் விஷமாகி விடுகிறது. கலிகாலத்தின் கபடத்தைப் பற்றிச் சாதுக்கள் கூறியுள்ளவை யாவும்

---

* சித்ரகூடத்தில் ஒரு முறை இரு ராஜகுமாரர்கள் குதிரைமீது வந்து கொண்டிருந்தனர். அப்போது சாது ஒருவர் தியானத்திலிருந்ததால் தடங்கல் ஏற்படாமலிருக்க கண்களை மூடிக்கொண்டார். சிறிது நேரத்தில் அங்கு வந்த ஆஞ்சநேயர் ராம லட்சுமணரைக் கண்டீரா என்று கேட்டார். குதிரைமீது சென்றவர் ராம லட்சுமணரே என்றறிந்த சாது நான் காணவில்லையே என்று அங்கலாய்த்தார்

சரியே. எனக்கு ஒளியையும் இருளையும் புரிந்துகொள்ள முடியவில்லை. ஞானத்தையும் அஞ்ஞானத்தையும் உள்ளவாறு புரிந்துகொள்ள என்னால் முடியவில்லை. என்னைக் குருடனென்று நினைத்த கலிகாலம் காட்டிலிருக்கும் சிங்கத்தின் நெய்யை (கொழுப்பினை) மையாகக் கண்களில் தீட்டும்படிக் கூறுகிறது. இந்தச் சந்தோஷமான சிகிச்சை முறையை ஆராய்ந்தபோது எனது இதயத்தின் பலத்தை புத்தி நீக்கிவிடுகிறது. அஞ்ஞான வனத்தில் சிற்றின்பமென்னும் சிங்கமுள்ளது. சிற்றின்ப உணர்ச்சி அதன் நெய்யாகும். அது அருகில் சென்ற உடனேயே கொன்று தின்றுவிடும். சிற்றின்பத்தில் மூழ்கியவர்களுக்கு ஞானமெனும் கண்கள் எங்கே அகப்படப்போகின்றன!

ஹே பிரபோ! நான் மீண்டும் உன்னிடம் செலவாகக் இழக்காமல் இருக்க வேண்டும் என்று உன்னிடம் கூற எனக்கு வெட்கமாக இருக்கிறது. என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். கலியுகத்தை அருகில் அழைத்து நீ தடுத்து விட்டால் இந்தத் துளசியைப் போன்ற உணர்வற்ற ஜீவன்களின் மீதுள்ள அதன் நோக்கத்தை அது விட்டுவிடும்.

## 266

ஹே கிருபாலு! நான் உன் அருகில் எந்த அளவுக்கு நெருங்க விரும்புகிறேனோ அந்த அளவுக்குத் தூர விலகிப் போய்விடுகிறேன். ஹே ஸ்ரீராமா! நீ நான்கு யுகங்களிலும் ஒரே மாதிரியாக இருக்கிறாய், நான் உன்னுடையவனாக இருந்தபோதிலும் பாபங்கள் மற்றும் அவகுணங்கள் நிறைந்தவனாகவே இருக்கிறேன். உன்னிடமிருந்து நான் விலகியவுடனேயே சமயம் பார்த்துக் கொண்டிருந்த

கலியுகம் நடுவில் புகுந்து கபடமாக வஞ்சனை செய்து விட்டது. எனது புத்தி பேதலித்துப் பகவானின சாணார விதந்தங்களை மறந்தவுடனேயே கலியுகம் என்னைத் தன வலையில வீழ்த்திக்கொண்டது.

அது என்னைப பொனனிலிருந்து இரும்பாக மாற்றி விட்டது. அரசனாக இருந்தவனைப பிச்சைக்காரனாக மாற்றிவிட்டது. நற்புத்தியுடையவனை தீயபுத்தியுடைய வனாக மாற்றிவிட்டது. எண்ணற்ற மலைகளிலும் காடு களிலும் நெருப்பினறியே எரிந்துகொண்டு திரிந்தேன். ஆனால சித்ரகூடத்திறகுச் சென்றதும கலியுகத்தின் எல்லாப் போக்கிரித்தனத்தையும் அறிந்துகொண்டேன். இதனால என பயத்தைக் கண்டே நான பயந்து கொண்டிருக்கிறேன. திருடனை அறிந்துகொண்டவன திருடன கொன்றுவிடுவான என்ற கதையைக் கைகூப்பி நின்று தலைவணங்கி என சுவாமியிடம துளசிதாசனாகிய நான கூறிவிட்டதால நிம்மதி அடைந்திருக்கிறேன்.

## 267

ஹே ஸ்ரீராமா! உனனிடம் பிடிவாதத்துடன இருக்க வேண்டுமென்ற பிரதிக்ஞையுடன உன் வாசலில வீழ்ந்து கிடக்கிறேன.

பிரபுவினமீது சபதம் செய்து கூறுகிறேன, நீ என் னுடையவன் என்று என்னை நீ கூறும் வரையிலும், நான் என வாழ்நாள முழுவதிலும எழுந்திருக்கப் போவதில்லை. யமதூதர்களும் என்னை அகற்றுவதற்காக என்னை அடித்துத் தள்ளாநதுவிடடார்கள, நான நகரவில்லை. நான உலகில அநேக ஜன்மமெடுத்து வயிற்றின் கொடுமையைச்

சகித்தபின்பு நரகத்தை அவமதித்துவிட்டு இங்கிருந்து கிளம்பியிருக்கிறேன். எந்தப் பொருளுக்காகப் பிடிவாதம் கொண்டு தடுத்துக் கொண்டிருக்கிறேனோ அதைப் பெறாமல் விடமாட்டேன்.

'நீ தயாளன். நீ கொடுத்ததால்தான் காரியம் முடியும், தாமதம் செய்யவேண்டாம், ஏனெனில் நான் களைப் பினால் தளர்ந்து சோர்ந்திருக்கிறேன். நான் பெரும் குறைவாளியாக இருப்பதால் நீ என்னுடையவன்' என்று வெளிப்படையாக கூறுவதற்கு நீ சங்கோஜப்படுவதாக இருந்தால், நீ தயையுடன் இந்தத் துளசிதாசனை உன் மனதில் ஏற்றுக்கொள்ளவும். ஏனெனில் கலியுகத்தைக் கண்டு நான் பயந்துவிட்டிருக்கிறேன்.

## 268

எப்பொழுது என் மனம் இயற்கையாக ஈடுபட்டிருக்கும் சிற்றின்பத்தின் பக்கத்திலிருந்து விடுபட்டு, அதே இயற்கையான சுபாவத்தில் கடைத்தைவிடுத்து தலைவனிடம் அன்பு செலுத்த ஆரம்பிக்கிறதோ அப்பொழுது நீ என்னை உன்னுடையவனாகக் கொண்டாய் என்று அறிந்துகொள்வேன். எப்பொழுது என் மனம் ஸ்ரீராமனிடம் மகனைப் போன்று அன்பு செலுத்துகிறதோ, ராஜபயத்தைப்போன்று அவரிடம் விசுவாசம் கொள்கிறதோ அரசனைப் போன்று அவரிடம் பயபடுகிறதோ, அப்பொழுது சாதகப் பறவையைப் போன்று தனது சாரியம் முடியும் வரையிலும் தன் பிடிவாதத்தில் இருந்து சிறிதும் தளராது.

எப்பொழுது அது எல்லையற்ற மரியாதையைப் பெறுவதால் சந்தோஷமடையாமலும் அவமதிப்பைப் பெறும்போது வெந்து மடியாமலும், லாபம்—நஷ்டம், இன்பம்—துன்பம், நன்மை—தீமை எல்லாவற்றிலும் ஒரே நிலையிலும் இருக்குமோ அப்பொழுது கலியுகத்தின் தீய செயல்களை அது விட்டுவிடும்.

எப்பொழுது என் மனம் பிரபுவின் குணங்களைக் கேட்டு சந்தோஷமடையுமோ, கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் வழியுமோ, அப்பொழுது துளசிதாசனாகிய நான் ஸ்ரீராமருடையவனாகிவிட்டேன் என்ற நம்பிக்கை ஏற்படும். அப்பொழுதுதான் என் உள்ளம் அந்த அன்பை கண்டவுடனேயே ஆனந்தத்தில் திளைத்துப் பரிபூர்ணம் அடையும்.

## 269

ஹே ராமா! எத்தகைய அன்பை மீனிடம் ஜலம் காட்டுகிறதோ, உயிரிடம் அன்புமயமான வாழ்க்கை காட்டுகிறதோ, பாம்பிடம் மாணிக்கம் காட்டுகிறதோ, பேராசையில் மூழ்கியவனுக்குச் செல்வம் தோன்றுகிறதோ அத்தகைய அன்பை நீ என்னிடம் காட்டுவாயா! எப்படி இயற்கையாகவே இளைஞனுக்கு நாயகி அழகாகத் தோன்றுகிறாளோ அவ்வாறே, ஹே கருணாகரனே! என் மனத்திலும் பவித்ரமான மற்றும் பலமான அன்பின் ஆசை தோன்றும்படிச் செய்யவேண்டுகிறேன். பகவான் விரும்பியவற்றைக் கொடுப்பதில் நிபுணரென்று வேதங்கள் கூறுகின்றன. ஹே தயாநிதி! என்னை உனக்கு அர்ப்பணிக்கும்இந்நாளில் துளசிதாசனாகிய எனக்கு நான் விரும்பும் பரிசைக் கொடுக்க வேண்டுகிறேன்.

## 270

ஹே ரகுவீரா! என்ன, கருணையுடன் எப்பொழுதாவது என் பக்கம் நோக்குவாயா? ஹே தயாநிதி! நான் நல்லவனோ, தீயவனோ, என்னையும் உன் மனதில் சேவகனாக நினைத்து எனது குற்றங்களுக்கு முடிவு கட்டுவாயா? ஜன்மஜன்மங்களாக இந்த மனம் என்னை வெற்றி கண்டிருக்கிறது. ஆனால் இப்போது என்னை ஜெயிக்கும்படிச் செய்வாயா? என் மனத்தை நான் வெல்லமுடியுமா? ஆம். நீ எனது அறபத்தனத்தைக் கண்டு பயப்படாமல் என்னை வெற்றிபெறச் செய்தால் நான் நல்ல தலைவனைப் பெறுவிடுவேன்; நீயும் அநாத ரட்சகனாக ஆகிவிடுவாய். என்னை நீ உன்னுடையவனாக ஆக்கிக்கொண்டால் உனது அநாதி ரட்சகன் என்ற பெயர் நிலைத்துவிடும். நீ பெருமையான நன்மையைச் செய்கிறவன். ஆயினும் தேவையற்ற பயத்தினால்தான் உன்னிடம் வேண்டுகோள் விடுத்துக்கொண்டிருக்கிறேன். இந்தத் துளசிதாசனால் வேறு யாரிடம் கூறமுடியும்? ஏனெனில் நீயே எனது தலைவன், குரு, தாய், தந்தை மற்றும் யாவும்.

## 271

ஹே ஸ்ரீராமா! நான் எப்படி இருக்கிறேனோ அப்படியே உன்னுடையவன். இந்தச் சேவகனை விட்டு விடாதேயும். ஹே கருணைக்கடலான கோசலநாதனே! நீ சரணடைந்தவர்களைக் காப்பவன். நீ உனது வழக்கப் படியே கருணையுடன் என்னைச் சந்தோஷப்படுத்த வேண்டுகிறேன். நானோ மற்றவர்களைக் கெடுத்திருக் கிறேன். ஆனால் இப்போது இந்தக் கெட்டுப் போனவனைக் கெடுக்காதே—கோபமடையாதே! நீ

எப்பொழுதும் எல்லாரையும் எல்லாவகையிலும் காப்பாற்றிக்கொண்டு வந்திருக்கிறாய். ஆகையால் இப்பொழுது என்னையும் சேர்த்திருந்தவும் என்னைத் தூக்கிக்கொண்டால் உலகம் சிரிக்குமே என்ற பயத்தில் நீ ஏன் பயப்படுகிறாய்? எந்தத் தூய எண்ணத்தினால் குரங்கையும் படகோட்டியையும் உனது நண்பர்களாக்கிக் கொண்டாயோ, அதே சுபாவத்தைப் பின்பற்றவேண்டும். நேன் குற்றவாளியாக இருக்கின்றபோதிலும் இந்தத் துளசிதாசன் உன்னுடையவன், இதை நீ மறந்துவிட வேண்டாம். கை உடைந்து துன்பமளித்துக் கொண்டிருந்தாலும் (யாரும் அதைத் தனியாக வெட்டி எறிந்து விடுவதில்லை.) கால் பழுதடைந்து துன்பமளித்துக் கொண்டிருந்தாலும் அதற்கு மருந்து செய்யவே யாரும் முயற்சி செய்வார்கள். இதுபோன்றே நான் எதற்கும் உபயோகமற்றவனாயினும் உன்னுடையவனே; உன்னிடமிருந்து என்னைப் பிரித்துவிடாதே.

## 272

நீ எனக்காக உன் மனத்தைக் களங்கமடையச் செய்யாதே! என்னிடமிருந்து உனது பார்வையைத் திருப்பிவிடாதே! ஹே ராமா! கேள், உன்னைவிட்டால் இவ்வுலகிலோ மறுலோகத்திலோ எனக்கு நன்மையைச் செய்பவர் வேறு யாருமே இல்லை. என்னை நற்குணமற்றவன், லாயக்கற்றவன், பேராசைக்காரன், நீசன், உபயோகமற்றவன் என்று நினைத்துச் சுயநலம் கொண்டான் நண்பர்கள் முறைக்காய்ச்சலில்* மந்திரப்பொருளைப்

* முறைக்காய்ச்சலின்போது கிருஷ்டிகழித்து அப்பொருளை நாற்சந்தியில் வைத்துவிட்டு அதை திரும்பிப் பார்க்காமல் வருவர். யாராவது அந்தத் திருஷ்டிப் பொருளைப் பார்த்துவிட்டால் அந்த முறைக்காய்ச்சல் அவர்களுக்கு வரும் என்றொரு நம்பிக்கை உண்டு

போன்று என்னை விட்டுவிட்டார்கள். மறந்தும் என் பக்கம் திரும்பிப்பார்க்கவில்லை. நான் பக்தியின்றி வேத மார்க்கத்தின் வெளியிலிருப்பதைக் கண்ட கலியுகம் என்னைச் சூழ்ந்துகொண்டிருக்கிறது. இதனால் ஹே தேவா! என்னைத் தேவர்களும் கைவிட்டுவிட்டார்கள், இதில் ஏதும் அநியாயமில்லை. ஏனெனில் அவர்களிடம் நான் குற்றங்கள் புரிந்திருக்கிறேன். நான் உனது திருநாமத்தின் நிழலில் வயிற்றை நிரப்பிக் கொண்டிருக்கின்ற போதிலும் உன்னுடைய தாசனென்று கூறிக் கொண்டிருக்கிறேன். இவ்வுண்மை உலகில் நன்கு பிரசித்தமாகி விட்டிருக்கிறது. நீயே மக்கள் உயர்ந்தவர், வேதம் உயர்ந்தது என்று சிந்தித்துப்பார்—வேதங்களில் கூறப்பட்டிருப்பதுபோல நான் செய்யவில்லை. ஆனால் உலகம் என்னை ராம—தாசன் என்று கூறுகிறது. ஆகவே உனக்கு எது சரியாகப்படுகிறதோ அதையே செய்வாயாக! எப்போதும் துளசிதாசனாகிய நான் மேலான நிலையை அடைவதாக இருந்தாலும் அது உன்னால்தான் முடியும். ஆகவே என்னை உனக்கு அர்ப்பணிக்கிறேன். நீ தாமதம் செய்தால் இந்த ஏழையின் நிலைமை நாளுக்குநாள் மோசமாகிவிடும். விரைந்து என்னை ஏற்றுக் கொள்வாயாக!

## 273

ஹே தலைவா! உன்னிடமின்றி வேறு யாரிடம் முறையிடுவேன்? வேறு யார் எனது காப்பாளர்? ஹே தீனபந்து! சேவகனிடம், நண்பனிடம், துன்புற்றோரிடம், அநாதைகளிடம் நட்புகொண்டவர் யார்? பல பாவிகள் பக்தோ தெய்வமோ எதுவுமின்றியே பிறவிப் பெருங் கடலைக் கடந்துவிட்டார்கள்.

ஹே ராமா! கருணையுடனோ, கோபத்துடனோ, உண்மையாகவோ, தவறுதலாகவோ, மறைமுகமாகவோ* அவர்களை நீ நோக்கினாய். அதனால்தான் அவர்கள் வாழ்க்கைக் கடலைக் கடக்க முடிந்தது. இதில் எப் பார்வை உனக்குச் சிறந்ததென்று தோன்றுகிறதோ அப் பார்வையினாலேயே விரைந்து என் பக்கமும் காண்பாயாக! இந்தத் துளசிதாசனை ஏற்றுக் கொள்வாயாக! இதில் தாமதம் செய்ய வேண்டாம். ஏனெனில் வாழ் நாளின் இறுதிக்கட்டம் வெகு அருகிலேயே இருக்கிறது.

## 274

ஹே தேவா! எங்கு போவேன்? இந்தத் துன்புற்றிருக்கும் ஏழைக்கு ஆதரவளிப்பவர் யார்? உன்னை ஒத்த தயாள குணமுடைய பகவான் யார் இருக்கிறார்கள்? எல்லா வகையிலும் பலமற்று அடைக்கலம் புகுந்தவர்களைத் தன் அடைக்கலத்தில் ஏற்றுக் கொள்பவர் யார்? தனம், குணம் உடையவர்களுக்கும் நற்சேவை செய்பவர்களுக்கும் வேறு பகவான் கிடைத்துவிடுவார்கள், ஆனால் செல்வமற்று, நற்குணமற்று, ஆசைகளை வளர்த்துக் கொண்டு, ஒவ்வொரு நாளும் ஸ்ரீரகுநாதரையே பரிகாசம் செய்துகொண்டு வந்திருக்கிறேன். நாவால் என் சொல்வேன்? நான் கூறியவையாவும் சமர்த்தரான பகவானுக்கு ஞாபகம் இருக்கிறது. இந்தத் துளசிதாசனை போன்ற அழுக்கடைந்த மனம் கொண்டவர்களுக்கு முக்காலங்களிலும் மூவுலகிலும் உன்னுடைய ஆதரவு மட்டுமே இருக்கிறது.

---

* பகவான் குகன் அரசன், அகலியா ஆகியவர்களைக் கருணையுடனும் வாலி, ராவணன் முதலானவர்களைக் கோபத்துடனும் சபரி, சுக்ரீவன், விபீஷணன் முதலியோரை அன்புடனும் நோக்கினார். ஆயினும் எல்லோரும் விடுதலையடைந்தனர்

## 275

தலைவனே! நான் வீடுவீடாகச் சென்று பற்களைக் காட்டி கால்களில் வீழ்ந்து எனது ஏழ்மையைப்பற்றிக் கூறினேன். உலகில் துன்பத்தையும் தோஷங்களையும் போக்கக்கூடிய சாமர்த்தியசாலிகள் பலரும் திக்குகளிலும் இருந்தனர். ஆனால் ஒருவரும் என்னுடன் பேசக்கூட இல்லை.

பாம்பு எப்படி தன் தோலை உரித்து விட்டுவிடுகிறதோ அதேபோன்று விஷ ஜந்துவான என்னைப் பெற்றவனேயே எனது பெற்றோர் என்னை விட்டு விட்டார்கள். இந் நிலையில் நான் யாரிடம் கோபப் படுவது? யாரைக் குறை கூறுடுவது? இவையாவும் எனது துர்பாக்கியத்தால்தான். எல்லோரும் என் நிழலைத் தொடுவதற்குக்கூட நாணமடைகிறார்கள். நான் கவலைப் படுவதைக் கண்ட சாதுக்கள் என்னிடம் 'கவலைப்பட வேண்டாம், ஸ்ரீராமனிடம் சரணடைந்தால் அவர் உன்னைப்போன்ற நீசர்கள் மற்றும் பாவ ஜீவன்களையும் தவறாமல் கவனித்துக் கொள்வார்' என்றனர். அன்பையும் விசுவாசத்தையும் கொண்டிருக்காவிட்டாலும் இந்தத் துளசிதாசன் உன்னுடையவனாகி உன் தாசனாகி சுகமடைந்துவிட்டேன். ஹே தலைவனே! உன் திருநாமத்தின் மகிமையையும் நற்குணங்களையும் நான் மறந்து விட்டிருப்பதை உணர்ந்து தற்போது வெட்கி தலை குனிந்து தாழ்பணிகிறேன்.

## 276

நான் என்னதான் செய்யவில்லை? எங்கு தான் போக வில்லை? யார் முன்னால்தான் தலை வணங்கவில்லை?

ஆனால ஹே ஸ்ரீராமா! நான தாசனாகாதவரையிலும் உலகில பதது திக்குகளிலும் மீண்டும், மீணடும் பிறபபெடுத்துத் துன்பத்தையே அனுபவிததேன. நின சேவகனாக இருந்தபோதிலும நான் ஆசையினால் அறப சுவாமிகளிடம முறையிட்டேன். ஒவ்வொரு வீடாகச் சென்று ஐயோ, ஐயோவென்று பலமுறை என் ஏழ்மையை முறையிட்டேன். ஆயினும் எனது திறநத வாயில சாம்பலும விழவிலலை ''—போஜனம எங்கே கிடைக்கப போகிறது' உணவும் ஆடையுமின்றிப பயித்தியக்காரனைப போன்று அங்குமிங்குமாக ஓடித்திரிநதேன, உயிரினும் மேலான மானத்தையுமவிடுதது துஷ்டாகளின முனனிலை யில என வெறும் வயிற்றை நிரபபினேன. ஹே தலைவா! பேராசையால ஆசையுடன அலைநதேன. ஆனால கைககு ஒன்றும அகப்படவிலலை. உண்மையாகக கூறவேணடு மானால், அநத அறபாகள் இநத வெட்கமற்றவனிடம எநத ஆட்டத்தைததான ஆட்டுவிககவில்லை. கண், காது, மனம் யாவும் அதனதன வழியில செலல ஆரமபித்து விட்டன. இவையாவும் எலலாவிடததிலும் எனனைப படுகுழியில வீழ்ததிவிட்டன. என நலனுககுகநதவரைத தேடித்தேடி தளர்ந்துவிட்டேன. யாரும் அகப்பட வில்லை. இறுதியில் உளளத்தில் தோலவியை ஒப்புக கொணடு இபபோது உனது திருவடிகளைச சரணடைய வநதிருககிறேன. ஹே தசரதரின் செலவனே! சாமர்த்திய சாலியாக நீதான இருக்கிறாய்; இதனால மூவுலகிலும உனது புகழ் பாடப்பட்டிருக்கிறது. துளசிதாசனாகிய நான் உனனை வணங்குகிறேன். என் பககம பார்ப்பாயாக! எனனை உனக்கு அர்ப்பணிக்கிறேன்; உனது புகழே எனனைக காப்பதாக வாக்களித்து அழைததிருககிறது!

## 277

ஸ்ரீ ராமா! என தலைவனே! உனனைத் தவிர என்னைக் காப்பாறற வேறு யார் இருககிறாாகள்? நான் கேட்டறிநததை உனககும் மறறவாகளுக்கும் கூறுகிறேன். யாராவது உன்னைவிடப பெரியவர்கள் இருபபார்களே யானால வேறு கோடு போட்டு விடு, யான் கூறியதை மறந்து விடு.

சரீரம் மறறும் ஆத்மாவின் சோககையால் ஏறபட்டிருக்கும் நடபுகள யாவும் மாயை என்னும் நூலினால் தைக்கப்பட்டவையே, ஏறபட்டவையே, ஆராயநது பார்த்ததில் இந்த நடபு யாவும் வாழை மரததைப போன்று சாரமறறதே எனறு அறியமுடிகிறது. வாழை மரத்தைப பார்க்கும்போது அதன நடுவில சதை இருப்பதாகத் தோன்றுகிறது. ஆனால உரிததுக கொணடே போகும் போது மட்டைகளதான் மிஞ்சுகினறன. அப்படிப்பட்டதே இவ் வாழக்கையின் உறவுகளும். இவர்களின் சேர்க்கை பொனனும், மாணிக்கமும் சோந்த ஆபரணத்தின் நடுவில் ஆங்காங்கு மதிப்பறற கணணாடித துண்டுகள ஒளிவீசுவதைப் போன்றதாகும். ஹே தநதையே! நீயே இநத ஏழையின விணணப்பததைப படிக்க வேணடுகிறேன. துளசிதாசனாகிய நான என் உள்ளத்தை நனகு ஆராய்ந்த பினபே இதை எழுதி இருக்கிறேன். இதனமீது முதலில உன் கைஎழுததைப போட்டுவிட்டு பின மற்ற ஐவரிடமும்* கேட்பாயாக!

---

* சீதாதேவி, ஆஞ்சநேயா, பரதா, லட்சுமணா மற்றும சத்ருகனா.

## 278

ஹே வாயுபுத்திரனே! ஹே சத்ருகணனே! ஹே பாதரே! ஹே லட்சுமணரே! எனனை உஙகளுக்கு அர்ப்பணிக்கிறேன், நீஙகள யாவரும அவரவர்க்குச் சமயம் கிடைக்கும்போது இநத ஏழையை நினைத்தீர்களே யானால மிகவும் மனமுடைநதிருககும் இநதத தாசனின அபிலாசைகள் நிறைவேறிவிடும். அரசவையில் நறசர்துக் களைபபறறி எல்லோரும் நலலவிதமாகவே கூறுவர். ஆனால தாங்கள இந்த ஆதரவறற ஏழையைபபறறிப பகவானிடம் கூறிவிட்டால் புணயத்தையும் புகழையும பெற்று பிரபுவின் கருணைககும் பாத்திரர்களாவீர். அதாவது இம்மையிலும் மறுமையிலும் நன்மையைப பெற்றவர்களாவீர். இதனால இநதப்பாவி துளசி தாசனைப்பறறி தாஙகள் சமயம் பார்த்து பிரபுவிடம் கூறிவிடுங்கள். சரணாகத வத்சல கிருபாலு ஸ்ரீராமரிடம் கலியுகத்திற்கு அடிமையான இந்த அடிமைத துளசி தாசனின அன்பின் நியமததைப்பறறியும் தெரிவித்து விடவும்.

## 279

ஆஞ்சநேயரின் மனத்தையும் பரதரின் விருப்பத்தை யும அறிந்த லட்சுணர், பகவானிடம் "ஹே தலைவா! இந்தக் கலியுகத்திலும் உமது தாசனொருவன் உமது திருநாமத்திடம் அன்பும் நம்பிக்கையும் கொண்டுள்ளார், பாருங்கள, அவருடைய கோரிக்கை மனுவும் வநதிருக் கிறது" என்று கூறினார். இதைக கேட்டுச் சபையிலிருநத யாவரும "ஆம் நாஙகளும அநதத் தாசனின் அன்பை அறிவோம்" என்று கூற ஆரம்பித்தனர். ஸ்ரீ ராமரும் "ஆம, அது உணமையே, எனக்கும் அவரைப் பறறிய

செய்தி ஜானகி மூலமாக தெரியவந்தது'' என்றார். எல்லோரும் அவரைப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அவர் துளசிதாசரின் கைகளைப்பற்றி தன்தாக்கிக் கொண்டார். இதனால் சந்தோஷித்து துளசிதாசரும் பகவானின் சரணங்களில் வீழ்ந்து தலைவைத்த உடனேயே ஸ்ரீ ரகுநாதர் அவருடைய கோரிக்கை மனுவின்மீது முத்திரையிட்டு அங்கீகரித்து விட்டார். இவையாவும் ஏழைகாப்பாளரான பிரபுவின் கிருபையே.



மங்களம்

